# தமிழியல் ஆய்வு மேம்பாடு


பதிப்பாசிரியர்

**முனைவர் இ. சுந்தரமூர்த்தி**

பேராசிரியர், தலைவர்

தமிழ் இலக்கியத்துறை

சென்னைப் பல்கலைக் கழகம்





சென்னைப் பல்கலைக் கழகம்

சென்னை

2001

# அணிந்துரை

காலந்தோறும் தமிழியல் ஆய்வுகள் பல்வேறுநிலைகளில் வளர்ந்துவருகின்றன. தொன்மை உரையியல் ஆய்வுநிலையினின்றும் அண்மைத் திறனாய்வியல் ஆய்வுநிலை வரை தமிழியல் ஆய்வுகள் பன்முகப் பாங்கினையுடையதாய் விளங்குகின்றன. தமிழியல் ஆய்வுக்குரிய தரவுகள் பலவும் தொடக்ககாலத்தில் பதிப்பியல் ஆய்வுகளாக அமைந்தன. பதிப்பு முன்னோடிகளின் அரியமுயற்சியால் பழந்தமிழ் நூல்கள் பலவும் அச்சுநூல்களாக மலர்ந்து நிலை பேறுற்றன. அச்சுநூல்களாக உருவாக்கம் பெறும்போதே மூலபாட ஆய்வுகள் தோற்றம் பெற்றன. செம்பதிப்புகளில் காணலாகும் சொல்லடைவுகளும் பொருளடைவுகளும் பிற்கால நுண்ணாய்வுக்கு வழிவகுத்தன.

பழந்தமிழ் நூல்களின் பொருளாய்விற்கு இத்தகைய அடைவுகளும் அகராதிகளும் துணைநின்றன. இவை பிற்காலத்தே நோக்கு நூல்களாகவும் உருவாயின. இன்றைய ஆய்விற்கு நோக்கு நூல்கள் மிக இன்றியமையாதனவாய் விளங்குகின்றன. இன்றைய தமிழியலாய்வுகள் சுவடி முதல் கணினிவரை பரந்துபட்ட ஆய்வு நெறிக்கு உட்படுத்தப் பெறுகின்றன. எனவே தமிழியல் ஆய்வு மேம்பாட்டிற்குரிய புதிய சிந்தனைகள் தோன்றுவது இயல்பே. இச்சிந்தனைகளின் விளைவாகத் தமிழ் இலக்கியத்துறை 1989-இல் தமிழாய்வு மேம்பாட்டுத் திட்டத்தினை மையமாகக் கொண்டு கருத்தரங்க மாநாடு ஒன்றினை மிகவிரிவான முறையில் திட்டமிட்டு நடத்தியது. தமிழகத்திலிருந்தும் பிற மாநிலங்களிலிருந்தும் தமிழறிஞர்கள் வருகை புரிந்து அரிய ஆய்வுரைகளை வழங்கினர். இவ்வாய்வுரைகளின் தொகுப்பே 'தமிழியல் ஆய்வு மேம்பாடு' என்னும் இந்நூல். பல்துறை அறிஞர்களும் பங்குபெற்று வழங்கிய இவ்வாய்வுக் கட்டுரைகள் பன்முகப்பாங்கின. இவற்றைத் தொகுத்து நூலாக வெளியிடும் முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கது.

கருத்தரங்கும் மாநாடும் நிகழ்ந்து பல ஆண்டுகள் ஆயினும் அரிய ஆய்வுப் பொருளைப் பெற்றுவிளங்கும் இத்தொகுதி, நூலாக வருவதில் பெருமகிழ்ச்சி. ஆய்வுரை வழங்கிய அறிஞர்பெருமக்களுக்கு எங்கள் நன்றி.

இத்தொகுதியை வெளியிடுவதில் பெரிதும் துணைநின்ற சென்னைப் பல்கலைக் கழகப் பதிப்புத்துறை இயக்குநர் பேராசிரியர் முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்கட்குப் பாராட்டுதல்கள்.

சென்னை
31.10.2001

பொன். கோதண்டராமன்
(பொற்கோ)
துணைவேந்தர்
சென்னைப் பல்கலைக் கழகம்

# பதிப்புரை

சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் இலக்கியத் துறை 1986-ஆம் ஆண்டு நடத்திய தமிழியல் ஆய்வு மேம்பாடு கருத்தரங்கில் படிக்கப்பட்ட அறிஞர்களின் கட்டுரைகள் தற்பொழுது நூலாக்கம் பெறுகிறது.

இத்தொகுப்பில் காணப்படும் கட்டுரைகளைத் தமிழ் மொழி ஆய்வு தொடர்பானவை; நோக்கு நூல்கள் குறித்தவை; மொழிபெயர்ப்புச் செய்திகளைக் குறித்த கட்டுரைகள்; சுவடியியல் ஆய்வுக்குரியவை; நாட்டார் மற்றும் கால வரைவுகள் குறித்த கட்டுரைகள் என வகைப்படுத்திக் கொள்ளலாம்.

தமிழ் மொழி ஆய்வு தொடர்பான கட்டுரைகள் தமிழ் மொழி வளர்ச்சி குறித்த பல்வேறு கருத்துக்களை முன்வைக்கின்றன. தமிழ் மொழி வளர்ச்சிக்கான வருங்கால ஆய்வுத் திட்டங்கள், மொழி ஆய்வில் தமிழ் அறிஞர்கள் மற்றும் மேலை நாட்டு அறிஞர்களின் பங்களிப்புகள், குறிப்பாக இந்தியாவில் தமிழில்தான் பேரகராதி உருவாக்கப்பட்டது என்கிற வரலாற்றுச் செய்தி, இவ்வுருவாக்கத்தில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையின் சாதனை போன்றன இப்பகுதியில் கூறப்படுகின்றன. தமிழ் மொழியானது கல்வி, ஆட்சி, தகவல் தொழில் நுட்ப ஊடகங்கள் ஆகிய அனைத்துத் தளங்களிலும் மேம்பாடு அடைவதற்கான வழிமுறைகள் காணப்பட வேண்டும் என்கிற செய்திகள் விளக்கப்படுகின்றன. தமிழ் மொழி ஆய்வில் இதுவரையிலும் பிற நாடுகளில் வாழ்கின்ற தமிழர்களுக்கான மொழிச் சிக்கல்கள் சரியான முறையில் அடையாளங் காணப்படவில்லை. இச்சிக்கல்களைத் தீர்ப்பதற்கு உலகம் முழுமையும் வாழும் தமிழ் ஆர்வலர்களை ஒருங்கிணைத்து மொழித் திட்டங்கள் உருவாக்கப் பெறல் வேண்டும்.

தமிழியல் ஆய்விற்குப் பெரிதும் பயன்படும் நோக்கு நூல்கள் (reference books) அதிகமாகத் தோன்றவேண்டியதின் தேவையைப் பல கட்டுரைகள் விளக்குகின்றன. ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு மொழிகளோடு ஒப்பிடும் பொழுது தமிழில் மிகவும் குறைவாகவே நோக்கு நூல்கள் தோன்றியுள்ளன.

தமிழ் வளர்ச்சிக் கழகம், தமிழ்ப்பல்கலைக் கழகம் ஆகியன உருவாக்கிய கலைக்களஞ்சியங்கள், வாழ்வியல் களஞ்சியங்கள், சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறை உருவாக்கிய தமிழ்ப் பேரகராதி ஆகியனவே இத்துறையில் சிறப்பாக வெளிவந்தவைகள் ஆகும். இன்னும் சில முயற்சிகள் அங்கொன்றும் இங்கொன்றுமாய் இத்துறை தொடர்பாய் நடந்து வருகின்றன. எனினும் தமிழில் நடைபெற வேண்டிய உயராய்வுகளுக்கு இம்முயற்சிகள் போதுமானவை அல்ல என்னும் கருத்தை இப்பகுதிக் கட்டுரைகள் விளக்குகின்றன. நோக்கு நூல்கள் குறித்துக் கட்டுரைகள் படைத்த அறிஞர்கள் விரிவுபடுத்தப்பட்ட பேரகராதி, பல்நோக்கு அகராதிகள், விரிவான கலைக்களஞ்சியங்கள், கலைசொல் அகராதிகள், நூலடைவுகள், பழந்தமிழ் நூல் விவர அட்டவணைகள், கையேடுகள், இடப்பெயர்த் தொகுப்புகள், மேலைநாட்டுத் தமிழர்களை மனதிற்கொண்டு செய்ய வேண்டிய நூல்கள் எனப் பல தளங்களில் செய்திகளை விரிவாகக் கூறுகின்றனர்.

தமிழ் இலக்கிய மேம்பாடுகள் குறித்த சிந்தனைகளும் பல கட்டுரைகளில் தரப்பட்டுள்ளன. அடிப்படையில் உலக நாடுகளோடு ஒப்பிடும் பொழுது தமிழர்கள் குறைந்த நேரத்தையே படிப்பதற்கு ஒதுக்குவது, சிறந்த நூல்களை வாங்குவதில் உள்ள சுணக்கம் ஆகியன இப்பகுதியில் எடுத்துக்காட்டப்படுகின்றன. சிறந்த படைப்பிலக்கியங்கள், திறனாய்வு நூல்கள் வெளிவருவதற்கான பதிப்பகங்களின் பெருக்கமும் புத்தகச் சந்தைகளின் பெருக்கமும் தமிழுக்குத் தேவைப்படுகின்றன. மேலும் தமிழ் மொழியின் உள் கட்டமைப்பு, எழுத்துச் சீர்திருத்தம் ஆகியன நேரிய முறையில் உருவாக்கப்பட்டு எளிமைப்படுத்தப்படுதல் வேண்டும். இணக்கமான நிலையில் தகவல் தொழில் நுட்ப ஊடகங்களின் வழியாகவும் தமிழியல் பரவும். இதுவரையிலும் படைக்கப்பட்ட தமிழ் மொழி இலக்கியங்கள் காய்தல் உவத்தலின்றித் திராவிட மொழிக்குடும்ப இலக்கியங்களோடும், பிற இந்திய மொழி இலக்கியங்களோடும், உலகத்தின் வளர்ச்சியுற்ற ஆங்கில மொழி இலக்கியங்களோடும் ஒப்பாய்வு செய்யப்பட்டு உண்மை அறிதலும் தமிழ் மேம்பாட்டிற்குரியதாகும். கருத்துத் தேடல்கள், பன்னாட்டுப் பார்வை, போலி ஆய்வாளர்களை அடையாளம் காணுதல், கருத்தாக்கங்களை உருவாக்குதல் ஆகிய நிலைகளிலும் இலக்கிய மேம்பாட்டிற்குரிய இடங்கள் சுட்டப்படுகின்றன.

தமிழ் நூல்களைப் பிற மொழிகளுக்கு எடுத்துச் சென்றது; பிற மொழிகளிலிருந்து பெறப்பட்ட தமிழ் மொழிபெயர்ப்புகள் குறித்த செய்திகள் ஆகியனவும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. தமிழில் இதுவரையிலும் மேற்கொள்ளப்பட்ட மொழிபெயர்ப்புப்பணிகள், மொழிபெயர்ப்பிலுள்ள குறைபாடுகள், சிறந்த மொழிபெயர்ப்புகளுக்காக நாம் செய்ய வேண்டிய வேலைகள் ஆகியன குறித்து மேலும் ஆராய்தல் வேண்டும். 'இரு மொழிப் புலமையாளர்கள், ஆங்கிலத்தில் போதுமான பயிற்சி பெற்ற தமிழ் அறிஞர்கள் குறைந்து வருவதின் காரணமாகத் தமிழில் சிறந்த மொழிபெயர்ப்புகள் அண்மைக்காலமாகக் குறைந்து வருகிறது' என்கிற செய்தி புள்ளி விவரங்களோடு விளக்கப்படுகின்றது. இதுவரையிலும் நாம் தமிழில் தோன்றிய சிறந்த இலக்கியங்கள் என்று கூறும் அனைத்தையும் உரிய முறையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கவில்லை. தமிழை உலக அரங்கில் கொண்டு செல்ல இம்முயற்சிகள் இன்றியமையாதன.

உலக அரங்கிலும் அனைவராலும் பேசப்பட வேண்டிய திருக்குறள் அதன் முழுமையான உயிர்ப்புத் தன்மையோடு இன்னமும் மொழிபெயர்க்கப்படவில்லை. இதைப் போலவே ஆழ்வார்களின் சில பாசுரங்கள், கம்பராமாயணம் ஆகியனவற்றின் மொழிபெயர்ப்புகள் நம் மொழியின் வளமையினையும் கவிஞர்களின் ஒப்பில்லா புலமைத் திறத்தையும் காட்டும் வண்ணம் ஆங்கில மொழியில் மொழியாக்கம் பெற வேண்டும். புதிய அறிவியல் முயற்சிகள், புதிய இலக்கிய வடிவங்கள் ஆகியன மேல்நாடுகளில் வரும் அதே காலகட்டத்தில் போதுமான அளவில் தமிழிலும் அறிமுகம் செய்ய வேண்டும்.

சுவடி குறித்த கருத்தாக்கங்கள் இரு கட்டுரைகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இன்னமும் பதிப்பிக்கப்படாத சுவடிகளைப் பதிப்பித்தல், பதிப்பு நெறிமுறைகளுக்கு முரணாகப் பதிப்பிக்கப்பட்ட நூல்களுக்குச் சிறந்த பதிப்புகள் கொண்டு வருதல், சிறந்த பதிப்பு நெறிமுறைகள் உருவாக்கப்படுதல் ஆகியன இப்பகுதியில் விளக்கப்படுகின்றன. நாம் இதுவரையிலும் முழுமையாக மேலைநாடுகளில் உள்ள சுவடிகளுக்கு விளக்க அட்டவணைகள் தயாரிப்பில் முன்னேறவில்லை. மேலும் சிறந்த பதிப்புகளை உருவாக்கும் பொழுது மேலை நாட்டுச் சுவடிகளை அறிஞர்கள் பெறுவதிலும் போதுமான எளிய வரன்முறைகள் இதுவரையிலும் உருவாக்கப் படவில்லை. சுவடியியல் பற்றிய

விழிப்புணர்ச்சிக்குக் கல்லூரி நிலைகளில் சுவடியியல் பாடத்திட்ட உருவாக்கம், சுவடியியல் குறித்த செய்திகள் நோக்கு நூல்களில் விரிவாக இடம் பெறுதல், சுவடி தொடர்பான பருவ வெளியீடுகளின் தேவை என்பன இப்பகுதியில் கூறப்படுகின்றன.

நாட்டார் வழக்காற்றியல் தொடர்பான ஆய்வுத் திட்டங்கள், பழந்தமிழ் இலக்கியத்தின் காலங்களைக் கணிப்பதில் கடந்தகால ஆய்வுகளின் போக்குகள், காலங்களைக் கணிப்பதில் இனி நாம் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகள் ஆகியன குறித்தும் கருதுதல் வேண்டும்.

தமிழாய்வின் பல்வேறு தளங்களில் பெறப்பட்ட அனைத்து ஆய்வுக் கட்டுரைகளும் தமிழுக்குப் புதிய கருத்துருவாக்கங்களை ஏற்படுத்தித் தந்துள்ளன.

தமிழியல் ஆய்வு மேம்பாட்டுக் கருத்தரங்கினை 1989-ஆம் ஆண்டில் பெரிதும் திட்டமிட்டுச் சிறப்புற நடத்தியவர் அப்பொழுது தமிழ் இலக்கியத் துறையின் தலைவராய் இருந்த பேராசிரியர் பொன். கோதண்டராமன் அவர்கள் ஆவர். தமிழகத்தின் பல்வேறு இடங்களிலிருந்தும் வந்து கலந்து கொண்டு கட்டுரைகள் அளித்த தமிழ்ப் பேராசிரியர்களின் ஈடுபாடு இங்கு நன்றியோடு குறிப்பிடத்தக்கதாகும்

எல்லா வகையானும் கருத்தரங்கை அப்பொழுது நன்கு திட்டமிட்டுச் சிறப்புற நடத்திய பேராசிரியர் பொற்கோ அவர்களின் பெருமுயற்சியால் இந்நூல் இப்பொழுது பல ஆண்டுகளுக்குப் பின் வெளிவருகின்றது. சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராய் விளங்கும் அவர்கள் இந்நூலுக்கு அரிய அணிந்துரையையும் வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். அவருக்குத் தமிழ் நல்லுலகத்தின் நன்றி என்றும் உரியதாகும்.

இந்நூலின் அச்சுப் படிகளைத் திருத்துவதில் துணை நின்ற டாக்டர். கி. ஜெயகுமார் அவர்கட்கு நன்றி. இந்நூலினை நன்கு அச்சிட்டு உதவிய செயின்ட் லூயிஸ் அச்சகத்திற்கு நன்றி.

சென்னை
25-10-2001

இ. சுந்தரமூர்த்தி

# பொருளடக்கம்

# மொழிவழி ஆய்வுகள்

பொன். கோதண்டராமன்

**முன்னுரை**

மொழிவழி ஆய்வுகளைப் பற்றி எண்ணிப்பார்க்கும்போது மனிதனுக்குப் பேசத் தெரிந்த காலத்திலிருந்தே மொழிவழி ஆய்வுகளின் கூறுகள் தோன்றின: தோன்றியுள்ளன என்று கொணடால் அது பிழையாகாது. சொற்களை ஒலிக்கும்போதும் தொடர்களை அமைக்கும்போதும், இது தவறு என்ற எண்ணம் தோன்றிய காலத்திலிருந்தே அவனுக்கு மொழிவழி ஆய்வுகள் தோன்றிவிட்டன என்று கொள்வதுதான் முறையாகும். ஆகவே மொழியைப் பொறுத்தவரையில் ஆராய்ச்சியும் பயிற்சியும் இணைந்தே நடந்திருக்கின்றன என்று கொள்ளலாம். இருப்பினும் இந்த மொழியாராய்ச்சியை மரபு வழி இலக்கண ஆய்வு, மொழி நூல் வழி ஆய்வு, மொழியியல் ஆய்வு என்று நாம் மூன்று நிலைகளாகப் பகுத்துக்கொள்ளுவது பொருத்தமாக இருக்கும்.

## *மரபுவழி இலக்கண ஆய்வு*

நமக்கு இன்று கிடைக்கின்ற மிகப்பழைய நூலாக விளங்கும் தொல்காப்பியத்தில் வியக்கத்தக்க பல மொழியாராய்ச்சிச் செய்திகள் கிடைக்கின்றன என்பதை நாம் இப்போது தெளிவாக உணருகிறோம். மொழியில் தோன்றும் ஒலியன்களைப் பற்றியும் ஒரு சொல்லோடு இன்னொரு சொல் சேருகின்ற சந்தி மாற்றங்கள் பற்றியும் தெளிவாக விளக்குகின்ற பகுதியை தொல்காப்பியர் எழுத்ததிகாரம் என்றும் சொல்லதிகாரம் என்றும் அமைத்திருக்கிறார். இந்த எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் மொழிநிலையைப் பற்றி அவர் மிக ஆழமாகவே ஆராய்ந்திருக்கிறார் என நாம் கொள்ள வேண்டும். தொல்காப்பியருடைய இலக்கணக் கொள்கையை முழுதாகப் பின்பற்றி இலக்கண நூல்கள் வளரவில்லை என்று கருத இடமிருக்கிறது என்றாலும் தமிழில் இலக்கண மரபுகள் அற்றுப்போய் விடவில்லை. தொடர்ச்சியாக இலக்கணங்கள் வளர்ந்து வந்திருக்கின்றன என்பதைப் பற்றி மட்டும் இங்கே நாம் குறிப்பிட்டுவிட்டு மொழிநூல்வழி ஆய்வுக்குச் செல்ல இருக்கிறோம். மரபிலக்கண வழி ஆய்வுக்கும் மொழிநூல் வழி ஆய்வுக்கும் இடைப்பட்ட நிலையில் வீரமாமுனிவர் அவர்கள் எழுதிய செந்தமிழ் கொடுந்தமிழ் இலக்கணங்களை நாம் கொள்ளவேண்டும்.

கொடுந்தமிழுக்குத் தனியே அவர் ஒரு இலக்கணம் அமைத்திருப்பது நம் ஆய்வில் குறிப்பிடததக்க ஒன்று. இதைப் பற்றியும் நாம் இங்கே விரிவாகப் பேச வேண்டியதில்லை. மரபுவழி இலக்கண ஆய்வில் இது ஒரு புதுமை என்ற அளவில் மட்டும் சுட்டிவிடடு நாம மேலே செல்லுகிறோம்.

## மொழிநூல் வழி ஆய்வு

மொழி நூல் வழி ஆய்வை மேற்கொண்டவர்களில் குறிப்பிடத்தக்கவராக ஜி.யு. போப் அவர்களை நாம் இங்கே சுட்டிக்காட்ட வேண்டும். திருக்குறளுக்கும் நாலடியாருக்கும் அவர் எழுதியுள்ள இலக்கணமும் சொல்லடைவுகளும் மொழிநூல் வழி ஆய்வுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளென்று கொள்ளத்தக்கன. எழுத்துச் சான்றுகளை அடிப்படையாகக கொண்டு மொழிநூல் ஆய்வுகள் எழுந்து வளர்ந்தன. அந்த வகையில் நாலடியார், திருக்குறள் முதலான நூல்களுக்கு இலககணமும் சொல்லடைவும் விளக்கங்களும் எழுந்தன. ஒரு நூலை முழுதாக விளங்கிக்கொள்ளுதற்கு அந்த நூலின் மொழி நடையைப் புரிந்து கொள்ள வேண்டிய தேவை இருக்கிறது. அந்த நூலிலுள்ள சொற்களுக்குச் சரியான பொருளை விளங்கிக் கொள்ள வேண்டிய தேவை இருக்கிறது அதன் பிறகுதான் அந்த நூலைச் சரியாக விளங்கிக்கொள்ள முடியும் என்ற நிலையில் மொழிநூல் வழி ஆய்வில் இத்தகைய இலக்கண ஆய்வுக்கும் சொலலடைவுக்கும் தனி இடங்கள் தரப்பட்டன. இந்த ஆய்வு மேலும் செம்மைப்படுத்தப்பட்ட நிலையில் சங்க இலக்கியங்கள் எல்லாவற்றுக்கும் சொல்லடைவுகள் உருவாக்கப்பட்டன சங்க இலக்கியங்களில் மொழிநடை பற்றித் தனிததனியே ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டன. அவையெல்லாம் இந்த நூற்றாண்டில் நிகழ்ந்த ஆய்வுகள் என்பதை நாம் இங்கே குறிப்பிட வேண்டும்.

சொல்லாராயச்சிகளையும் மொழியின் தோற்ற வரலாறுகள் பற்றிய ஆய்வுகளையும் மொழிநூல் வழி ஆய்விலேயே நாம் அடக்கிக் கொள்ள வேண்டும். நல்லூர் ஞானப் பிரகாச சுவாமிகளும் தேவநேயப் பாவாணர் அவர்களும் நிகழ்த்திய பல சொல்லாயவுகள் இந்த மொழிநூல் வழி ஆய்வில் அடக்கிக் கொள்ளத்தக்கன. மொழியின் தோற்ற வரலாறு பற்றி நடந்த பல ஆய்வுகளும் இந்த மொழிநூல் வழி ஆய்வில் சேர்த்து எண்ணத்தக்கன.

## மொழியியல் வழி ஆய்வு

இருபதாம நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் மொழியியல் ஆய்வுகள் விரிவாக வளரத் தொடங்கின என்று சொன்னால் அது குறையாகாது. மொழியியல் ஆய்வுகள் வேகமாக வளரத் தொடங்கிய நிலையில் மொழியைப்

பற்றிய ஆய்வும் விரிவு பெறத் தொடங்கின. மொழியியல் ஆய்வு தொடங்குவதற்கு முன்பே மொழி பயிற்றல் பற்றியும், தமிழைப் பிற மொழியாளர்களுக்குக் கற்பிக்கும்பொழுது எத்தகைய பாட நூல்கள் அமைய வேண்டும் என்பதைப் பற்றியும் இங்கே சிந்தனைகள் நிலவின. ஆனாலும் முழுமையாக மொழி அறிவைப் பயன்படுத்திப் பாடநூல்கள் ஆக்க வேண்டும் என்ற நிலை மொழியியலின் வளர்ச்சிக்குப் பிறகுதான் தோன்றி வளரத்தொடங்கியது என்பதை நாம் இங்கே தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.

மொழியியல் ஆய்வுக்கு முன்னோடியாக மொழி ஒப்பியல் இலக்கணம் இங்கே தோன்றி மிக நல்ல அளவுக்குச் செல்வாக்குப் பெற்றது. கால்டுவெல் அவர்கள் எழுதிய திராவிட மொழி ஒப்பிலக்கணம் மொழியாராய்ச்சி உலகில் மிக இன்றியமையாத இடத்தைப் பெற்ற ஒரு நூல். அவருக்குப் பின் எழுந்த பல்வேறு திராவிட மொழி ஆராய்ச்சிகளுக்கும் அந்த நூல் ஒரு அடித்தளமாகவும் பெருந்துணையாகவும் விளங்குகிறது என்பது மறுக்க முடியாத ஓர் உண்மை.

மொழியியல் இங்கே காலூன்றி வளரத் தொடங்கிய நிலையில் வண்ணனை மொழியியல், வரலாற்று மொழியியல், ஒப்பீட்டு மொழியியல், மாற்றிலக்கண மொழியியல் ஆகிய மொழியியல் கோட்பாடுகள் தெளிவாகக் கற்பிக்கப் பெற்றன. இந்த மொழியியல் கோட்பாடுகளைப் பயன்படுத்தி இங்கே பல்வகை ஆய்வுகள் வளரத் தொடங்கின. ஒரு பக்கம் திராவிட மொழிகளை ஒப்பிட்டு ஆராய்கின்ற ஆராய்ச்சி விரைந்து வளர்ந்தது. இந்த ஆராய்ச்சியில் டாக்டர் பர்ரோ, டாக்டர் எமனோ ஆகிய இருவரும் ஆற்றியுள்ள பங்கு மிகப் பெரிய அளவுக்கு ஆராய்ச்சிக்கு ஊக்கமளித்தது. இந்தியாவில் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்களும், சுனித்குமார் சட்டர்ஜி அவர்களும், பி.எச். கிருஷ்ணமூர்த்தி அவர்களும் இந்த ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட முயற்சியும் அக்கறையும் இந்த ஆய்வை மிகப்பெரிய அளவுக்கு வளர்த்தது என்று குறிப்பிட வேண்டும். திராவிட மொழிகளின் ஆராய்ச்சியைப் பொறுத்தவரையில் டாக்டர் பி.எஸ். சுப்பிரமணியம், டாக்டர் செ.வை. சண்முகம், டாக்டர் பட்டாச்சாரியா முதலான பல அறிஞர்கள் திராவிட மொழியியலில் பல்வேறு ஆய்வுகளை நிகழ்த்தி ஆய்வை விரிவு செய்தார்கள். டாக்டர் குமாரசாமி ராஜா, டாக்டர் கமில் சுவலபில் போன்றோர் நிகழ்த்திய ஆய்வுகள் இந்த ஆய்வுக்கு மேலும் வளம் சேர்த்தன. இந்த ஆய்வுகளைப் பற்றியெல்லாம்

நாம் இங்கே பட்டியல் இட்டுக் காட்ட விரும்பவில்லையென்றாலும் கால்டுவெல் காலத்தில் நிகழ்ந்த ஆய்வுக்கு மேலே இந்த ஆய்வு மிகப்பெரிய அளவுக்கு விரிவு பெற்று ஆழமாக வளர்ந்திருக்கிறது என்பதை நாம் இங்கே குறிப்பிடுகிறோம். வண்ணனை மொழியியல் கோட்பாடுகளைப் பயன்படுத்திப் பல்வேறு வட்டார வழக்குகளுக்கு இலக்கணங்கள் எழுதப்பட்டன. பல்வேறு நூல்களுக்குத் தனித்தனியே இலக்கணங்கள் எழுதப்பட்டன. இக்காலத் தமிழுக்கும் சிலசில பகுதிகளுக்குத் தனித்தனியே இலக்கணங்கள் எழுதப்பட்டுள்ளன. தமிழ் அறியாத பிற மொழியாளர்களுக்கு மொழியைக் கற்பிக்கும் நோக்கத்திலும் இலக்கணங்கள் எழுதப்பெற்றிருக்கின்றன.

இப்படி எழுதப்பட்ட இலக்கணங்களோடு தமிழறியாத பிற மொழியாளர்களுக்குத் தமிழ் மொழியைக் கற்பிக்கின்ற நோக்கில் பாடநூல்களும் உருவாக்கப்பெற்றுள்ளன. இப்படி உருவாக்கப் பெற்றுள்ள பாடநூல்களில் டாக்டர் குமாரசாமி ராஜா அவர்களும், திரு.துரைசாமி அவர்களும் சேர்ந்து எழுதிய பாடநூலும், டாக்டர் முத்துச்சண்முகம் எழுதிய பாடநூல்களும், டாக்டர் பொன். கோதண்டராமன் அவர்கள் எழுதிய பாடநூலும், டாக்டர் ஷிப்மன் அவர்கள் எழுதிய பாடநூலும், டாக்டர் தெய்வ சுந்தரம் அவர்களும், டாக்டர் கோபால் அவர்களும் சேர்ந்து எழுதிய பாடநூலும் குறிப்பிடத்தக்கன என்பதை இங்கே நாம் தெளிவாகச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

வரலாற்று மொழியியல் கோட்பாடுகளைப் பயன்படுத்திப் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் தமிழ் மொழி வரலாறு என்ற நூலைப் படைத்திருப்பது ஆய்வுலகம் தெளிவாக அறிந்த செய்தி. விரிவாக எழுதப்பட வேண்டிய தமிழ்மொழி வரலாற்றுக்கு இந்த நூல் ஒரு முன்னோடியாக விளங்கும் என்பதில் ஐயமில்லை. மிகப் பல அரிய செய்திகளைப் பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் மிகச் சுருக்கமாகவே எடுத்து ஆங்காங்குக் குறிப்பிட்டுச் சென்றிருக்கிறார். இந்த நூல் மிக விரிந்த அளவில் உருவாக்கப்பட வேண்டிய ஒரு பெரிய நூல். அதற்குரிய மூலங்கள் இந்த நூலில் அமைந்திருக்கின்றன என்பதை மகிழ்ச்சியோடு சுட்டிக்காட்ட வேண்டும்.

மாற்றிலக்கண மொழியியல் கோட்பாடுகளைப் பயன்படுத்தித் தமிழ் மொழிக்கு முதன் முதலாக முழுநிலையில் இலக்கணம் படைத்தவர் டாக்டர் ச. அகத்தியலிங்கனார். அதன்பிறகு தமிழ்மொழிக்கு முழுமையாக மாற்றிலக்கண கோட்பாட்டைப் பயன்படுத்தி டாக்டர் பொன். கோதண்டராமன் ஒரு

இலக்கணத்தை அமைத்தார். 1960 - களிலும் அதற்கு முன்பும் மாற்றிலக்கண மொழியியல் கோட்பாட்டைப் பயன்படுத்தி இலக்கணம் அமைத்தவர்களில் டாக்டர் ச. அகத்தியலிங்கனாரும், டாக்டர் இ. அண்ணாமலையும், டாக்டர் பொன். கோதண்டராமனும், டாக்டர் கி. அரங்கனும் குறிப்பிடத்தக்கவர்கள். இந்தியாவில் மாற்றிலக்கணக் கோட்பாட்டை அறிமுகப்படுத்தி வளர்த்த பெருமை டாக்டர் ச. அகத்தியலிங்கனாரையே சாரும்.

இவற்றோடு சமுதாய மொழியியல் கோட்பாடுகளைப் பயன்படுத்தி ஆங்காங்கே சில கட்டுரைகள் எழுந்துள்ளன. அப்படிப்பட்ட கட்டுரைகளை முறையாகவும் சிறப்பாகவும் எழுதிய பெருமை டாக்டர் செ.வை. சண்முகம் அவர்களையும், டாக்டர் சீனுவாச வர்மா அவர்களையும், டாக்டர் கி. கருணாகரன் அவர்களையும் சாரும் என்பதை நாம் இங்கே மகிழ்ச்சியோடு சுட்டிக்காட்ட வேண்டும்.

இப்படிப் பல்வேறு நிலைகளில் பல்வேறு மொழியியல் கோட்பாடுகளைப் பயன்படுத்தி ஆய்வுகள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன என்பது ஒருபுறமிருக்க முறையான நல்ல அகராதி தமிழுக்கு வேண்டும் என்ற தேவையை எல்லோரும் உணர்ந்திருக்கிறார்கள். அதற்குரிய பணிகளும் ஆங்காங்கே நடந்து கொண்டிருக்கின்றன. இருந்தாலும் இந்திய விடுதலைக்கு முன்னே உருவாக்கப் பெற்ற சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதிக்கு நிகராகவோ மேலாகவோ யாரும் இதுவரை எந்த அகராதியையும் உருவாக்கி நிறைவேற்றிவிடவில்லை என்பதை நாம் இங்கே நினைத்துப்பார்க்க வேண்டும். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதியில் குறைகள் இருக்கலாம். அந்தக் குறைகளை நீக்கி நாம் இதுவரை சிறப்பான அகராதிகளை உருவாக்கியிருக்க வேண்டும். ஆனாலும் இப்பொழுதாவது அந்த முயற்சிகள் நடக்கின்றனவே என்பதில் நாம் மகிழ்ச்சியடைகிறோம். அகராதிகளிலேயே பல்வேறு நிலையில் உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கும், கல்லூரி மாணவர்களுக்கும், பொதுமக்களுக்கும் பயன்படத்தகக்க வகையில் அகராதிகள் உருவாக்கப்பட வேண்டும். இந்தத் தேவைகளை உணர்ந்து இப்பொழுது அகராதிகள் உருவாகின்றன என்பது நமக்கு மகிழ்ச்சியளிக்கக் கூடியது.

இந்த ஆய்வுகளோடு அண்மைக்காலத்தில் மொழி வளர்ச்சி பற்றிய சிந்தனைகளும் மிகப்பெரிய அளவுக்கு இங்கே வளர்ந்து வருகின்றன. மொழி வளர்ச்சி பற்றிய சிந்தனைகளைப் பெருக்கிப் பல்வேறு கட்டுரைகளையும்

நூல்களையும் தமிழறிஞர்கள் படைத்து வருகிறார்கள். இப்படி மொழிவழி ஆய்வுகள் பல்வேறு நிலையில் பெருகி வளர்ந்திருக்கின்றன.

இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டு நாம் இந்த ஆய்வுகளைத் திருத்திப் பார்க்கும்பொழுது முறையாகத் திட்டமிட்டு ஒவ்வொரு பகுதியாக **ஆய்வுப் பணிகளை நிறைவேற்ற வேண்டும் என்ற நோக்கத்தில் நம் ஆய்வுகள் தொடங்கப்படவுமில்லை; நிறைவேற்றப்படவுமில்லை.** அதற்கேற்ற வகையில் திட்டமிட்டு ஆய்வுகளை முறையாக நிறைவேற்ற வேண்டிய ஒரு காலகட்டத்தில் நாம் இருக்கிறோம். அப்படி நிறைவேற்ற வேண்டிய ஆய்வுத் திட்டங்கள் பற்றி இங்கே மிகச் சுருக்கமாகக் குறிப்பிட விரும்புகிறோம்.

## மொழிவழி ஆய்வு மேம்பட நாம் என்ன செய்ய வேண்டும்?

இந்த நூற்றாண்டில் மொழி வழி ஆய்வுகள் ஏராளமாக நடந்திருக்கின்றன என்பதை நாம் ஓரளவுக்கு இங்கே பட்டியல்போட இயலாது என்றாலும் இன்றியமையாத செய்திகளை ஓரளவுக்கு இங்கே தொட்டுக்காட்டியிருக்கிறோம். மொழி வழி ஆய்வுகள் மேம்படுவதற்கு நாம் என்ன செய்ய வேண்டுமென்பதை இங்கே சுருக்கமாக எண்ணிப்பார்ப்பது நம் கடமையாகிறது. முன்பே **தொடங்கப்பெற்று மேலும் நாம் தொடர வேண்டிய ஆய்வுகள் எவையெவை என்பதைப் புரிந்துகொண்டு அந்த ஆய்வுகளை நாம் தொடரவேண்டும்.** தமிழ் மேம்பாட்டு நோக்கில் நாம் புதிதாகத் தொட வேண்டிய எல்லைகள் எவையெவை என்பதை விளங்கிக்கொண்டு புதிய எல்லைகளை நாம் தொட வேண்டும். மொழி சார்ந்த ஆய்வுகளால் உலக நோக்கில் புதிய கோட்பாடுகளை உருவாக்கி நாம் உலகுக்கு வழங்க இயலுமா என்பதை எண்ணிப் பார்த்துப் புதிய கோட்பாடுகளை உருவாக்க வேண்டும். மனித சமுதாய வரலாற்றில் நமக்குக் கிடைத்துள்ள அறிவியல் தொழில் நுட்ப வசதிகளுக்கு ஏற்றபடி நம்முடைய ஆய்வுகளிலும் புதிய அணுகுமுறைகளைப் பின்பற்ற வேண்டிய கட்டாயச் சூழல் நமக்கு ஏற்பட்டுள்ளது என்பதை நாம் மறந்துவிட முடியாது. அப்படிப்பட்ட புதிய அணுகுமுறைகளை நாம் பயன்படுத்தாமல் போனால் நம்முடைய ஆய்வில் நாம் பின்தங்கிவிட நேரிடும். இந்தப் புதிய சூழலை நன்றாக உணர்ந்து கொண்டு மொழிவழி ஆய்வுக்கு ஏற்ற புதிய அணுகுமுறைகளை நாம் பின்பற்றியாக வேண்டும். இப்படியெல்லாம் தொடரவேண்டிய ஆய்வுகளைத் தொடரவும், புதிதாகத் தொடரவேண்டிய ஆய்வு

எல்லைகளைத் தொடவும், புதிய கோட்பாடுகளை உருவாக்கவும், புதிய அணுகுமுறைகளைப் பயன்படுத்தவும் நாம் கற்றுக் கொண்டாக வேண்டும். இந்த நோக்கங்கள் எல்லாம் சரியாக நிறைவேற வேண்டுமானால் அதற்குச் சில அடிப்படைப் பணிகளை நாம் செய்துகொள்ள வேண்டியிருக்கிறது.

தொடரவேண்டிய ஆய்வுகள் எவை என்பதைத் தெரிந்து கொள்ளவும், புதிதாக நாம் தொட வேண்டிய எல்லைகள் எவை என்பதை ஊகித்து அறிந்து கொள்ளவும், புதிய கோட்பாடுகளை உருவாக்கவும், புதிய அணுகுமுறைகளைப் பயன்படுத்தவும் மிகவும் பெரிய அளவுக்கு உதவும் வகையில் நமக்குத் தகவல் மையம் ஒன்று உருவாக வேண்டும். அந்தத் தகவல் மையத்தில் நமக்குத் தேவையான தகவல்களைப் பெற்றுக் கொள்ளுகிற அளவில் அந்த மையம் அமையவேண்டும்.

இதுவரை தமிழகத்திலும் பிற நாடுகளிலும் நிகழ்த்தப்பெற்ற ஆய்வுகள் யாவும் ஒரு இடத்தில் கிடைக்கின்ற வகையில் அந்த ஆய்வுகள் தொகுக்கப் பெற்றுப் பாதுகாக்கப்பெற வேண்டும்.

புதிய கோட்பாடுகளை உருவாக்கவும் புதிய அணுகுமுறைகளைப் பின்பற்றவும் அறிஞர்களுக்கு வாய்ப்பளிக்கப்பெற்று இளைஞர்களுக்குப் பயிற்சியளிக்கத் தக்க வகையில் பயிற்சி மையம் ஒன்று நமக்கு அமைய வேண்டும்.

இவற்றின் பயனாகவெல்லாம் நாம் எத்தகைய பணிகளை நிறைவேற்றப் போகிறோம் என்பதைப் பற்றி இங்கே சுருக்கமாகக் குறிப்பிட நினைக்கிறேன். மிக நீண்ட நெடிய வரலாற்றைக் கொண்ட தமிழ் மொழிக்குப் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் 'தமிழ் மொழி வரலாறு' என்ற ஒரு நூலை உருவாக்கியிருக்கிறார். தமிழ் மொழி வரலாறு இன்னும் விரிவாக ஆராயப்பட வேண்டிய ஒன்று. இந்த ஆய்வு மேலும் தொடரப்படவேண்டும். உலக மொழி வரலாறுக்குக் கூடப் பயன்படுகிற வகையில் விளக்கமான தமிழ் வரலாறு உருவாக வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட வரலாற்றில் எழுத்துகளின் வளர்ச்சி, ஒலியன்களின் வளர்ச்சி, ஒலியன்களின் அமைப்பு முறையில் ஏற்பட்ட மாற்றங்கள், சொற்கள் தோன்றி வளர்ந்த வரலாறு முதலான பல்வேறு செய்திகள் பேசப்படுவதோடு தமிழ் மொழிக்கும் பிற மொழிக்கும் ஏற்பட்ட தொடர்பு முதலான தொடர்புடைய செய்திகளும் பேசப்படும்.

காலப்போக்கில் மனிதனுடைய கருத்துகளிலும் அவன் பயன்படுத்தும் கருவிகளிலும் மாற்றம் ஏற்படுவது போலவே மொழியிலும் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பது இக்காலத்தில் நன்றாக உணரப்பட்ட ஒரு செய்தி. தமிழ் மொழியில் ஏற்பட்டுள்ள மாற்றங்களுக்கு ஏற்ப இக்காலத் தமிழுக்கு ஒரு புதிய இலக்கணம் தேவை என்பதைப் பல்வேறு நிலைகளிலும் அறிஞர்கள் உணர்த்தியிருக்கிறார்கள். அத்தகைய இலக்கணம் சரியான முறையில் உருவாக்கப்பெற வேண்டும். அதற்குரிய முயற்சிகளும் ஆங்காங்கே நடந்து கொண்டிருக்கின்றன. இக்காலத் தமிழுக்கு இலக்கணம் அமைய வேண்டும் என்பது ஒரு புறமிருக்கத் தமிழ் மொழியையும் ஏனைய திராவிட மொழிகளையும் ஒப்பிட்டு ஒப்பு நோக்கிலும் உறழ்ச்சி நோக்கிலும் இலக்கணங்கள் உருவாக வேண்டும். பல்வேறு மொழிகளைக் கொண்ட இந்திய நாட்டில் வாழும் நாம் பன்மொழிச் சூழலுக்கு ஏற்ற வகையில் நம்மைத் தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஒரு மொழியாளர் மற்ற மொழியைக் கற்றுக் கொள்வதற்கு உதவும் வகையில் பல்வேறு உறழ்ச்சி இலக்கணங்கள் இங்கே உருவாக வேண்டும். அந்த வகையில் தமிழும் வங்காளமும், தமிழும் இந்தியும் என்று இவ்வாறு பல்வேறு உறழ்ச்சி இலக்கணங்கள் முறையாக உருவாக்கப்பட வேண்டும். இப்படிப்பட்ட உறழ்ச்சி இலக்கணங்கள் முன்பே ஆய்வாளர்களால் ஓரளவுக்கு உருவாக்கப்பட்டிருக்கின்றன என்றாலும் முறையாகச் செம்மைப்படுத்தப்பட்ட உறழ்ச்சி இலக்கணங்கள் இனித்தான் திட்டமிடப்பெற்று உருவாக்கப் பெறவேண்டும்.

இலக்கணங்களிலும் கூட மாணவர்களுக்கும் பொது மக்களுக்கும் பயன்படத்தக்க வகையில் இலக்கண நூல்கள் உருவாக வேண்டும். உயர் நிலை ஆய்வுக்குப் பயன்படத் தக்கவகையில் விரிவான இலக்கணங்களும் உருவாக்கப் பெற வேண்டும்.

இந்திய நாடு விடுதலை பெறுவதற்கு முன்பே சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி உருவாக்கப்பெற்றது. அதன்பிறகு அகராதிகளைப் பற்றி நாம் நிறைய பேசியிருக்கிறோம். ஆனால் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதிக்கு மேலாக, அதைவிட மேன்மையுடையதாக உருவாக்கப் பெற்றது என்று ஒரு அகராதியைக் கூட நம்மால் குறிப்பிட முடியவில்லை. செம்மையான அகராதி ஒன்றை உருவாக்கத் தமிழ்ப் பல்கலைக்கழகம் முயன்று கொண்டிருக்கிறது. இன்னும்

மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் பயன்படத் தக்கவகையில் பல்வேறு படிநிலை அகராதிகளை உருவாக்கவும் தமிழ்ப்பல்கலைக்கழகம் முயன்று கொண்டிருக்கிறது. இவற்றோடு மட்டுமல்லாமல் நாம் மேலே இலக்கணங்களுக்குக் குறிப்பிட்டது போலவே அகராதிகளிலும் இருமொழி அகராதிகளும் பன்மொழி அகராதிகளும் உருவாக வேண்டும். பன்மொழிச் சூழலில் வாழுகிற இந்திய மக்களுக்கு இப்படிப்பட்ட அகராதிகள் மிகவும் இன்றியமையாத தேவை என்றே சொல்ல வேண்டும். தமிழை மையமாக்கித் தமிழ்-மலையாளம், தமிழ்-தெலுங்கு, தமிழ்-கன்னடம் என்று இப்படிப் பல்வேறு இந்திய மொழிகளோடு தொடர்பு படுத்தி நாம் இருமொழி அகராதிகளையும் பன்மொழி அகராதிகளையும் இங்கே உருவாக்க வேண்டும்.

### பயிற்று நூல்கள்

தமிழ் மொழியைத் தமிழர்களுக்குச் சொல்லிக்கொடுக்கவும், தமிழ் மொழியைப் பிற மொழியாளர்களுக்குச் சொல்லிக் கொடுக்கவும் செம்மையான கருவி நூல்கள் நமக்குத் தேவைப்படுகின்றன. மொழியை முறையாகக் கற்பிக்கத் தக்கவகையில் பயிற்று நூல்கள் நமக்கு அமையும் பொழுதுதான் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் தமிழில் தவறில்லாமல் எழுதவும் பேசவும் வாய்ப்பேற்படும். தமிழைப் பிறமொழியாளர்களுக்கு எளிதாகக் கற்பிக்கும் வாய்ப்பு நமக்கு அமையும்பொழுதுதான் தமிழ்மொழி உலக நாடுகளுக்குப் பரவ நல்ல வாய்ப்புகள் அமைய முடியும். தேமதுரத்தமிழோசை உலகமெல்லாம் பரவவேண்டும் என்று விரும்புகின்ற நாம் அதற்குரிய வழிவகைகளையும் செய்யவேண்டும். மொழி கற்பித்தலில் பல்வேறு அணுகுமுறைகள் புதிதாக அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. புதிய அணுகுமுறைகளைப் பயன்படுத்திப் புது நெறியில் பயிற்று நூல்கள் உருவானால்தான் தமிழ்மொழி உலகமெல்லாம் பரவுகிற வாய்ப்பு ஏற்படும். அதோடு தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் தமிழை எல்லா நிலையிலும் எல்லா வகையிலும் செம்மையாகப் பயன்படுத்துவதற்கு வாய்ப்பு அமையும்.

தமிழ்மொழியை நாம் மற்றவர்களுக்குக் கற்பிக்கும்போது எப்படிப்பட்ட நூல்கள் வேண்டும் என்பதைப்பற்றி விரிவாகச் சிந்தித்திருக்கிறோம். ஆனால் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்குத் தமிழைக் கற்பிக்கும்பொழுது ஒரு சில புதிய சூழலில் புதிய சிக்கல்கள் ஏற்படுகின்றன என்பதை நாம் விரிவாகச் சிந்திக்கவில்லை. விளக்கமாகச் சொன்னால் காது கேளாதவர்,

தமிழ்மொழியைக் கற்கும்பொழுது அவருக்கு ஏற்படும் இடர்ப்பாடுகளைத் தீர்க்க நாம் பொருத்தமான முறையில் மொழியாராய்ச்சி. செய்து அவர்களுக்கு உதவி செய்திருக்கிறோமா என்று பார்த்தால் அத்தகைய முயற்சிகள் ஒன்றும் நடக்கவில்லை என்று கூறவேண்டும்; அல்லது மிகமிகக் குறைவாகவே நடந்திருக்கிறது என்று கூறவேண்டும். இதேபோலக் கண்பார்வை அற்றவர்களுக்கும் பேச்சுக் குறைபாடு உள்ளவர்களுக்கும் மொழிக்கல்வியில் எத்தகைய இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன என்பதை ஆராய்ந்து அந்த இடர்ப்பாடுகளைத் தீர்க்கத் தக்கவகையில் கருவிகளை நாம் உருவாக்க வேண்டும்.

எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற கோட்பாட்டை உருவாக்கிக் கொண்ட நாம் தமிழை எல்லா நிலையிலும் பயன்படுத்த விரும்புகிறோம் என்றாலும் தமிழ் அப்படிப் பயன்படாமல் இருப்பதற்குக் காரணம் என்ன என்பதை ஆராய்ச்சி செய்து அப்படித் தமிழ்ப் பயன்படுத்துதற்கு எதிராக இருக்கின்ற காரணங்களைத் தெளிவாக எடுத்து விளக்கியாகவேண்டும்.

அப்படித் தடையாக உள்ள தடைக்கற்களை நீக்குவதற்குரிய வழிமுறைகளையும் நாம் சிந்திக்க வேண்டும். இவற்றை ஆராய்ந்து, இருக்கிற உண்மைகளை எடுத்து வெளிப்படுத்துகிற அளவுக்கு நமக்குப் பொறுப்பு உண்டு. தடைகளை நீக்குதல், மொழிப் பயன்படுத்தத்தை விரிவாக்கம் செய்தல் ஆகிய இந்தப் பணிகளைச் செயற்படுத்துவதில் அரசுதான் தனிக்கவனம் காட்டவேண்டும். ஆனால் அவற்றிற்குரிய வழிமுறைகளை ஆராய்வதிலும் அவற்றைப் பற்றித் தெளிவாக எடுத்து விளக்குவதிலும் மொழியாராய்ச்சியாளர்களுக்கு இன்றியமையாத பங்கு உண்டு. அத்தகைய ஆய்வுகள் தொடர்ந்து நிகழ வேண்டும்.

மொழியாராய்ச்சியில் மொழித்துறைக்கும் பண்பாடு, இலக்கியம், சமுதாயம், உளவியல் முதலான பிற துறைகளுக்கும் மிக நெருக்கமான தொடர்பு உண்டு. இந்தத் தொடர்பைப் புரிந்து கொண்டு அதற்கேற்ற வகையில் மொழியும் பிற துறைகளும் இணைந்தும் இசைந்தும் நடத்த வேண்டிய ஆய்வுகளும் உண்டு. அத்தகைய ஆய்வுகளும் தொடரும்பொழுதுதான் ஆராய்ச்சியின் வலுவும் வளமும் சமுதாய மேம்பாட்டுக்கு உதவும் என்பதில் நமக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. நாம் இதுவரை விளக்கமாகக் குறிப்பிட்ட இந்த மொழி ஆய்வு மேம்பாடு பண்பாட்டு ஆய்வுக்கும்

இலக்கிய ஆய்வுக்கும் சமுதாய ஆய்வுக்கும் உளவியல் ஆய்வுக்கும் மிக இன்றியமையாத வகையில் உதவும் என்பதும் உறுதி.

மொழி ஆராய்ச்சியில் இவ்வளவு காலத்தில் இந்தப் பணியை நிறைவேற்றிவிடலாம் என்று திட்டமிட்டுக்கொண்டு உரிய அறிஞர்களையும் உரிய கருவிகளையும் கொண்டு குறிப்பிட்டபடி நிறைவேற்றக்கூடிய பணிகளும் உண்டு. அப்படியில்லாமல் தொடர்ந்து ஆராய்ச்சிக்குரிய நெறிகளை வகுத்துக்கொண்டு தொடர வேண்டிய ஆய்வுகளும் உண்டு. அப்படித்தொடர வேண்டிய ஆய்வுகளுக்குக் காலவரையறையை அமைக்க இயலாமல் போகலாம். இருப்பினும் காலத்தை வகுத்துக் கொண்டு நிறைவேற்றப்பட வேண்டிய பணிகள் விரைவில் நிறைவேற்றப்பட வேண்டும். அப்படி நிறைவேற்றப்படாமல் போனால் அது ஏதோ ஒரு வகையில் சமுதாய மேம்பாட்டிற்கும் நாட்டு முன்னேற்றத்திற்கும் இடையூறாக அமையும் என்பதைமட்டும் நாம் மறந்துவிடக்கூடாது. மொழி என்பது தனிமனிதனுக்கு மட்டும் பயன்படுகின்ற ஒரு கருவி அல்ல. சமுதாயம் முழுமையும் ஒட்டுமொத்தமாகப் பயன்படுத்துகின்ற இந்தக் கருவியில் தேவையான மேம்பாடுகளை நாம் செய்துகொண்டாக வேண்டும். அதற்கு உகந்த வகையில் மொழி ஆய்வும் தொடர்ந்து நிகழ வேண்டும். மொழி ஆய்வு மேம்பாட்டு நோக்கில் நாம் செய்ய வேண்டிய பணிகள் ஏராளமாக உள்ளன. அத்தகைய பணிகளை முறையாக நிறைவேற்றத்தக்க ஆய்வு அறிஞர்களும் இங்கே இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களைக்கொண்டு அத்தகைய பணிகளைத் திட்மிட்டு நிறைவேற்ற வேண்டும். தொடர வேண்டிய ஆய்வுகள் தொடர வேண்டும். இத்தகைய ஆய்வுகள் சிறப்பாகத் தொடரும் வகையில் தொடர்ந்து இளைஞர்களுக்குப் பயிற்சி அளித்து மேலும் மேலும் ஆய்வியல் அறிஞர்களை உருவாக்க வேண்டும். அந்த நோக்கில் நம்முடைய சிந்தனையும் செயலும் ஒருமுகப்பட வேண்டும்.

# தமிழ் மொழிப்பயன்பாட்டுக் களங்களின் விரிவாக்கம்

கி. கருணாகரன், இரா. பாக்கியலட்சுமி

ஒரு மொழியின் மேம்பாட்டுத்திட்டம் அல்லது வளர்ச்சி என்பது அம்மொழியின் தேவையை முன்னிட்டு மேற்கொள்ளப்படுவதல்ல. மாறாகச் சமுதாயத்தின் தேவை, சூழல், வாழ்வு, வளர்ச்சி, அச்சமுதாயம் சார்ந்துள்ள நாட்டு வளர்ச்சி போன்றவற்றை அடிப்படையாகவும், மையமாகவும் கொண்டு மேற்கொள்ளப்படுவதே இதுபோன்ற மேம்பாட்டுத் திட்டமாகும். மொழி முதன்மையாகவும் முக்கியமாகவும் ஒரு செய்திப் பரிமாற்றக் கருவிதான் என்றாலும் அதனைத் தனித்துப் பார்ப்பது அல்லது அணுகுவது இயல்பானதாகத் தோன்றவில்லை. இதற்குக் காரணம், மொழியானது அது சார்ந்திருக்கும் சமுதாயத்தின் வாழ்வோடும் வளர்ச்சியோடும் இரண்டறக் கலந்து நிற்பதே.

சமுதாயத்தில், இன்றைய சூழலில் மொழியின் பங்கு குறிப்பிடத்தக்க நிலையினைப் பெற்றுள்ளது கண்கூடு. சமுதாய இயக்கத்திற்கான பல்வேறு துறைகளில் களங்களில் மொழி பல்வேறு வகைகளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இவ்வாறு பயன்படுத்தப்பட்டு வரும் சூழலில் ஒரு சமுதாயம் பயன்பெறுவதோடு, சில பிரச்சினைகளையும் எதிர்கொள்கிறது. இன்றைய பல்வேறு வளர்ச்சிப் பணிகளுக்கு ஈடுகொடுக்கும் வகையில் மொழிப்பயன்பாட்டுக் களங்கள் அமைய வேண்டியது மிகவும் அவசியமாகிறது. இந்திய நாட்டின் பன்மொழி வழக்குச் சூழலில் மொழிப்பயன்பாடு செம்மையாக்கப்பட வேண்டியதும் தேவையாகிறது. அதற்கேற்ப மொழிப் பயன்பாட்டுக் களங்கள் விரிவுபடுத்தப்பட்டு, மொழிப் பயன்பாடு ஆற்றல் மிக்கதாகவும் நிலைபேறு பெற்றதாகவும் தன்னிறைவு கொண்டதாகவும் அமையச் சில வழிமுறைகளை மேற்கொள்ள வேண்டியது இன்றைய சமுதாய மொழியியற் சூழலில் மிகவும் இன்றியமையாததாகும்.

## மொழியமைப்பு - மொழிப்பயன்பாடு

மொழியமைப்பு - மொழிப் பயன்பாடு என்ற இரண்டும் கருத்துப் புலப்பாட்டில் வெற்றிக்கு மிகவும் தேவையானவை. ஒன்று சரியாக அமைந்து மற்றொன்று சரியாக அமையாவிட்டால் கருத்துப் புலப்பாட்டில் தெளிவும்,

நிறைவும் இருக்காது. அதனால் சமுதாயப் பயன் ஏதும் ஏற்படாது. ஆகவேதான் மொழியமைப்பை ஒரு பகுதியாகவும், மொழிப் பயன்பாட்டை மற்றொரு பகுதியாகவும் எடுத்துக் கொண்டு முழுமையான மொழி ஆய்வு இன்று மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இதனையே நாம் மொழி மேம்பாடு குறித்து விளக்கும்போதும் குறிப்பிட்டுச் சொல்ல முடியும். அதாவது, இவ்விரண்டு பிரிவுகளும் ஒருசேர வளர்ச்சி பெற்றால்தான் மொழி மேம்பாடு நடந்துள்ளதாகக் கருதப்படும்.

மொழியை எழுத்து மொழியாகவும், பேச்சு மொழியாகவும் பயன்படுத்துகிறோம். தமிழ்மொழி இரண்டினையும் பெற்று விளங்கும் மொழி. தமிழ் மேம்பாட்டினை விளக்க, அதன் பயன்பாடு மிகவும் முக்கியமாகிறது. மொழிப் பயன்பாடு குறையக் குறைய மொழி மேம்பாடு பாதிக்கப்படுகிறது. இன்று தமிழ்மொழி பெரும்பான்மையான துறைகளில் ஈடுபடுத்தப்பட்டுவரக் காண்கிறோம். குறிப்பாகக் கல்வி, ஆட்சி, செய்தித்தொடர்பு, அறிவியல் போன்றவற்றில் தமிழின் பயன்பாடு அதிகரித்து வருகிறது.

## மொழிப் பயன்பாட்டுக் களங்கள்

சமுதாயத்தின் பணிகளை நிறைவேற்றுவதில் மொழி பெரும்பங்கு வகிக்கிறது. ஒரு மொழிச் சூழலில் எல்லாச் சமுதாயப் பணிகளுக்கும் ஒரு மொழி மட்டுமே பயன்பாட்டில் ஈடுபடுத்தப்பட்டும், இருமொழி வழக்குச் சூழலில் இரண்டு மொழிகள் ஈடுபடுத்தப்பட்டும், பன்மொழி வழக்குச் சூழலில் இரண்டுக்கு மேற்பட்ட மொழிகள் ஈடுபடுத்தப்பட்டும் வருகின்றன. இவ்வாறு ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகள் பயன்பாட்டில் வந்தமையும்பொழுது அதன் பணிகள் ஒன்றாகவும், மாறுபட்டும் அமைகின்றன. இந்தியச் சூழலில் இத்தகைய நிலையை நாம் இன்றும் கண்டு வருகிறோம்.

விடுதலைக்கு முன்னர் இந்திய மொழிகளின் பயன்பாடு மிகக் குறுகிய அளவில் ஒருசில துறைகளில் மட்டுமே இருந்து வந்தது. மொழிக் கல்வியில் கூடப் பல இந்திய மொழிகளுக்கு உரிய இடம் தரப்படாத நிலை இருந்து வந்தது. தமிழ்மொழியும் இதற்கு விதிவிலக்காக இருக்கவில்லை. இந்திய மொழிகளின் மேம்பாட்டைப் பற்றிக் குறிப்பாக அவற்றின் பயன்பாட்டைப் பற்றிச் சிந்திக்க முடியாத சூழல் இருந்து வந்தது. இதற்கெல்லாம் அன்றைய அரசியல், சமுதாய மற்றும் பண்பாட்டுச் சூழல்களே பெருமளவில் காரணமாக

அமைந்தன. குறிப்பாகச் சொன்னால் இந்திய மொழிகளில் வளர்ச்சி குறித்துத் திட்டப் பணிகள் ஏதும் அன்றைய சூழலில் ஆக்கபூர்வமாகவும் அதிகாரப்பூர்வமாகவும் மேற்கொள்ளப்படவில்லை. மேற்கொள்ளப் பட்டவற்றிற்கும் அங்கீகாரமும் அளிக்கப்படவில்லை. பயிற்று மொழியாக, ஆட்சி மொழியாக, பரவல் செய்தித் தொடர்பு மொழியாக இவ்வாறு பல துறைகளிலும் அன்னிய மொழிகளே பயன்பாட்டில் ஆதிக்கம் செலுத்தி வந்தன. இதனால் தமிழ் போன்ற இந்திய மொழிகள் பயன்பாட்டில் முக்கியத்துவம் ஏதும் பெறாமலும் இதனால் வளர்ச்சி பெறாமலும இருந்துவந்தன.

விடுதலைக்குப் பின்னர் இந்திய மொழிகளின் வளர்ச்சி குறித்துச் சில திட்டங்கள் மேற்கொள்ளப்படலாயின. தமிழ்மொழியும் ஓரளவிற்கு ஒவ்வொரு துறையிலும் சிறிதுசிறிதாக ஈடுபடுததப்படலாயிற்று. இதேபோன்று ஆட்சித்துறையிலும், பரவல் செய்தித் தொடர்புத் துறையிலும் இன்றும் பல துறைகளிலும் தமிழின் பயன்பாடு ஓரளவிற்கு விரிவாக்கம் பெற்றது என்றாலும், வேகமாக இன்று ஏற்பட்டு வரும் அறிவியல் மற்றும் தொழில் நுட்ப வளர்ச்சிகளுக்கு ஈடுகொடுக்கும் வகையில தமிழ்வளர்ச்சி மேம்படுத்தப்படாத நிலை இருந்து வருகிறது. ஒவ்வொரு துறையில் பயன்பாட்டிற்காகவும் மொழிக் கொள்கைகள் இருந்து வந்தாலும் சிலவற்றில் பிரச்சினைகள் (எதிர்ப்பு-உடன்பாடு) தோன்றும் நிலையே அதிகமாகக் காணப்படுகிறது. மொழிக் கொள்கைகள் செயல்படுத்தப்படும் நிலையில் அவற்றை வெற்றிகரமாகச் செயல்படுத்துவதற்கேற்ற மொழிக் கூறுகளும் தரவுகளும் இல்லாதது குறையாகவே இருந்து வந்தன. ஆகவே, இன்றைய நிலை, தமிழின் வளர்ச்சிப் பாதையில் தளர்ந்த நிலையாகவே காணப்படுகிறது என்று சொன்னால் அது மிகையாகாது.

## மொழி மேம்பாட்டுக் களங்களும் விரிவாக்கமும்

மொழித் திட்டம் என்பதே மொழி மேம்பாட்டிற்காக மேற்கொள்ளப்படுவதுதான் என்றாலும் இதன் இறுதிக் குறிக்கோள் சமுதாய மேம்பாடும் நாட்டு வளர்ச்சியுமேயாகும். இதில் இரண்டு பிரிவுகள் உள்ளன. ஒன்று மொழிப்பயன்பாட்டிற்காக மொழி அல்லது மொழிகளை அல்லது மொழி வழக்குகளைத் தேர்ந்தெடுத்து, மொழிக்கொள்கைகளை உருவாக்கும் பிரிவு; மற்றொன்று உருவாக்கப்பட்ட மொழிக்கொள்கைகளை நடைமுறைப்படுத்தும் அல்லது செயல்படுத்தும் பிரிவு. அதாவது, பயன்பாட்டிற்குத் தேவையான எல்லாவகையான மொழிக் கூறுகளையும் உருவாக்கி - தொகுத்து அவற்றைப் பயன்படுததுவோரின் தேவைக்கேற்பத் தரும் பிரிவாகும். இதன்படி,

தமிழ்மொழியின் பயன்பாடு இன்று அமையத் தொடங்கியுள்ளது என்றாலும் மொழிக் கொள்கைகளில் நிலைத்தன்மை, குறிப்பாகச் சில சமுதாயப் பணிகளை மேற்கொள்ளும்போது காணப்படவில்லை என்றே குறிப்பிட வேண்டும். இதனால் தேவையான மொழிக்கூறுகளை உருவாக்கி, செயல்படுத்தும் பணியும் செம்மைப்படுத்தப்படவில்லை. ஆகவே, மொழி மேம்பாடு எதிர்பார்த்த முறையிலும் அளவிலும் அமையாத நிலை இருந்து வருகிறது. அதாவது வளர்ச்சிப் பணியில் தளர்ச்சி தோன்றியுள்ளது.

## மொழி மேம்பாட்டுத் திட்டம்

| | மொழிப்பயன்பாட்டுக் களம் | விரிவாக்கம் | மொழிக்கொள்கை | மொழிக் கூறுகளின் செம்மையாக்கம் உருவாக்கம் | உருவாக்க செம்மையாக்க முறைகள் |
|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 |
| 1 | கல்வி | பயிற்றுமொழி<br>உயர்கல்வி | தாயமொழிப பயன்பாடு | பாடநூல்கள்,<br>கலைச்சொல்<br>அகராதிகள்<br>பிறநூலகள்<br>எழுத்தமைப்பு,<br>பிறமொழிக் கூறுகளின் தமிழாக்கம்,<br>உலகம் தழுவிய குறியீடுகளின் பயன்பாடு. | தமிழாக்கம்,<br>பொதுமையாக்கம்<br>நிலைபேறாக்கம்<br>எழுத்துருவாக்கம் |
| 2 | ஆட்சி | நீதித்துறை<br>பொருளாதாரம்<br>- கல்வித்துறை<br>போன்ற<br>பல்துறைகள் | தாய்மொழிப பயன்பாடு | கலைச்சொல்லாக்கம்,<br>அகராதி,<br>உரைக்கோவை,<br>(அமைப்பு)<br>அறிவிப்புகள,<br>அறிக்கைகள்,<br>ஆணைகள்,<br>குறிப்புகள். | எளிமையாக்கம்<br>நிலைபேறாக்கம்<br>புதுமையாக்கம் |

3. வானொலி, தொலைக்காட்சி அறிக்கை, அறிவிப்பு விளம்பரம், இதழ்கள், உரை

தாய் மொழிப் பயன்பாடு

உரைக்கோவை, அமைப்பு, எளிய சொல் தொடர் அமைப்புகளில் பயன்பாடு, கலைச்சொல் விளக்கம், தொழில் சொற்களின் பயன்பாடு போன்றவை.

எளிமையாக்கம், நிலை பேறாக்கம், விரிவாக்கம்.

4. அறிவியல் தொழில் நுட்பம்

அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சிகள் (கல்வி, பரவல் செய்தித் தொடர்பு வாயிலாகத் தாய்மொழிப்பயன்பாடு)

கலைச்சொல் உருவாக்கம், உரைக்கோவை உருவாக்கம், பிறமொழிப் பயன்பாட்டு பாடநூல்கள், தரவுகள், பரவலாக்கத்திற்கான உரைக்கோவை விளக்கம் போன்றவை.

சொல் உருவாக்கம், நிலை பேறாக்கம், எழுத்துருவாக்கம், எழுத்துச் சீர்திருத்தம், சொற் பெருக்கம், எளிமையாக்கம், தழுவல்.

**முடிவுரை**

மொழிப் பயன்பாட்டுக் களங்களின் விரிவாக்கம் என்பது சமுதாயத் தேவையை முன்னிட்டு அமைவதே. தாய்மொழி மூலம் கல்வி பெறுதல், ஆட்சி செய்தல், கருத்துப் பரிமாற்றம் மேற்கொள்ளல் எனச் சமுதாயப் பணிகள் அமையும்போது, தாய்மொழியின் பயன்பாடு அதிகரிக்கிறது அல்லது விரிவடைகிறது. மொழிக் கொள்கைகளை மாற்றி அமைப்பதன் மூலம் இத்தகைய விரிவாக்கத்திற்கு அதிகார பூர்வமான ஒப்புதல் அளிக்கப்படுகிறது. இந்நிலையில் அம்மொழியானது பயன்பாட்டில் அதிக அளவுபங்கினைப் பெறுகிறது. அவ்வாறு பெறும் நிலையில் அம்மொழி தன்னகத்தே இல்லாத கூறுகளை உருவாக்கிக் கொள்ள வேண்டியதாகிறது. இத்தகைய உருவாக்கம சிறப்பாக அமைந்தால்தான் மொழிப் பயன்பாடு சமுதாயம் எளிதில் பயன்படுத்தும் வகையிலும் பயன்பெறும் முறையிலும் அமையும் நிலை ஏற்படும்.

மொழி மேம்பாட்டுக் களங்களை விரிவுபடுத்துவதன் வாயிலாக மட்டுமே மொழி மேம்பாடு அடைந்து விடாது. எடுத்துக்காட்டாக, அறிவியல் போன்ற

துறைகள் இளங்கலை, அறிவியல் பட்ட வகுப்புக்களில் இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னரே தமிழைப் பயிற்றுமொழியாகக் கொண்டு புகுத்தப்பட்டிருந்தாலும், இன்றும் இதில் நிலைத்தன்மை ஏற்படவில்லை. இதன் தொடர்ச்சியாக முது அறிவியல் மற்றும் உயர் கல்வியில் தமிழானது பயிற்று மொழியாக ஆக்கப்படாத நிலையே இருந்து வருகிறது. அதாவது உயர்கல்வி மொழியாகத் தமிழ் மேம்பாட்டையடையவில்லை, அவ்வப்போது மேற்கொள்ளப்பட்ட மொழிக்கொள்கை மாற்றங்கள் இதற்கு வழி வகுக்கவில்லை. ஆகவே, உறுதியான மொழிக் கொள்கைகள், அவற்றைச் செயற்படுத்துவதற்கான தெளிவான வழி முறைகள், கோட்பாடுகள் போன்றவை செம்மைப்படுத்தப்படுவது மிகவும் தேவையாகிறது. அவ்வாறு செய்த பின்னர், உருவாக்கப்பட்ட மொழிக் கூறுகள், தகவல்கள் போன்றவை பரவலாக்கம் செய்யப்பட்டு, அவை யாவும் சமுதாய ஒப்புதல் பெறும் நிலையை ஏற்படுத்த வேண்டும்.

# நோக்கு நூல்களின் தேவை

கி. அரங்கன்

சுதந்திரத்திற்குப் பிறகு-குறிப்பாக மொழிவழி அடிப்படையில் மாநிலங்கள் அமைக்கப்பட்ட பிறகு-இந்நாட்டில் மொழிகளைப் பல்வேறு துறைகளில் பயன்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. மொழி வளர்ச்சி என்பது பல்வேறு வகைப்பட்ட நடவடிக்கைகளை உட்படுத்தியது. அவற்றுள் முக்கியமானது மொழியின் பயன்பாட்டை விரிவாக்குவது. அதாவது சமுதாயத்தின் எல்லாச் சூழல்களிலும் பயன்படுத்தும் நிலையில் மொழிப்பயனை வளர்ப்பது. குறிப்பாக ஆட்சி, கல்வி, தகவல் தொடர்புச் சாதனங்கள், நீதிமன்றம் ஆகிய துறைகளில் தங்கள் மொழியைப் பயன்படுத்துவதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்வது.

ஜனநாயகம் என்பது மக்கள் தங்கள் வாக்குரிமையைப் பயன்படுத்துவது மட்டுமல்ல; மக்கள் தங்கள் நாட்டின் சமூக-பொருளாதார-அரசியல் நடவடிக்கைகளில் அவர்கள் ஏற்கின்ற பங்கையும் பொறுத்தது. ஒரு நாட்டின் மக்களுடைய மொழிக்கு அளிக்கும் பங்கு என்பது அவர்களை நாட்டின் சமூக-பொருளாதார மேம்பாட்டில் ஈடுபடுத்துவதற்குரிய செயலாகும். ஆகையால் சுதந்திரமடைந்த ஒரு ஜனநாயக நாட்டில் அந்நாட்டு மொழிகள் எல்லாத் துறைகளிலும் எல்லா நிலைகளிலும் பயன்படுத்தப்படுவது மிக முக்கியமான ஆரம்பம். சமுதாய வளர்ச்சிக்கு மொழி பெரும்பங்கு அளிக்கக்கூடியது. சமூக வளர்ச்சிக்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் திட்டமிடுவதைப் போன்று, மொழி வளர்ச்சிக்கும் திட்டமிடுகின்ற துறை இன்று வேகமாக மொழியியலின் பகுதியாக வளர்ந்துகொண்டு வருகின்றது.

மொழி வளர்ச்சிக்கு நாம் எடுக்கின்ற பல்வேறு திட்டங்களில் நோக்கு நூல்களின் (Reference Works) தயாரிப்பும் முக்கிய பங்கு வகிக்கிறது என்பதை இங்கு நான் வலியுறுத்த விரும்புகின்றேன். நோக்கு நூல்களின் தேவையை நாம் இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் பிரிவு பொதுமக்களின் தேவையை நிறைவேற்றுவது; இரண்டாவது பிரிவு மொழி ஆய்வின் வளர்ச்சிக்கு உறுதுணையாகவும் கருவியாகவும் நிற்பது.

தமிழில் பல்வேறு கிளைமொழிகளை நாம் பயன்படுத்துகிறோம். இருப்பினும் தமிழைத் திட்டமிட்டு வளர்க்க வேண்டுமென்று நாம்

நினைக்கும்பொழுது ஒரு குறிப்பிட்ட மொழிவழக்கைத் (Variety) தேர்ந்தெடுத்து வளர்க்க வேண்டும். தமிழைப் பொறுத்தவரை மொழிவழக்கைத் தேர்ந்தெடுப்பதில் நமக்கு அதிகமான சிக்கல் இல்லை. தமிழில் எழுத்து வழக்கும் பேச்சுவழக்கும் தனித்தனித் தன்மை கொண்டவை. பேச்சு வழக்கில் பல்வேறு கிளைமொழிகள் உள்ளன என்று நாம் முன்பே குறிப்பிட்டுள்ளோம். தமிழின் எழுத்து வழக்கு ஈராயிரம் ஆண்டுகளாக இலக்கியம், தத்துவம் ஆகிய பல்வேறு துறைகளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. தற்காலத்திலும் எழுத்து வழக்கையே நாம் பயன்படுத்தி வருகிறோம். ஆகையால் தமிழ்மொழியை வளர்க்க மேற்கொள்ளும் திட்டமிடலுக்கு எழுத்து வழக்கையே நாம் தேர்ந்தெடுத்து வளர்ச்சிக்குரிய நடவடிக்கைகளில் ஈடுபடுகிறோம்.

பொதுமக்களை மையப்படுத்தி நோக்கு நூல்களின் தேவையை ஆராயும்பொழுது சில நூல்கள் முதன்மை பெறுகின்றன. அகராதிகள், கலைக்களஞ்சியங்கள், இலக்கணங்கள் ஆகியவை முக்கிய இடம்பெறுகின்றன என்பதை நான் வலியுறுத்த வேண்டிய தேவையில்லை. இவற்றுள் அகராதிகள் ஈர்த்த கவனத்தை இலக்கணங்களும் கலைக்களஞ்சியங்களும் ஈர்க்கவில்லை. பொதுமக்களுக்கு மிகவும் அடிப்படையான நோக்கு நூல்களில் அகராதிகள் மையஇடத்தைப் பெறுகின்றன. அகராதியின் தொடக்கம் அருஞ்சொற்களுக்குப் பொருள் அளிப்பது என்பதாக இருந்தது. இது இலக்கியத்தையும் மற்றைய நூல்களையும் புரிந்துகொள்ள அடிப்படைத் தேவையாய் அமைந்தது.

இலக்கியத்தைப் புரிந்துகொள்ளுதலில் சிரமம் தோன்றியதற்குரிய காரணங்களுள் மொழி மாற்றம் ஒன்று. காலஓட்டத்தில் சொற்களின் பொருள் மாறுபடுகிறது. மொழி மாறுபட்ட நிலையில் உள்ள ஒரு சமுதாயத்திற்குத் தன்னுடைய முந்தைய கால கட்டத்தில் உருவான இலக்கியத்தைப் புரிந்துகொள்ளுதலில் சிக்கல் ஏற்பட்டது. இதை நிவர்த்தி செய்ய ஏற்பட்ட கருவிகளுள் ஒன்று கடினமான சொற்களுக்குப் பொருள் கூறும் நூல். இதன் அடிப்படையில்தான் தொல்காப்பிய உரியியலைத் தமிழில் தோன்றிய அகராதிகளின் முன்னோடி என்றும் நாம் குறிப்பிடுகின்றோம். இது இலக்கியத் தேவையின் நோக்குச் செயற்பாட்டை நிறைவேற்றுகிறது. இலக்கியப் புரிதலிலிருந்து இலக்கியப் படைப்பிற்கும் கருவியாக எழுந்த நிலையில் நிகண்டுகள் தோன்ற ஆரம்பிக்கின்றன. பொருளின் வகைப்பாட்டு அடிப்படையில் தோன்றிய நிகண்டுகள் இலக்கியப் படைப்பாளிகளுக்கு நோக்கு நூல்களாய்

அமைந்தன. நூல்கள் மனப்பாடம் செய்வதற்குரிய முறையில் வடிவம் கொடுக்கப்பட்டதால் செய்யுள் வடிவில் சொற்கள் தொகுத்துக் கொடுக்கப்பட்டன. இதனை இங்கு நாம் விரிவாகக் கூறவில்லை.

நிகண்டுகளின் வடிவம் பொருண்மை வகைப்பாட்டையும் மனப்பாடம் செய்தலையும் விடுத்து அகரவரிசையில் தொகுக்கப்பெற்றதும் அவற்றின் செயற்பாடு நோக்கு நிலைக்கு வந்துவிடுகிறது. கி.பி. 1594-இல் சிதம்பர இரேவண சித்தரின் நிகண்டு அகராதியாக உருவெடுத்தது. இதில் சொற்பொருளும் அகர நிரலும் இடம்பெற்றுத் தமிழ் அகராதி வரலாற்றில் ஒரு திருப்பு மையமாக அமைந்தது. தமிழ் அகராதி வரலாற்றையும் அதில் நிகண்டுகளின் வகைப்பாடுகளைப் பற்றியும் நாம் இங்கு விரித்துக் கூறப்போவதில்லை. தமிழ் அகராதி வரலாற்றின் அடுத்த மைல் கல்லாக வீரமாமுனிவர் அவர்களால் கி.பி. 1732-இல் படைக்கப்பட்ட சதுரகராதியைக் குறிப்பிடுவார்கள். இலக்கியவாதிகளுக்கு மட்டும் பயன்படக்கூடிய நிலையிலிருந்து பொதுமக்களுக்கும் பயன்படக்கூடிய செயற்பாட்டு நிலைக்கு இவ்வகராதியின் தோற்றம் இட்டுச்செல்கிறது.

அகராதிகளின் செயற்பாடு நோக்கீடாக இருந்தாலும் எத்தகைய மக்கள் இவற்றைப் பயன்படுத்துகிறார்கள் என்பதைப் பொறுத்து இவற்றின் தன்மையும் வகையும் மாறுபடும். சான்றாக, தமிழைத் தாய்மொழியாகப் பயில்கின்றவர்களைக் கருத்தில் கொண்டு உருவாக்கும் அகராதிக்கும் தமிழை இரண்டாம் மொழியாகப் பயில்கின்ற அயல்நாட்டவர்களைக் கருத்தில் கொண்டு உருவாக்கும் அகராதிக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. தமிழை இரண்டாம் மொழியாகக் கற்கின்றவர்களுக்கும் பொருள் விளக்கம் அவர்களுடைய மொழியின் சொற்கள் மூலம் பெறலாம். குறைந்தது இருமொழியின் சொற்களாவது இடம்பெற வேண்டும். இது இருமொழி அகராதி என்று கூறப்படும். நம் மொழியிலும் இத்தகைய அகராதிகள் தோன்றும் சூழலை ஆராயும்பொழுது இது புலப்படும். அந்நியர்கள் தமிழைக் கற்கும்பொழுது அல்லது நாம் இன்னொரு அயல்மொழியைக் கற்கும்பொழுது இத்தகைய அகராதிகள் மொழிகளில் தோன்றுகின்றன. தமிழில், பெர்சிவல் (Percival 1877), ஃபெபிரிசியல் (Fabricius 1933), வின்ஸலோ (Winslow 1852), போப் (Pope 1905), அ. சிதம்பரநாத செட்டியார் (A. Chidambaranatha Chettiar 1961-65) ஆகிய அறிஞர்களால் உருவாக்கப்பட்ட அகராதிகள் நாம் மேலே குறிப்பிடப்பட்டவர்களுக்கு நோக்கு

நூல்களாக அமைகின்றன. இவ்வகராதிகள் மேலை நாட்டவர்களாலும் மேலை நாட்டு மொழிகளின் தாக்கம் உள்ளவர்களாலும் உருவாக்கப்பட்டதால் அகராதிகளின் வடிவை இவை பெற்றன. இங்கு மொழிகற்றல் (Language Learning) அடிப்படை நோக்கமாக இருக்கிறது. இருமொழிய அகராதிகள் அனைத்திற்கும் மொழி கற்றல் மட்டும் நோக்கமாக அமைய வேண்டுமென்பது இல்லை. தமிழில் இருமொழிய அகராதிகளினுடைய வளர்ச்சி நிலையின் முழுமைக்குச் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ் லெக்சிகனை (1926-1938) எல்லையாகக் கூறலாம். இவ்வாறு கூறுவதற்குக் காரணம் தமிழில் இதை மீறிய வளர்ச்சிநிலையைப் பிரதிபலிக்கும் அகராதிகள் இன்னும் வெளிவரவில்லை.

மொழிகற்றல்/மொழி கற்பித்தலை நோக்கமாகக் கொள்ளும்பொழுது மொழி முழுமையும் மனத்தில் கொண்டு அகராதி உருவாக்குவதோடு மொழியின் குறிப்பிட்ட இலக்கணக் கூறுகளையுடைய சொற்களுக்கு மட்டும் அகராதி உருவாக்குதல் உண்டு. மொழியைக் கற்பிக்கும் பொழுது பிரச்சினைகளுக்குரிய இலக்கணப் பகுப்பின் சொற்களை மையப்படுத்தி அகராதிகளை உருவாக்கலும் உண்டு. இதற்கு உதாரணமாக ராஜாராமின் அகராதியைக் குறிப்பிடலாம். இத்தகைய அகராதிகளின் வடிவம் வேறுபட வாய்ப்புண்டு.

தமிழை முதல்/தாய்மொழியாகப் பயில்கின்றவர்களுக்கு உருவான அகராதிகளின் தன்மையையும் சுருக்கமாக இங்கு விளக்குவோம். இலக்கியப் பயிற்சியும் மொழிப்பயிற்சியும் வெவ்வேறான இயல்புகள் கொண்டவை. இருப்பினும் இலக்கியப் பயிற்சியின் ஆழம் என்பது மொழிப்பயிற்சியின் வளர்ச்சிக்கு இட்டுச்செல்லும் என்பதில் உண்மை இருக்கிறது. மொழிப் பயிற்சியின் வளர்ச்சி என்பது மொழியை எவ்வித சிரமமுமின்றி எளிமையாகவும் ஆற்றலோடும் பயன்படுத்தக்கூடிய திறன். ஆனால் இலக்கியப் பயிற்சியின் எல்லையைவிட மொழிப்பயிற்சியின் எல்லை விரிந்தது. அகராதிகளும் இலக்கியப் பயனை மையமாகக் கொண்டிருந்த நிலையிலிருந்து மொழிப்பயனை மையமாகக் கொண்டு உருவாகத் தொடங்கின. மதுரைத் தமிழ்ச்சங்கப் பேரகராதி போன்றவை இலக்கியப் பயனை மையமாகக் கொண்டுள்ளது என்று கூறினாலும் மொழி வரலாற்றின் ஆய்வுக்கு இது பெருந்துணையாக நிற்கிறது. உ.வே.சா. அவர்களுடைய பதிப்பில் கொடுக்கப்பட்ட அருஞ்சொற்பொருளும் எடுத்துக்காட்டுகளும் பின்னால் தோன்றிய சொல்லடைவு

(Index) தொடரடைவு (Concordance) ஆகியவற்றிற்கு முன்னோடியாகவும் தரவாகவும் அமைந்தன. மொழிப்பயிற்சி என்பதை மையப் பொருளாக வைத்து நோக்கும்பொழுது ஒருமொழி அகராதிகள் (தமிழ்-தமிழ்) பல வெளிவந்துள்ளன. ஆனால் இன்றைய நிலையில் வளர்ந்துள்ள அகராதிக் கலையின் முன்னேற்றம் எந்த அளவிற்கு அகராதி உருவாக்கலின் தரத்தை உயர்த்தியிருக்கிறது என்பது கேள்விக்குறியாகவே இருக்கிறது. பள்ளி நிலையிலும் அகராதியை நோக்குகின்ற பயிற்சி நமக்குக் கொடுக்கப்படுவதில்லை. தாய்மொழியைப் பயில்வதற்கு அகராதி தேவையில்லை என்பது நம்முள் ஆழமாகப் பதிந்துவிட்டது. மேலும் அகராதி என்பது பொருள் தெரியாத சொற்களுக்கு மட்டும் பார்க்க உதவக்கூடிய ஒரு நூல் என்பதுதான் நம்முடைய மனப்பாங்கு. ஒரு சொல்லைப் பற்றிய ஒலியியல், தொடரியல், பொருண்மையியல் கூறுகள் அனைத்தையும் கொடுக்கக்கூடிய நூல் என்பது தெளிவுபடுத்தப்படவில்லை. இலக்கணத்தால் விவரிக்கப்படும் மொழியின் பொதுமைக் கூறுகளை விடுத்துச் சொல்லுக்குரிய எல்லாவிதமான தனிக்கூறுகளையும் அகராதி வழங்குகிறது. அகராதிகளும் இலக்கணங்களும் அம்மொழியின் அமைப்பைப் புரிந்துகொள்ள மட்டுமின்றி மொழியை உருவாக்கும் திறனையும் வளர்க்க இவை இன்று உதவுகின்றன. இந்த நோக்க மாற்றத்தால் அகராதிகளின் பரிமாணங்கள் விரிவடைகின்றன.

தமிழைத் தாய்மொழியாகக் கற்கும் ஆரம்ப நிலையிலேயே, அகராதியைப் பயன்படுத்தும் பயிற்சியைப் பள்ளிகள் அளிக்கவேண்டும். அவ்வாறு பயிற்சி கொடுக்க இளம் பிள்ளைகளுக்கு ஏற்ற நிலையிலும் அகராதிகள் உருவாகவில்லை. ஆங்கிலத்தை இரண்டாம் மொழியாகக் கற்கும்பொழுது கல்லூரி நிலையிலாவது அகராதிகளைப் பயன்படுத்தும் பழக்கத்தைப் பார்க்கிறோம். தமிழை முதல் மொழியாகப் பள்ளியில் பயிலும் மாணவர்கள் பயன்படுத்தும் முறையில் அகராதிகளின் தன்மையும் வடிவும் உருவாக வேண்டும். தமிழை இரண்டாம் மொழியாகப் பயிலும் அயல் நாட்டவர்களுக்கும் உதவும் வகையில் அகராதிகள் உருவாக வேண்டும். தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கும் தமிழை இரண்டாம் மொழியாகக் கற்கின்றவர்களுக்கும் பயன்படும் நோக்கில் கிரியா நிறுவனத்தினர் டாக்டர் பி.ஆர். சுப்பிரமணியம் அவர்களின் தலைமையின் கீழ் உருவாக்கிக் கொண்டிருக்கும் தமிழ் அகராதியைக் குறிப்பிடலாம். அகராதிக்

கலைத்துறையின் வளர்ச்சியையும் குறிப்பாக ஆங்கில மொழியில் உருவாக்கப்பட்ட அகராதிகளின் தரத்தையும் இந்த அகராதியில் நாம் எதிர்பார்க்கலாம்.

அகராதிகளுக்கு நோக்கீடு மட்டும் செயற்பாடல்ல; அவை மொழியாகத் தரப்படுத்தலில் பெரும்பங்கு வகிக்கின்றன. பல்வேறு கிளைமொழிகள் செம்மொழியாகப் போட்டியிடும்பொழுது தரப்படுத்தல் மிக முக்கியத்துவம் பெறுகிறது. தரப்படுத்தல் என்ற செயற்பாட்டை நிலைப்படுத்த அகராதிகளும் இலக்கணங்களும் பேருதவி புரிகின்றன. மொழியில் உள்ள வேறுபாடுகளையும் மாற்றங்களையும் தரப்படுத்திக் குறியாக்கம் (Codification) செய்கின்றன இவை. இவற்றையும் மனதில் கொண்டு அகராதிகளும் இலக்கணங்களும் உருவாக வேண்டும்.

நாம் இப்பொழுது ஆய்வின் வளர்ச்சி நிலையை மனத்தில் கொண்டு நோக்கு நூல்களைக் காண்போம். தமிழ் மொழியின் வரலாற்றைத் தெளிவாக உருவாக்க அகராதிகள் பெரும்பங்கு அளிக்கின்றன. வண்ணனை அடிப்படையில் நூல்களை மையமாகக் கொண்டோ குறிப்பிட்ட காலகட்டத்தில் உருவான நூல்களை மையமாகக் கொண்டோ அகராதிகள் பல தேவை. இவ்வகராதிகளில் சொற்களின் பொருள் தெளிவிற்காகச் சொல் கையாளப்படும். பல்வேறு கால இலக்கியங்களின் அகராதிகள் வரலாற்று அகராதியை உருவாக்கப் பெரிதும் பயன்படும். தற்பொழுது தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் உருவாகிக் கொண்டிருக்கும் சங்க இலக்கிய அகராதியை நாம் குறிப்பிடலாம்.

சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள தமிழ் லெக்சிகன் சொற்களுக்குரிய பொருளை வரலாற்றுப் பின்ணணியை மனத்துட்கொண்டு கொடுத்துள்ளது. இவ்வகராதி தோன்றிய பிறகு இத்தகைய அகராதிகள் தமிழில் அண்மைக்காலம் வரை வெளிவரவில்லை.. தமிழ்ப் பல்கலைக்கழகம் இக்குறையை நிவர்த்தி செய்ய முன்வந்துள்ளது. சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள தமிழ் லெக்சிகனுக்குப் பிறகு தமிழ் பல்வேறு துறைகளில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. புதிய புதிய கலைச்சொற்களைத் தமிழில் அறிஞர்கள் படைத்து வருகிறார்கள். ஆகையால் புதிய அகராதியை உருவாக்க வேண்டியதின் அவசியத்தை உணர்ந்து இத்துறையில் தமிழ்ப் பல்கலைக்கழகம் செயலாற்றி வருகிறது. இத்தகைய பேரகராதிகளின் தோற்றம் பல்வேறு வகைப்பட்ட அகராதிகளை அடித்தளமாகக் கொள்ளவேண்டும். அகராதிகளை

உருவாக்குவதற்கென்று தனித்துறை பல்கலைக்கழகங்களில் இடம்பெற வேண்டும்.

கலைச்சொல் அகராதிகளைப் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு இப்பகுதியை முடிக்க விரும்புகிறேன். உயர்நிலைப்பள்ளிகளில் தமிழ் பாடமொழியாக அறிமுகப்படுத்தப்பட்டதும் கலைச்சொல்லாக்கம் எல்லோருடைய கவனத்தையும் ஈர்த்தது. கலைச்சொற்களை உருவாக்குதல் முதன்மை இடம்பெற்றது. இவ்வாறு படைத்த சொற்களைக் கொண்டு ஆங்கிலம் - தமிழ் என்ற முறைமையில் அகராதிகளை உருவாக்கினார்கள். முன்பு நாம் விவரித்த அகராதிகளுக்கும் இங்குக் குறிப்பிடும் அகராதிகளுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. ஆங்கிலக் கலைச்சொற்களுக்கு இணையாகப் படைக்கப்பட்ட சொற்கள் தமிழில் தொகுக்கப்பட்டு நூல் வடிவில் வெளியிடப்பட்டன. இவற்றை இருமொழியகராதி வகைப்பாட்டிற்குள் அடக்கலாம். பள்ளி நிலையிலிருந்து கல்லூரி நிலைக்குத் தமிழ் பாடமொழியாக அறிமுகப்படுத்தப்பட்டபொழுது மொழியின் பயன்பாடு விரிவடைந்தது. அறிவியலும் தொழில்நுட்பமும் தமிழ் மூலம் அறிமுகப்படுத்தப்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இம்முயற்சிகளின் தூண்டுகோலே கலைச்சொல் அகராதிகளின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் காரணம்.

இன்னொரு பரிமாணத்தையும் நாம் இங்குக் குறிப்பிட வேண்டும். மக்கள் ஜனநாயகத்தில் பங்குகொள்ள வேண்டுமென்பதின் முதல் படியாக அவர்களுடைய மொழி ஆட்சித்துறைகளிலும் நீதிமன்றங்களிலும் இடம்பெற வேண்டும். தமிழகத்தில் உள்ள அலுவலகங்களில் தமிழ் ஆட்சியாக வரவேண்டும் என்பது தமிழர்களின் நீண்ட நாள் ஆசை.

இலக்கணங்களைப் பற்றிக் குறிப்பிடுவதற்கு முன்னர்க் கலைக்களஞ்சியங்களைப் பற்றிக் குறிப்பிடுவது நல்லது. தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் சார்பாகப் பொது மக்களுக்கென்று பத்துத் தொகுதிகளில் கலைக்களஞ்சியம் (1954-1968) வெளிவந்தது. இக்கழகம் குழந்தைகளுக்காகவும் பத்துத் தொகுதிகளில் கலைக்களஞ்சியம் (1968-1976) ஒன்றைக் கொண்டு வந்தது. இத்தகைய கலைக்களஞ்சியங்களின் பணி பின்னால் தொடரப்படவில்லை. தமிழ்ப் பல்கலைக்கழகம் தொடங்கிய பிறகு வாழ்வியல் களஞ்சியத் தொகுதிகளுக்காக ஒரு மையமும், அறிவியல் களஞ்சியத் தொகுதிகளுக்காக ஒரு மையமும் தொடங்கப்பட்டுச் செயல்பட்டு வருகின்றன.

வாழ்வியல் களஞ்சிய மையம் ஆறு தொகுதிகளையும், அறிவியல் களஞ்சிய மையம் மூன்று தொகுதிகளையும் வெளியிட்டுள்ளன. களஞ்சியப் பணிகள் தொடரப்பட வேண்டியவை.

இலக்கணங்களைக் குறிப்பிட்டு இக்கட்டுரையை முடிக்க விரும்புகிறேன். மொழியியலின் தாக்கத்தால் தமிழின் பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்கும் இலக்கணங்கள் பல தோன்றின. மொழியியல் அடிப்படையில் மொழியின் அமைப்பை இவ்விலக்கணங்கள் விவரிக்கின்றன. ஏற்கெனவே நாம் கூறியது போல் இலக்கணங்கள் மொழியின் அமைப்பை விவரிப்பதோடு மொழிமாற்றத்தின் திக்கைச் சுட்டுவதாகவும், அம்மாற்றங்களை உள்ளடக்கி மொழியின் தரப்படுத்தலுக்கு உதவுகின்ற கருவியாகவும் செயல்படுகின்றன. இதன் அடிப்படையில் தற்காலத் தமிழுக்கு இலக்கணம் உருவாகவில்லை. தமிழ்ப் பல்கலைக்கழக மொழியியல் துறை தற்காலத் தமிழுக்கு விரிவான இலக்கணம் ஒன்றை உருவாக்குகிற முயற்சியில் ஈடுபட்டுள்ளது. விரிவான இலக்கணம் ஒன்றிலிருந்து பல்வேறு நிலைகளுக்குரிய இலக்கணங்களை உருவாக்கிக் கொள்ளலாம் என்று கூறி முடிக்கிறேன்.

## துணைநின்றவை

அகத்தியலிங்கம், ச.(1988) 'அணிந்துரை' - பெருஞ்சொல்லகராதி தொகுதி 1. தஞ்சாவூர்; தமிழ்ப் பல்கலைக்கழகம்.

அரங்கன், கி. (1988) 'தமிழ் மொழியியல் கலைச்சொற்களைத் தரப்படுத்துதல்- சில அனுபவங்கள்' அனைத்திந்தியத் தமிழ் மொழியியல் கழக மூன்றாவது கருத்தரங்க மாநாடு, தஞ்சாவூர்.

இராமலிங்கனார், கீ. (1968) ஆட்சித்துறைத் தமிழ், சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

கருணாகரன், கி. (1977) மொழித்திட்டமிடுதல், சிதம்பரம் ஸ்ரீவேலன் பிரஸ்.

சுந்தரம், இராம (1984) தமிழ் ஆட்சி மொழி: ஒரு வரலாற்று நோக்கு, தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழகம்.

மாதையன், பெ. (1978) தமிழியல் நோக்குநூல் அடைவு, மேட்டூர்.

வீரமாமுனிவர் சதுரகராதி, சென்னை அரசாங்கக் கீழைக் கையெழுத்துச் சுவடி நூலகக் கையெழுத்துச் சுவடி, எண். 12.

வீராசாமி, தா. வே. (1988) முன்னுரை- பெருஞ்சொல்லகராதி, தொகுதி 1 தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக்கழகம்.

ஜெயதேவன், வ.(1977) தமிழ் அகராதியியல். அன்பு நூலகம்.

## தொகுப்பு நூல்கள்

தொகுப்பு நூல்கள் (1950) ஆட்சிச் சொல் அகரவரிசை, சென்னை: தமிழ்ப் பாதுகாப்புக்கழகம்.

(1962) ஆட்சிச் சொல்லகராதி, சென்னை: சென்னை அரசாங்கம் (இரண்டாம் பதிப்பு)

(1954-68) கலைக்களஞ்சியங்கள் (தொகுதிகள் 1-10) சென்னை; தமிழ் வளர்ச்சிக்கழகம்.

(1968) சட்டச் சொல்லகராதி, சென்னை: தமிழகச் சட்டத்துறை ஆட்சிமொழி ஆணைக்குழு

(1968-1976) குழந்தைகள் கலைக்களஞ்சியம். (தொகுதிகள் 1-10) சென்னை; தமிழ் வளர்ச்சிக்கழகம்.

**Chidambaranatha Chettiar, A.** (ed.) (1961-65) English – Tamil dictionary, Madras: University of Madras.

**Fabricius, J.P.** (1933) Tamil – English dictionary Enlarged, Tranquebar.

**Percival, P.** (1877) Tamil – English dictionary, S.P.C.K. Press

**Pope, G.V.** (1905) Tamil – English Englsih – Tamil dictionary, Oxford 7th edition.

**Rajaram, S.** (1986) English-Tamil Pedagogical dictionary, Thanjavur. Tamil University.

| | | |
|---|---|---|
| **Rottler, J.R.** | (1839) | Tamil – English dictionary, Vepery: W. Taylor, T. Venkatachala Moodley Print, R.W. Thoope (Revised). |
| **Subramonium, V.I.** | (1962) | Index of Purananuru, Trivandrum, University of Kerala. |
| **Winslow,** | (1852) | English and Tamil dictionary, Second Edition |
| **Vaiyapurip Pillai S.** | (1926-38) | Tamil Lexicon (Vol. 1-6 & supplement) Madras: University of Madras. |

# நாட்டார் வழக்காற்றில் மேம்பாடு

தே. லூர்து

'நோய்நாடி நோய் முதல் நாடி அதுதணிக்கும் வாய்நாடி வாய்ப்பச்செயல்' என்ற குறளுக்கு ஏற்பத் தமிழ் நாட்டார் வழக்காற்றியல் துறையில் வளர்ச்சியைத் தடுக்கும் நோய்களையும் நோய்களைத் தீர்க்கும் மருந்துகளையும் இந்தக் கட்டுரையில் குறிப்பிடுகின்றேன்.

பல நாடுகளில் நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள் வளர்ச்சி அடைந்தமைக்கு முக்கியமான காரணம் தேசிய உணர்வுகளே. சான்றாக நாட்டார் வழக்காற்றியல் துறையில் பின்லாந்து சிறப்புடன் திகழ்கிறது என்றால் அதற்குக் காரணம் அவர்கள் தங்களுக்கென்றொரு தேசிய அடையாளத்தை நாட்டார் வழக்காறுகளிலேயே தேடினர். "ஃபின்லாந்துக்கென ஃபின்னிஷ் மொழியில் வளமான செழுமைப்படுத்தப்பட்ட இலக்கிய மரபு ஏதும் கிடையாது... பின்லாந்து நாடு தனது இலக்கிய வளத்தைப் பற்றியும் வளமான மரபு பற்றியும் பேச வேண்டுமானால் அது நாட்டார் வழக்காற்றியல் துறையிலேயே தனது மரபைக் காணவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. செழுமைப் படுத்தப்பட்ட கலைகளின் மரபு பேரளவு வளமுடையதாகவும் செழிப்புடையதாகவும் இருக்கும் ஏனைய ஐரோப்பிய நாடுகளைத் தனது அண்டை நாடுகளாகப் பெற்ற துர்ப்பாக்கியமே பின்லாந்தின் நாட்டார் வழக்காற்றியலுக்கு வாய்ப்பாக அமைந்தது. தனது நாட்டின் மதிப்பு, செழிப்பான மரபு, பழம்பெருமை, தேசிய அடையாளம் ஆகியவற்றை நிலைநிறுத்தவும் ஒரு தனி நாடாக விளங்கவும் ஃபின்லாந்துக்கு நாட்டார் வழக்காற்றுத் துறை உதவிற்று.

ஆனால் தமிழ் நாட்டார்க்கோ ஏற்கெனவே எழுதப்பட்ட வளமான இலக்கிய மரபு இருந்தது. ஆனால் தமிழ் தாழ்ந்தது, சமஸ்கிருதம் உயர்ந்தது; தேவபாஷை என்று பலரால் கருதப்பட்ட நிலையில் பழந்தமிழ் இலக்கியங்களைத் தேடவேண்டிய நிலை வந்தது. ஆதலின் நாட்டார் வழக்காறுகட்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டிய நிலை இல்லை. இதனைக் கன்னட மொழியுடன் ஒப்பிட்டால் உண்மை புலப்படும். கன்னடமொழியில் மிகப்பழமையான இலக்கியங்கள் இல்லை என்பதால் அவர்கள் நாட்டார் வழக்காறுகளின் தொகுப்பில் சிறப்புடன் திகழுகின்றனர். நாட்டுப்புறவியல் என்ற தொடர் கிராமியனியல் என்ற பொருளை அளிப்பது. எச்சக்கோட்பாட்டிற்கு

இட்டுச் செல்வது (Survival Theory): வழக்காறுகள் அழிந்துபோகும்; புதிய வழக்காறுகள் தோன்றா என்ற எண்ணத்தையூட்டுவது. பழமைபற்றிய ஆய்வு நாட்டார் வழக்காற்றியல் என்ற தொடரை ஒரு கலைச்சொல்லாக நான் பயன்படுத்துகிறேன். வழக்காறுகள் சமூக மாற்றங்கள் நடைபெறும்போது அழிந்து போகக்கூடும்: அழிந்துபோகக் கூடியவை அழிந்து போகத்தான் செய்யும்.

தமிழ் நாட்டார் வழக்காற்றியல் துறையில் இன்றும்கூட ஐரோப்பிய நாட்டினரின் 19-ஆம் நூற்றாண்டுப் புனைவியல் பார்வை நிலவுகின்றது. கிராமங்கள் இயற்கையன்னை முகம்பார்த்துக் கொள்ளும் கண்ணாடி; கிராமமக்கள் ஆண்டவனின் அமுதப் புதல்வர்கள்: அவர்தம் வாய்மொழி இலக்கியங்கள் எளியவை, இனியவை என்ற கூற்றுக்கள் புனைவியல் பாங்கானவையே. எளிமை என்று கூறுவது ஆய்வாளனின் அகவியக் கூற்றாகும். ஒரு வழக்காறு அமைப்புரீதியாகச் சிக்கலான ஒன்றாகவும் இருக்கக்கூடும்.

ஒன்றரை நூற்றாண்டுக்கு முன்னர் நாட்டார் வழக்காறுகளைத் தொகுக்கும் பணி தொடங்கப்பட்டாலும், வெறும் பாடங்களே (பனுவல்களே, Texts) தொகுக்கப்பட்டன. இன்றும் கூட அவ்வாறே தொகுக்கப்பட்டு மனம் போன போக்கிலே விளக்கம் தரும் நிலை உள்ளது. வழக்காறுகள் சமுதாயத்தில் அன்றாட வாழ்வில் பயன்படுத்தப்படுபவை; அவை பயன்படுத்தப்படும் சூழல்கள் பல. குறிப்பிட்ட ஒரு வழக்காற்றைக் குறிப்பிட்ட சூழலில் ஒருவர் பயன்படுத்துகிறார் என்றால் அதன் முழு நுணுக்க விவரங்கள் இல்லாமல் எவ்வாறு ஆய்வு செய்வது. இலக்கிய ஆய்வு செய்து பழகிய முறையிலேயே நாட்டார் வழக்காறுகளை ஆய்கிறோம். "அக்கா மக முக்கா கொழுந்தி" என்று நெல்லை மாவட்டத்தில் ஒருவர் சிவகளைப் பிள்ளைமாரிடம் சொன்னால் உடனே அவர் மறுப்புத் தெரிவித்துவிடுவார். இவ்விதி எல்லாச் சமூகத்தினருக்கும் பொருந்தாது. சிவகளைப் பிள்ளைமார் சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்வதை முறையற்ற செயலாகவே (Incest) கருதுவர். ஆதலின் பழமொழி ஒரு குறிப்பிட்ட சூழலில் பயன்படுத்தப்படும்போது, வழக்காறு ஒன்று பயன்படுத்தப்படும்போது ஒரு சமூகச் செயல்பாடு நடக்கிறது. இதனை ஆய்வு செய்தற்குக் கருத்துப் புலப்படுத்த இனமரபு என்ற சமுதாய மொழியில், கருத்தாக்கத்தில் பயிற்சி பெறவேண்டும். இத்துறையில் தமிழ் மொழியில் அறிஞர்கள் இன்னும் கவனம் செலுத்தவில்லை.

நாட்டார் வழக்காற்றியல் 1960களின் பிற்பகுதியிலேயே கல்விப்புலத்தைச் சார்ந்தோரின் கவனத்திற்குரியதாயிற்று. அதற்கு முன்னர் இருந்த நிலையை வ. அய். சுப்பிரமணியம் பின்வருமாறு எழுதுகின்றார். நாட்டுப்பாடல்களைப் பற்றி 1960-இல் முதன் முதல் கே.பி.எஸ் அமீது கட்டுரை சமர்ப்பித்த போது அதனைச் சீர்தூக்கிய தமிழ் பெருமக்கள் காட்டிய ஏளன உணர்வு, இன்று இளைஞர்களிடையே எழுச்சியாக மாறியிருப்பது மிக்க மகிழ்ச்சி தரும் செய்தி என்று 1976-இல் எழுதுகிறார்.

ஆனால் களத்திற்குச் செல்லாது ஊகத்தின் அடிப்படையில் எதைவேண்டுமென்றாலும் எழுதலாம் என்ற நிலை ஏற்பட்டுள்ளது. "உச்சியிலே முடி உயர்ந்து நீட்டி மேல்நோக்கி நிற்பதால் உச்சிமாவாளி என்றெழுதுவதும், அந்தோணியார் அடங்கிய இடம் புளியம்பட்டி என்றெழுதுவதும் இன்றைய நிலை. இதற்கு டாக்டர் பட்டங்கள் வேறு அளிக்கப்படுகின்றன. அவை அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டு விடுகின்றன. வேறொரு அறிஞர் பின்வருமாறு எழுதுகிறார்.

"இங்குக் காத்தவராயன் கதை போன்ற சில கதைப்பாடல்களில் கஞ்சா, மது போன்ற பல மயக்கும் பொருள்கள் பாராட்டப்படுகின்றன. திருநெல்வேலி, கன்னியாகுமரிப் பகுதிகளில் பாடப்படும் சுடலைமாடன் என்ற வில்லுப்பாட்டுத் தலைவன் பல குற்றங்கள் புரிகிறான்; அதற்குத் தண்டனையோ, பழிவாங்குதலோ இல்லை. இது பார்வையாளர்க்காக வெறுமனே பாடப்படும் ஒன்று; வேறு கதைப்பாடல்களில் திரும்பவும் பாடப்படாத கருத்து சிலவே காணப்படுகின்றன.

சட்டத்தை மீறுபவர்களே மக்களின் மதிப்பிற்குரியவர்களாகின்றனர். உயர்வாக மக்களின் நலன்களைப் பாதுகாக்கவே சட்டங்கள் இயற்றப்பட்டிருப்பதாக மக்கள்திரளினர் கருதுகின்றனர். அவர்களின் நோக்கில் சட்டத்தை மீறுபவனே தலைவன். ஆதலின் சட்டத்தை உடைக்கும் ஒருவன், போக்கிரி, அயோக்கியன், ஒருவன் அவர்கள் கண்ணுக்குத் தலைவனாகத் தெரிகிறான்". இக்கூற்றுக்குச் சான்றாகக் காத்தவராயன், மதுரைவீரன், சுடலைமாடன் போன்றோரைக் குறிப்பிடுகின்றார்.

இறுதியில் "சமுதாயத்தின் தாழ்நிலையில் இருப்போரின் விருப்புக்கு இரைபோடுவனவாகக் காத்தவராயன் கதைப்பாடல் குழுவைச் சார்ந்தவை அமைகின்றன; பெண், மது, வன்முறைக்கு இடம் கொடுப்பனவாக

அமைந்துள்ளன என்று நகையாடுகின்றனர். களத்திற்குச் சென்று ஆய்வு செய்யாததால் இத்தகைய நிலை நம்மிடையே உள்ளது.

யாரோ தொகுத்து, அச்சிட்ட ஒரு நூலையெடுத்து விளக்கம் எழுதுவதால் வந்த வினை இது. வெறும் பாடத்தை மட்டும் பார்ப்பவர்கள் அதற்குச் சொந்த விளக்கம் தருவர். ஓர் ஆய்வாளர் பின்வருமாறு எழுதுகிறார். "சூதாடித் தோற்றவனுக்குச் சுகம் கிட்டாது என்ற பழமொழி சூதாடிப் பொருள் இழந்தவன் வாழ்வில் சுகத்தை இழப்பான் என்பதை வலியுறுத்துகிறது". இவ்வாறு எழுதுவதால் என்ன அரிய கண்டுபிடிப்பை உணர்த்துகிறார். ஏனைய வழக்காறுகளையும் இவ்வாறே விளக்குகின்றார்.

நாட்டார் வழக்காற்றியல் வளர்ச்சி அடையாமைக்குக் காரணம் தமிழில் பிற துறைகள் வளர்ச்சி அடையவில்லை. உளவியல், சமூகவியல், அமைப்பியல், குறியியல், மானிடவியல் துறைகள் வளர்ச்சியடையவில்லை. நாட்டார் வழக்காறு என்பது பிறவற்றோடு தொடர்பற்ற ஒன்றல்ல. அது சமூகங்களில் பயன்படுத்தப்படுவது; கருத்துப்புலப்படுத்தாப் படிமுறை சார்ந்தது. ஆதலின் பிறதுறைக் கருத்தாக்கங்களைத் தழுவி ஆய்வு செய்ய வேண்டியது மிகமிக இன்றியமையாததாம். இத்துறை ஆய்வு பல்துறை இணைவு ஆய்வாக அமையும்போதே ஆழ்ந்த ஆய்வாக அமையும்.

சான்றாக நாட்டார் வழக்காற்றின் பொருண்மை (அர்த்தம்) பற்றிக் குறிப்பிடுவோம். கதை சொல்லுவோனுக்கும், பாடல் பாடுவோனுக்கும், விடுகதை போடுவோனுக்கும், பார்வையாளனுக்கும் அல்லது சொல்லுவோருக்கும், நாட்டார் வழக்காறு கதை சொல்லும் பலருக்கும் அல்லது கதையைக் கேட்கும் பலவேறுபட்டோருக்கும் பல அர்த்தங்களை உணர்த்தலாம். ஒரு குழுவினராகக் காணப்படும் வெவ்வேறு பார்வையாளர்கட்கு வெவ்வேறு பொருளை அது உணர்த்தக்கூடும். இது வெளிப்படையானதுபோலத் தோன்றும். ஆனால் மிகவும் கடுமையாக முயன்று ஏராளமான பாடல்களைத் தொகுத்திருப்பினும், அந்தப் பாடல்கள் என்ன பொருளை உணர்த்துகின்றன என்பது குறித்துக் கவனம் செலுத்தப்படவில்லை. டண்டிஸ் குறிப்பிடும் கருத்து இங்குக் கருதற்குரியது.

நாட்டார் வழக்காற்றின் விந்தைமிகு பரிமாணங்கள் எல்லாம் நாட்டார் வழக்காற்றியலர்களாலும், நாட்டார் வழக்காற்றியல் தரவுகளை ஆய்வு செய்யும்

ஏனைய துறைகளைச் சார்ந்த உறுப்பினர்களாலும் இடைவிடாது ஒதுக்கப்பட்டு வந்துள்ளன. இந்த ஆய்வாளர்கள் (அறிஞர்கள்) தொகுத்தல், வகைப்படுத்தல், சுவடிப்புலங்களில் சேர்த்துவைத்தல், ஒப்பிடுதல், ஒரு குறிப்பிட்ட நாட்டார் வழக்காறு கொண்டு ஒன்றின் பழமையான இன வடிவங்களை முடிவின்றித் தேடுதல் ஆகியவற்றில் கவனம் செலுத்தினர். நாட்டார் வழக்காற்றியல் ஆய்வின் வரலாறு மொத்தத்தில் நாட்டார் வழக்காற்றை மானுடத்தன்மையற்றதாகச் (De-Humanize) செய்யும் முயற்சியாக இருந்துள்ளது. 'மானுடத்தன்மைமறுத்தல் என்பதை நேர்பொருளில் பயன்படுத்துகிறேன். நாட்டார் வழக்காற்றியலில் 'நாட்டாரை' விட்டுவிட்டு வழக்காறுகளை மட்டும் ஆய்வது, பழமையான ஒன்று. ஒரு குறிப்பிட்ட வழக்காற்றுக்கு ஒருவன் கதைக்கூறு எண்ணையோ (Motify) கதைவகை எண்ணையோ (Type) ஒதுக்கினாலும் அல்லது அதனை அமைப்பியல் ரீதியாக அறுத்துப் பிரிக்க முயன்றாலும், நாட்டார் வழக்காறு மானுடர்களிடையே கருத்துப்பரிவர்த்தனை செய்யும் மரபுவழிமுறையாகப் பயன்படுத்தப்படுவது என்ற உண்மையை ஒருவன் மறந்துவிடலாம்.

ஆதலில் அவை எவ்வாறு கருத்துப்புலப்படுத்தம் செய்கின்றன? அவை எவ்வாறு குறியீட்டுப் பண்புடன் பொருள் தருகின்றன? கதைகளில் வரும் பேய்கள், பூதங்கள், கதைகளில் வரும் நம்ப இயலாச் செயல்கள் எவ்வாறு குறியீடுகளாகச் செயல்படுகின்றன என்பதை அறிய உளவியல் மிக மிக இன்றியமையாதது. கண்ணேறு கழித்தல் என்பது தமிழ்நாட்டில் மட்டுமின்றிப் பல்வேறு நாடுகளில் காணப்படும் ஒரு பழக்கமாகும். அதுகுறித்து பல்வேறு ஆய்வாளர்கள் ஆய்வு செய்துள்ளனர். கண்ணேறு ஏன் ஏறபடுகிறது? அதனுடைய விளைவுகள், கண்ணேறுக்குக் காரணமானோர் கண்ணேற்றை நீக்கும் வழிமுறைகள் குறித்தே எழுதியுள்ளனர். ஒருசிலர் அப்பழக்கத்திற்கு உளவியல்ரீதியான விளக்கமளிக்கின்றனர். அவர்கள் தரும் விளக்கம் உண்மைதானா? அல்லது உண்மையற்றதா? பொருத்தமற்றதா? என்பதை அறிதற்கு உளவியல் கல்வி மிகமிக இன்றியமையாதது என்பதைப்போல நாட்டார் வழக்காறுகளின் ஆய்விற்கும் அது இன்றியமையாததாம்.

நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள் ஆழமாக அமையவில்லை. இதற்குக் காரணங்கள் பல; தடைகள் பல. இவை நீக்கப்பட்டால் மட்டுமே தமிழ் நாட்டார் வழக்காற்றியல் மேம்பாடடையும்.

1. கோட்பாட்டடிப்படையின்றிக் களஆய்வு செய்தல்
2. கருதுகோள்களை உருவாக்காமல் களத்திற்குச் செல்லுதல்.
3. போதிய பொருளாதார வசதியின்மை.
4. ஓரிடத்தில் உட்கார்ந்து படித்துக் குறிப்பெடுக்க நோக்கு நூல்கள் கொண்ட நூல்கள் இன்மை.
5. நூல்கள் கிடைத்தாலும் தமிழில் நோக்கு நூல்கள் இன்மை.
6. நாட்டார் வழக்காற்றுக் கோட்பாடுகளை உணர்ந்தவர்கள் நெறியாளர்களாக அமையாமை.
7. நெறியாளர்கள் மாணவர்களுடன் விவாதித்து ஆய்வு செய்வதும் இல்லை. கருத்தை நாகரிகமாக மறுத்து எழுதக்கூட மாணவர்கள் அஞ்சுகின்றனர். ஆதலில் குறைந்தபட்சம் மூவரையாவது நெறியாளர்களாக நியமித்தல் நலம்.
8. மாணவன் கற்றுத் துறைபோனவனாகிவிட்டால் எங்கே தன் பிழைப்புப் போய்விடுமோ என்ற அச்சம். தமிழ் மருத்துவர்கள் தங்கள் பிள்ளைகட்குக்கூடச் சில மூலிகைகளைச் சொல்லிக் கொடுக்கமாட்டார்கள். இது ஓர் மரபுவழி நோய்.
9. புதியபுதிய கருத்தாக்கங்களை உருவாக்கவேண்டும்; கலைச்சொற்களை உருவாக்கவேண்டும்.
10. நாட்டாரிடையே காணப்படும் கருத்தாக்கங்கட்குரிய கலைச்சொற்களைத் தேடாது, ஆய்வாளன் தன் கருத்தைத் திணித்தல்.
11. தமிழ் நாட்டார் வழக்காற்றியலைப் பிடித்துள்ள நோய் பகுதிநேரப் படிப்பு என்பதாகும். ஆலன் டண்டில், வட அமெரிக்க இந்திய நாட்டார் வழக்காற்றியல் குறித்துச் சொல்லும் கருத்தும், கோடார்ட் சொல்லும் கருத்தும் இதற்கு ஒத்தவையாம். "நாட்டார் வழக்காற்றியல் கல்வி என்ற துறையைப் பிடித்துள்ள பகுதிநேரப் படிப்பு என்ற நோய்தான் வட அமெரிக்க இந்திய நாட்டார் வழக்காற்றியலையும் பற்றியுள்ளது". பிளினி ஏர்கோடார்ட் என்பவர் 1941-ஆம் ஆண்டு அமெரிக்க நாட்டார் வழக்காற்றியல் கழகத்தில் ஆற்றிய தலைமை உரையின் கருத்து இன்றும் உண்மையாகவே உள்ளது. "வட அமெரிக்க இந்திய நாட்டார்

வழக்காற்றியல் கல்வி என்பது தற்பொழுது நம்மில் பெரும்பாலோருக்குச் சிற்றாய்வாகவோ முடிவுக்கு ஒரு வழியாகவோதான் உள்ளது. நாம் அச்சிட்டு வெளியிடுபவை மற்ற துறைகளின் ஒரு துணைப் பொருளேயாகும். எப்பொழுதாவது பட்டம் வாங்குதற்காக ஓர் ஆய்வு மேற்கொள்ளப்படும்போது அன்றி ஒரு தலைமையுரை ஆற்றப்படும் நிலை உருவாகும்போது மட்டுமே ஆழ்ந்த ஆய்வுக்கு இக்கல்வி உட்படுகின்றது" என்கிறார் கோடார்ட்.

12. நாட்டார் வழக்காற்றுத் துறையில் நாம் கவனம் செலுத்தவேண்டிய பகுதிகள் பல. அவற்றுள் ஒன்று நாட்டார் புராணக்கதைகள்.

13. உலகில் காணப்படும் பல மக்களிடையே வழக்கிலும், வழக்கிலிருந்து தொகுக்கப்பட்டு எழுத்திலும் ஏராளமான புராணக்கதைகள் காணப்படுகின்றன. வடமொழியிலும், கிரேக்கத்திலும் புராணக்கதைகளும், அவற்றின் அடிப்படையில் எழுந்த இலக்கியங்களும் காணப்படுகின்றன. வட அமெரிக்க இந்திய இணைக்குழு மக்களிடையிலும் புராணக்கதைகள் காணப்படுகின்றன. தமிழ்மக்களின் புராணக்கதைகள் எங்கே? சான்றாக நோய்களின் தோற்றம் பற்றிய புராணக்கதைகள் எங்கே? பொருள்களின் தோற்றம் பற்றிய கதைகள் எங்கே? உலகில் புராணக்கதைகள் இல்லாத மக்கள் சமுதாயம் இருக்க முடியுமா? அவை இன்னும் தமிழ்நாட்டு மக்களிடையே வழக்கில் மறைந்து கிடக்கின்றனவா? தமிழர் இடம்பெயர்ந்து சென்றபொழுது வேறிடங்களில் பரவிக்கிடக்கின்றனவா? இத்துறைகுறித்து நாம் கவனம் செலுத்த வேண்டும். தமிழ் மேம்பாட்டுக்கு இ·து உதவும்.

14. இன்று நாட்டார் வழக்காற்றியலில் தமிழ்த்துறையினர் மட்டுமே ஈடுபட்டுள்ளனர். எம்.ஃபில், பி.எச்டி. பட்டங்கட்கு நாட்டார் வழக்காறுகள் ஆய்வுப்பொருள்களாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. தொகுத்து எதையாவது எழுதிக்கொடுத்தால் பட்டம் கிடைத்துவிடும் என்ற எண்ணமும் உள்ளது. இது குறித்து அ. இராமசாமி கூறுவது வருமாறு: ஆய்வாளர்கள் பெறவிரும்பும் பட்டங்களுக்குத் தரப்படும் கால அவகாசங்களுக்கேற்ப ஆய்வுஎல்லையை, ஆய்வுப்பொருளை, ஆய்வு நோக்கத்தைச் சுருக்கிக் கொள்ளவும் விரித்துக்கொள்ளவும் வசதியுடையதாக நாட்டார் வழக்காற்றியலைக் கருதுகின்றனர். அதோடு

*'பிள்ளையார் அச்சில் பிள்ளையார் பிடிப்பதுபோல்'* எளிதான வழிமுறைக்கு இது களனாகவும் கருதப்படுகின்றது.

தமிழ்த் துறையில் எம்.ஃபில் பட்டத்திற்கும் பிஎச்.டி பட்டத்திற்கும் நாட்டார் வழக்காறுகளை எடுத்துக்கொண்டவர்கள் கூட நாட்டார் வழக்காற்றியலுக்கென்றே தொடங்கப்பட்ட இதழ்களை வாங்கவில்லை என்பது வருத்தத்திற்குரியது.

1985-க்குப் பின்னர் காணப்படும் நிலை மகிழ்ச்சி அளிப்பதாக உள்ளது. நாட்டார் வழக்காற்றுக் கருத்தரங்கங்கள், தமிழ்த்துறைகளில் விருப்பப்பாடமாக நாட்டார் வழக்காற்றியலை அமைத்தல் போன்ற செயல்கள் நடைபெற்று வருகின்றன. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் நாட்டார் வழக்காற்றியல் துறை ஒன்றை உருவாக்கியுள்ளது. பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரியில் நாட்டார் வழக்காற்றியலில் முதுகலைத்துறை ஒன்று தொடங்கப்பட்டுள்ளது. நல்லதொரு நூல்நிலையமும் அமைக்கப்பட்டு வருகிறது. இரண்டாவது ஆண்டில் 14 மாணவர்கள் பயிற்சி பெறுகின்றனர். இவர்களுக்கு வேலையளிப்பது தமிழ்மக்களின் கடமையாகும்.

மதுரை, பாளையங்கோட்டை, அண்ணாமலை போன்ற இடங்களில் நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுக்கழகங்கள் தொடங்கப்பட்டுள்ளமை பாராட்டுதற்குரியது. நாட்டார் வழக்காற்றியலுக்கென்றே இரு இதழ்கள் வெளிவருகின்றன. ஆனால் நல்ல கட்டுரைகளை எழுதி அனுப்பப் பலர் முன்வராமை வருத்தத்திற்குரியதாகும். நாட்டார் வழக்காற்றியல் இதழ் கோட்பாடு ரீதியான கட்டுரைகளை, ஆழ்ந்த ஆய்வுக் கட்டுரைகளை வெளியிடும்.

# நோக்கு நூல்களின் தேவை

ம.செ. இரபிசிங்

ஒரு கால கட்டத்தில் மனித சிந்தனைகளைப் பதிவு செய்ய வாய்ப்பில்லாதிருந்தது. இன்று அறிவியல் முன்னேற்றத்தால் சிந்தனைகளைப் பதிவு செய்யும் வாய்ப்புள்ளது. நேற்றைய மனிதனின் சிந்தனைகள் இனறைய மனிதனின் பார்வையில் படும்பொழுது, முன்னவனின அனுபவத்தைப் பின்னவன் பயன்படுத்தவும், மேலும் முன்னேறவும முடிகிறது. அதுபோலச் சமகாலச் சிந்தனையாளர்களின் எண்ணங்கள் நம் பார்வையில் படுகின்ற பொழுது, நம்மை மாற்றிக்கொள்ளவும், வளர்த்துக்கொள்ளவும் முடிகிறது. அவற்றையும் எளிமையாகவும் விரைவாகவும் இன்றைய சூழலில பெறுவதற்கு மனிதன் விழைகின்றான். இப்பணியை நோக்கு அல்லது பார்வை நூறகள் செய்கின்றன.

தமிழில் இப்பார்வை நூற்கள், தொடக்க காலத்திலிருந்து இன்றுவரை எவ்வாறுள்ளன என்பதை எணணிப் பார்க்கும்போது, பார்வை நூற்களைப் பொறுத்தவரையில் நம் நிலையை அறிந்து கொளள முடியும்.

அறிவியல் கண்டுபிடிப்புக்களாலும், பிறவற்றாலும், அமர்ந்திருக்கும் இடத்திலிருந்தே, பலவற்றைப் பெறமுடியும; சாதிக்க முடியும். எனவே, எந்த ஒரு தகவலையும், பொருளையும விரைவாகவும் எளிமையாகவும் பெறக்கூடிய சூழலிலிருக்கிறோம் இச்சூழல் இலக்கிய உலகிலும் அமைநதால்தான், இன்றைய தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில் இலககியங்கள் வளரும்; மேம்படும். இவற்றிற்கு நோக்கு அல்லது பார்வை நூற்களின் பணி இன்றியமையாதது. ஆங்கில இலக்கியத்தின் வளர்ச்சிக்கும், ஆய்வு நிலையில் அது பெற்ற முன்னேற்றத்திற்கும் அவ்விலக்கியத்தில் இடம் பெற்றுள்ள பார்வை நூற்களும் முக்கிய பங்கு வகித்தன எனலாம். எனவே, இன்றைய தமிழ் இலக்கிய வளர்ச்சியில பார்வை நூலகளின் பங்கு மகத்தானது என்பதை மறுக்க இயலாது.

அறிவியல் நெறிமுறைகளுடன் சார்பற்ற நிலையில், நிரூபிககக் கூடிய இன்றைய ஆய்வுகளுக்குச் சானறாதாரங்கள் வழங்குவது நோககு அல்லது பார்வை நூற்கள்.

சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகை நூற்களை எளிமையாக நினைவுபடுத்துவதற்காகவும், மறக்காமலிருப்பதற்காகவும்,

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்தும் கலியோ டகம புறமென்று
இத்திறத்த எட்டுத் தொகை

எனவும், பத்துபபாட்டு நூற்களை நினைவு படுத்துவதற்காக,

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.

எனவும், வழங்கப்படுகிற செய்யுட்கள், நூற்களின் பட்டியலையும், நூலைப் பற்றிய சிறுகுறிப்புக்களையும் தருகின்றன. இவற்றைப் பார்வை நூல்களின் முன்னோடிகள் எனக் கொள்ளலாம்.

யாப்பருங்கலக் காரிகையில் நூல் முழுவதும் இடம்பெற்றுள்ள உதாரண இலக்கிய முதல் நினைப்புச்செய்யுட்களும் இவ்வகையைச் சார்ந்தவையே. கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம ஆகியவற்றிற்குரிய உதராரணச் செய்யுட்களை எளிமையாக நினைவு படுத்தும் வகையில், உதாரணச் செய்யுளின் முதற்சீரை மட்டும் குறித்து.

கொய்தினை ஆய்தினை மென்றினை வாள்வரி பூண்டபறை
எய்திய தாழிசை யானும் வென றானும் கலித்துறையே
மைதிக ழோதி வரிநெடுங் கண்ண வனமுலையாய்
மெய்தரு வேய்தலை தேம்பழுத் தென்ப விருத்தங்களே

என்று அமைக்கப்படும் செய்யுள் பார்வைநூல் பட்டியலில் இடம் பெறத் தக்கது. பார்வை நூற்களின் தொடக்க நிலை இவ்வாறிருந்தது என்று கொள்ளலாம்.

அடுத்த நிலையில் நிகணடுகளும், ஆத்திசூடி, தொகை அகராதி போன்றவையும் பார்வை நூற்களின் பணியைச் செய்தன.

தமிழ் நூல்களின் கால வரிசை, புலவர் அகர வரிசை, சிறப்புப் பெயரகராதி, அபிதான சிந்தாமணி, விநோத ரசமஞ்சரி முதலியன பார்வை நூற்களாகத் திகழ்கின்றன.

ஆங்கிலக் கல்வியின் வாயிலாக, பார்வை நூற்களின் பட்டியலில் மேலும் பல அகராதிகளும், கலைக்களஞ்சியமும் இடம் பெற்றன.

சங்ககாலக் கவிஞர்களையும், கவிபாடும் மன்னர்களையும் பற்றிய தொகுப்பாக, 'சங்ககாலப் புரவலரும் காவலரும்' என்ற நூலும், தனிப்பாடல் திரட்டாக, பல வித்வான்கள் பாடிய "தனிப்பாடற்றிரட்டு" என்ற நூலும், பண்டைத் தமிழ் நூல்களில் இடம் பெற்றுள்ள விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன ஆகியவை பற்றிய விவரம் அடங்கிய, "பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள்" என்ற நூலும் பார்வை நூற்கள் வரிசையில் வெளிவந்துள்ளன.

பிற இந்திய மொழிகளிலும் வெளிநாட்டு மொழிகளிலும இடம் பெற்றுள்ள தமிழ்ச் சொற்களை வரிசைப்படுத்திப் "பிறமொழிகளில் தமிழ்ச் சொல் ஆட்சி" என்ற நூலும், கலை அறிவியல், மெய்ப்பொருள், அரசியல் ஆகியவை பற்றிய குறிப்புக்களைத் தரும் "பல்பொருள் ஆங்கிலத் தமிழ் அகர வரிசை" என்ற நூலும் இவ்வகையே.

இலக்கியங்களில் மேற்கோள்களாகக் காட்டப்படும், அகத்தியர் கதை. அகலிகை கதை முதலிய பல கதைகளை அகர வரிசைப்படுத்தி "மேற்கோள் விளக்கக் கதை அகரவரிசை" எனும் ஒரு நூல் வெளிவந்துள்ளது.

தமிழ்ப் பலகலைக்கழகத்தினர் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள புலவர்கள், பொருள்கள் முதலியவை பற்றி, "சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்" எனும் ஒரு பார்வை நூலை வெளியிட்டுள்ளனர்.

இவற்றைத் தவிர, தமிழ் எழுத்தாளர்கள் யார், எவர் என்ற விவரம் அடங்கிய நூலும், தமிழ் நாட்டில் அச்சிடப் பெற்றுப் பதிவு செய்யப் பெற்ற தமிழ் நூல்களுக்குரிய விவரங்களைத் தருகின்ற, "தமிழ் நூல் விவர அட்டவணை" என்ற நூலும், ஏறத்தாழ 270 அந்தாதிப் பாடல்களைப் பற்றிய தொகுப்பு நூலாக "அந்தாதி இலக்கியங்கள்" என்ற நூலும், மொத்தம் 54 உலா இலக்கியங்களைப் பற்றிய விவரங்களை அகர வரிசையில் குறிப்பிடும் "உலா இலக்கியங்கள்" என்ற நூலும் பார்வை நூல்களாக வெளிவந்துள்ளன.

மேலும், தற்பொழுது ஆய்வேடுகளிலும், நூற்களிலும், பின்னிணைப்பாகப் பொருளடைவு, ஆசிரியர்கள் பெயர்கள், அகரவரிசை, துணைநூற்பட்டியல் ஆகியவை பார்வைக்குப் பயன்படும் வகையில் இடம் பெற்றுள்ளன.

மேற்குறிப்பிட்ட, தமிழில் காணப்படும் பார்வை நூல்களில் பெரும்பாலானவை ஆங்கில இலக்கியத்தின் தொடர்பால் இயற்றப்பட்டவை. இருப்பினும், ஆங்கில இலக்கியத்தை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, அதில் காணப்படும் பார்வை நூற்களின் பட்டியலைப் பார்க்கும்பொழுது ஒவ்வொரு துறையிலும், பிரிவிலும் இன்னும் பல பார்வை நூற்கள் தேவை என்பதை உணர இயலும்.

பல வகையான அகராதிகள், கலைக்களஞ்சியங்கள், தகவல் நூல்கள், தொகுப்பு நூற்கள் ஆங்கில இலக்கியத்தில் தாராளமாக வெளிவந்துள்ளன.

அகராதிகளிலும், Oxford, Chambers அகராதிகள் வரிசையில் பல அகராதிகள் ஆங்கிலச் சொற்களுக்குரியவைகளாக உள்ளன. இவற்றைத் தவிர, பழமொழிகளுக்கென "Oxford Dictionary of English Proverbs" என்றும், கிறித்துவர்களின் பெயர் பட்டியலுக்காகவே, "Oxford Dictionary of English Christian Names" என்றும் அகராதிகள் உள்ளன. ஒரு படைப்பாளனின் படைப்புக்களுக்கென ஓர் அகராதி வெளிவந்துள்ளது. சேக்ஷ்பியரின் நாடகங்களில் இடம் பெற்றுள்ள கதைமாந்தர்களைப் பற்றியும். இடப் பெயர்களைப் பற்றியும், Dictionary of the Characters and proper nouns என்ற அகராதி உள்ளது. மேற்கோள்களுக்கென "Oxford Dictionary of Quotation" என்ற நூலும் உள்ளது.

கலைக்களஞ்சியங்கள் நூற்றுக் கணக்காக வெளிவந்துள்ளன. அவற்றுள், "Encyclopaedia Britannica, Encyclopaedia Americana" போன்றவை பிரசித்தி பெற்றவை. உலகெங்குமுள்ள கலைகளைப் பற்றி "Encyclopaedia of World Art" என்ற நூலும், உலகிலுள்ள சமயங்களையும் நீதிகளையும் பற்றி "Encyclopaedia of Religion and Ethics" என்ற நூலும் வெளிவந்துள்ளன. ஷேக்ஸ்பியரின் படைப்புக்களுக்கு மட்டுமாக, 'Shakespeare Lexicon' என்ற ஓர் அரிய நூல் வெளியாகியுள்ளது.

எழுத்தாளர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளுவதற்காக "Twentieth century Authors – A Biographical Dictionary" என்ற நூலும், சமகால

இலக்கியங்களைத் தெரிந்து கொள்வதற்காக "Readers guide to Contemporary Literature" என்ற நூலும் உள்ளன.

நூல் விற்பனையாளர்களுக்கும், வெளியீட்டாளருக்கும் பயன்படும் வகையில 'Subject guide to Books in print' என்று ஆண்டுதோறும் பார்வை நூலொன்று வெளிவருகிறது.

பொதுவாக, இலக்கியங்களைக் கற்பதற்குத் துணையாக, "Oxford Companion to English Literature", "Oxford Companion to Classical Literature" போன்ற நூற்கள் உள்ளன. இவற்றைத் தவிரக் குறிப்பிட்ட ஓர் இலக்கியத்தை அறிந்து கொள்வதற்கென Hand Books பல உள்ளன.

பார்வை நூற்களின் வரிசையில் Accordance இடம் பெற்றுள்ளது. கிறிஸ்தவர்களின் விவிலியத்தில், ஒரு வசனத்தின் பொருள் பொதிந்த பிற வசனங்களைப் பற்றிய செய்திகள் முழு விவரத்துடன அந்த வசனங்களுக்கு நேர் எதிரே குறிக்கப்பட்டுள்ளன. அத்தகைய விவிலிய நூலை "Bible Accordance" என்று ஆங்கிலத்திலும், 'ஒத்த வாக்கிய வேதாகமம்' என்று தமிழிலும் குறிப்பிடுவர்.

இலக்கியச் சொற்களைப் பற்றிய விளக்கங்களுககாக "A Glossary of Literary Terms" போன்ற நூற்களும் உள்ளன.

மேலும் இந்தியாவைப் பற்றியும் இந்திய இலக்கியங்களைப் பற்றியும், படைப்பாளர்களைப் பற்றியும் பல ஆங்கிலப் பார்வை நூல்கள் வெளிவந்துள்ளன.

Who is who, Hindustan year Book, Dictionary of National Biography, Indian Pakisthan year Book, Madras Dictionary, The National Bibliography of Indian Literature, Indian Books in Print, Times of India Dictionary and year Book, Epics, Myths and Legends of India and Book of Languages and Dialects of India, Dictionary of National Biography முதலிய பல பார்வை நூற்கள் ஆங்கிலத்தில் உள்ளன.

இன்றைய அறிவியல் வளர்ச்சியின் காரணமாகவும், அறிவியலைப் பற்றிய விழிப்புணர்ச்சியின் காரணமாகவும், எதையும் அறிவியல் கண்ணோட்டத்தோடு அணுகும் ஒரு மரபு இன்று நிலவுகிறது. 'சார்பற்ற நிலையில் உண்மையை நாடுங்கள்' (Persuit of truth by objective methods)

என்ற கோட்பாட்டை, ஏதாவது ஒரு பொருள் பற்றி நூல் எழுதுவோரும், ஆய்வை மேற்கொள்வோரும் கட்டாயமாகக் கடைப்பிடிக்கும் நிலை உள்ளது. இதற்குப் பார்வை நூல்களின் தேவையும் சேவையும் மிகவும் தேவைப்படுகிறது. யூகமாக, கற்பனையாகக் கூறிய காலம் கடந்து, எதையும் சான்றாதாரங்களோடு நிறுவும் காலம் அமைந்துள்ளது. எனவே இப்பணியில் பார்வை நூல்கள் எந்த அளவுக்கு மிகுதியாகத் தேவை என்பதை உணர இயலும்.

பார்வை நூற்கள் ஆங்கில மொழியில் அடைந்த வளர்ச்சியைத் தமிழ் அடைய இன்னும் பல ஆண்டுகள் ஆகலாம். ஆனாலும் இன்றுள்ள தேவைக்கேற்பப் பல பார்வை நூற்கள் இல்லை என்பதை மறுக்க இயலாது. மலையாள மொழியில், படைப்பாளர்கள், அவரது படைப்புகள் பற்றிய பொருள் அடக்கம், நூலின் பதிப்புகள், கிடைக்குமிடம், கிடைத்த பரிசுகள் முதலியவை உட்பட ஆசிரியர் குறிப்புடன், 'மலையாள கிரந்த சூசிகா' என்ற அரிய பார்வை நூல் உள்ளது. அந்த நூலின் வாயிலாக, ஓர் ஆசிரியரைப் பற்றியோ, நூலைப் பற்றியோ மிக எளிதில் தகவல்களைச் சேகரித்துக் கொள்ள இயலும். அதைப் போன்ற நூல் தமிழில் இல்லை.

மு.வ. ஆய்வடங்கல், அகிலன் ஆய்வடங்கல், மு.வ. கலைக் களஞ்சியம் போன்ற சில பார்வை நூற்கள் ஆய்வாளர்களால் வெளியிடப்பட்டுள்ளன. அவற்றில் சொல்லப்படும் தகவல்கள் பல தவறானவையாகவும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதவையாகவும் உள்ளன. அண்மைக் காலம் வரையிலும் நம்மோடு வாழ்ந்த டாக்டர் மு.வ. அவர்களது நாவல்கள் வெளியான ஆண்டுகளில் ஒவ்வொரு நூலும் வேறுவேறு ஆண்டுகளைக் குறிப்பிடுகின்றன. இதைப்போல இன்னும் பலவற்றைச் சொல்ல இயலும்.

வட்டார மொழிகளுக்கான வளர்ச்சிக்காக நிறுவப்பட்டுள்ள துறைகளில் இந்தி மொழிக்கு அடுத்தநிலையில் எண்ணிக்கையில் அதிகமான துறை தமிழ் மொழி வளர்ச்சிக்காகவே அமைந்துள்ளது. இருப்பினும், நினைத்தவுடன் உண்மையான தகவல்களைத் தெரிந்து கொள்வதற்கான பார்வை நூல்கள் அதிகம் இல்லை. ஓர் ஆய்வு நிலையம் வெளியிட்டுள்ள தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்களில் ஐம்பது விழுக்காட்டிற்கு மேல், ஊர்களைப் பற்றிய வரலாற்றிற்குப் புறம்பாக - உண்மைக்குப் புறம்பான பல பொய்யான தகவல்கள் தரப்பட்டுள்ளன. தஞ்சாவூரைப் பற்றிச் சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்னர் ஓர் ஆங்கிலேயர் சான்றாதாரங்களோடு கூறிய செய்திகளில் பத்தில் ஒன்று

கூட இன்று தஞ்சையைப் பற்றி எழுத முடியவில்லை. இதற்குரிய காரணத்தைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மிக அண்மைக்காலத்தில் வெளியான ஆய்வுத் தலைப்புக்களையும் அவை பற்றிய தகவல்களையும் தரும் 'தமிழ் ஆய்வியல்' நூலில் கூடத் தவறான தகவல்கள் இடம் பெற்றுள்ளன. இதற்கு நம்மிடையே உள்ள உழைப்பின்மையும், கவனக்குறைவும், அவசரமும்தான் காரணம் எனலாம்.

எனவே, அவசரப்படாமல், பொறுமையாகக் கவனத்துடன் சார்பற்ற நிலையில் உண்மைத் தகவல்களைப் பார்வை நூற்களில் தருதல் மிகவும் இன்றியமையாத ஒன்று. ஏன்னென்றால் பார்வை நூல்களின் தவறுகள் பல தவறான ஆய்வு முடிவுகளை உருவாக்க வாய்ப்பளிக்கும்.

ஆங்கில நூற்களில் காணப்படுகின்ற Companion, Hand Book, Accordance, Guidance, Glossary போன்ற வகையில் பார்வை நூற்கள் பல தமிழில் வர வேண்டும். பார்வை நூற்களைப் பற்றிய தகவல் நூற்கள் ஆண்டுதோறும் வெளிவர வேண்டும்.

பல்வேறு கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள், ஆய்வு நிறுவனங்கள் ஆகியவற்றில் பல நிலைகளில் தமிழ் ஆய்வுகள் நிகழ்கின்றன. ஆனால் அவற்றிற்கிடையே சரியான தொடர்பு (Co-ordination) இல்லாததினாலோ பிறவற்றாலோ செய்த பணியையே மீண்டும் செய்யும் நிலை ஏற்படுகிறது. ஒரு குறிப்பிட்ட துறையில், இதுகாறும் எத்தகைய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன என்பது பற்றிய சரியான தகவல்கள் இல்லாமையால், முறையான ஆய்வுகள் நிகழவில்லை. எனவே இக்குறையைப் போக்கும் வகையில், ஒரு Ready Reckoner போல, நாளது வரையிலும் நடைபெற்று வரும் ஆய்வுகளைப் பற்றிய தகவல்கள் அவ்வப்பொழுது ஆய்வு மாணவர்களின் பார்வைக்குக் கிடைக்கும்படி ஒரு குறிப்பிட்ட துறையில் ஆய்வு செய்ய விழைவோருக்கு Source Materials தொடர்பாகத் தகவல்கள் எளிமையாகக் கிடைக்க வேண்டிய வாய்ப்பு ஏற்பட வேண்டும்.

இலக்கிய ஆய்வு தொடர்பாக, பிற இலக்கியங்களில் படைப்புக்கள், ஆய்வுகள் எந்த நிலையில் எவ்வாறு வளர்ச்சி பெற்றுள்ளன என்ற தகவல்கள் எளிமையாகக் கிடைக்கும் வகையில் பார்வை நூல்கள் அமைய வேண்டும்.

# புதுக்கருத்துத் தேடல்கள்

மா. இராமலிங்கம்

இலக்கிய வரலாறென்பது ஒரு வகையில் கருத்துக்களின் வரலாறேயாம். ஒவ்வொரு காலத்தும் அவ்வக் காலத்திற்கேற்ப வாழ்க்கை பற்றிய சிந்தனைகளும் அவற்றின் விளைவான கருத்துக்களும் மாறிமாறியே வந்துள்ளன. இந்த மாற்றமே உலகத்தின் மாறாப் பண்பு. படைப்பு என்பது சொற்களின் நகலெடுப்பு (Transcription of words); சொற்கள் கருத்துக்களின் நகலெடுப்பு; கருத்துக்கள் வாழும் வாழ்வின் நகலெடுப்பு. கருத்துக்களின் தோற்றம் அவ்வக்கால வாழ்க்கையை நிலைக்களமாகக் கொண்டதாதலின் 'எல்லாக் காலத்துக்கும் ஏற்ற இலக்கியம்' என நாம் எதனையும் சுட்ட முடியாது. அவ்வாறு பேசுவதெல்லாம் ஆர்வநிலைக் கூற்றுக்களேயன்றி அறிவியற்பார்வை உடையனவாகா. தோன்றும் எதுவாயினும் அதற்கென ஒரு தேவையும் பயன்பாடும் உண்டு. அவை இருக்கும்வரை அது வாழ்வுபெறும். தேவைகள் நிறைவு செய்யப்படும் பயன்பாடு தீர்ந்து போகிறபோது அதன் வாழ்வு முற்றுப்பெறும். புதிய தேவையும் புதிய பயன்பாடும் எழும்போது அவற்றை நிறைவு செய்ய வல்லன புதியனவேயன்றிப் பழையனவல்ல. இவ்வுண்மையை முதலில் அறிந்தவர் பாரதியாரேயாவர். "காலத்திற்கேற்ற வகையில் - அவ்வக் காலத்திற் கேற்ற ஒழுக்கமும் ஞாலம் முழுமைக்கும் ஒன்றாய் - எந்த நாளும் நிலைத்திடும் நூலொன்று இல்லை" என்னும் பாரதியின் பாட்டுவரிகள் நாம் பலகால் ஆழ்ந்து சிந்தித்தற்குரியன.

வாழ்க்கையில் வேறு எதனையும் விட முக்கியமானது வாழ்க்கையே. வாழ்வு வாழ்வதிலேயே அடங்கியுள்ளது. இந்த வாழ்வின் சகல பரிமாணங்களையும் காட்டவல்லவன் எழுத்தாளனே. ஒரு மெய்யியல் அறிஞரோ, சமயவாதியோ, அறிவியல் முனைவரோ வாழ்வின் ஒவ்வொரு கூறுகளை மட்டுமே பேசுவர். எழுத்தாளன் ஒருவனே, உயிருள்ள-முழுமையான-மனித வாழ்வைப் பற்றிப் பேசுகிறான். வாழ்வின் மேம்பாடு படைப்பாளனின் சிந்தனை வளத்தை ஒட்டியதே. இக்கால வாழ்க்கை சிக்குண்ட நூல்போல் ஆகிவிட்டது. ஒரு சிக்கலை மெல்ல அவிழ்க்கிறபோதே மற்றொரு சிக்கல் உண்டாகிவிடுகிறது. இன்றைய சமூகப் பொருளாதார அமைப்பின் காரணமாக வாழ்க்கைச் சிக்கல் வெட்ட வெட்டத் தளிர்க்கும் முட்புதராகிவிட்டது. காலூன்றி நிற்கத் தளமோ,

கைநீட்டிப் பிடித்துக்கொள்ளப் பற்றுக்கோடோ கிட்டாமல் தவிப்பது போல மனிதன் வாழ்ந்து கொண்டிருக்கின்றான். அவன் எவற்றையெல்லாம் நம்பிக்கைக்குரியனவாகக் கருதிவந்தானோ அவையனைத்தும் (கடவுள், சமயம், மனித உறவுகள், கட்சி அமைப்புகள், கொள்கைகள் போல்வன) அவனைக் கைவிட்டு விட்டன. மணலில் நடப்பது போல் வாழ்க்கை எளிதாக இல்லை; வழுக்கல் நிலத்திலே ஊன்றுக் கோலின்றி நடப்பதுபோல் விபத்துக்கள் பெருகிவிட்டன. எனவே இன்றைய வாழ்வைச் சீர்ப்படுத்தவும், செப்பனிடவும்; பழைய இலக்கியங்கள் பயன்படும் என்று எனக்குத் தோன்றவில்லை. (ஏதோ ஓரளவு பயன்படலாம், அதுவே சர்வ ரோக நிவாரணியாக இருத்தல் முடியாது) புதிய நோய்க்குப் புது மருந்து தேவை. நாளும் நாளும் புதிய முகங்களோடு வெளிப்பட்டு வருத்தும் புதுநோய்களுக்கு நம் பாட்டிகாலத்து இலேகியமும் சூரணமும் கஷாயமும் பயன்படுமா?

இலக்கிய ஆக்கம் என்று பேசுகிறபோது, நம் வரலாற்றில் வேறு எந்தக் காலப் பகுதியையும் விட, நாம் வாழும் இந்தக் காலமே இலக்கிய ஆக்கம் மிகுதியும் உள்ள காலம் எனலாம். உற்பத்திக் கருவிகள், உற்பத்தி முறை ஆகிய இரண்டனையும் ஒட்டிப் பொருள்கள் உருவாகின்றன. அவை பரவலாக்கப்படும் (விநியோகிக்கப்படும்) நெறியை ஒட்டி மக்களைச் சென்றடைகின்றன. உற்பததி செய்வோருக்கும், உற்பத்திக் கருவிகளை உடைமையாகக் கொண்டோருக்குமிடையே உள்ள உறவு முறையைப் பொறுத்தே பொருளின் தரமும் திறமும் அமையும். இத்தத்துவத்தை இலக்கிய ஆக்கத்திற்கும் நாம் ஏற்றிப் பார்க்கலாம். ஏட்டையும் எழுத்தாணியையும் கருவிகளாகக் கொண்டு, மெத்தப் படித்த ஒரு சிலர், அரசவைச் சூழலில் இலக்கியங்கள் படைக்க, அவை வாய்மொழியாக மக்களிடையே மெல்ல மெல்லப் பரவிய நிலையைப் பழங்காலத்தில் காணுகிறோம். அச்சியந்திரங்களைக் கருவியாகக் கொண்டு, ஓரளவு கற்றோரும், வெளியீட்டாளர்களின் ஆதரவில் அசுர வேகத்தில் எழுதித் தள்ளும் படைப்புகள் அதே வேகத்தில் சமுதாயத்தின் எல்லாத் தரப்பினரையும் சென்றடைவதை இக்கால நிலையானும், அச்சியந்திரங்களை உடைமையாகக் கொண்டிருக்கும் வெளியீட்டாளருடன் இலக்கிய ஆக்கத்தில் ஈடுபடும் எழுத்தாளன் பல்வேறு காரணங்களால் சமரச உடன்படிக்கை செய்து கொள்ள நேர்வதே இலக்கிய உலகில் நாம் காணும் உற்பத்தி உறவு முறையாகும். விட்டுக் கொடுக்கவும்-

தேவைப்படாமல் தன்னை விற்றுக்கொள்ளவும் அணியமாய் இருக்கும் படைப்பாளன் வெளியீட்டுரிமையாளரின் தேவையைத்தான் பூர்த்தி செய்வானேயன்றிப் புதிய கருத்துக்களைத் தேடும் தவத்தில் ஈடுபடமாட்டான், இக்காலப் படைப்புலகில் இன்று ஏற்பட்டிருக்கும் தேக்கத்திற்கும் நசிவிற்கும் இதுவே காரணம். இந் நசிவினினறும் விடுபட்டுத் தமிழ் இலக்கியம் மேம்பாடு அடைய வேண்டுமாயின் 'தேடல் நாட்டம்' படைப்பாளர் நெஞ்சில் தாகமாய் நின்று அவனை ஊக்குதல் வேண்டும்.

இக்காலத்தில் இலக்கிய ஆக்கமென்பது அரசியல், பொருளாதாரம், சமூக, கலாச்சார, ஆன்மீக இயக்கங்களால் பாதிக்கப்படுவதாக உள்ளது. போக்குவரத்து வசதி, மக்கள் தொடர்பியலின் பெருக்கம் ஆகியவற்றால் பரந்துபட்டதாயிருந்த இவ்வுலகம் கைப்பிடியளவு சுருங்கிவிட்டது, எனவே, உலகின் பிறவேறு பகுதிகளில் எழும் சிந்தனைகளும், வெளியீட்டு நெறிகளும் நாம் விரும்பினும் விரும்பாவிடிலும் நம்மைக் கட்டாயமாக வந்தடைகின்றன. ஜன்னல்களையும் கதவுகளையும் அடைத்து வைத்துக் கொண்டு நாம் உள்ளேயே இருத்தல் முடியாது. கொஞ்சம் திறந்தாலும் வெளிக்காற்று உள்ளே நுழையத்தான் செய்யும். உலகச் சிந்தனைகள் அறிவுப் பலகணி வழியாக உள்ளே நுழைந்து எழுத்தாளனின் நெஞ்சை ஆக்கிரமித்துக் கொள்வதை நாம் தடுக்க முடியுமா? இச்சூழலில், தன்னுள் வந்துபுகும் எதனையும் சரியான கோணத்தில் கண்டு, அதனைப் புரிந்து கொண்டு தேவையானதை எழுத்தாளன் ஏற்றுக் கொள்ளவே வேண்டும். பிடித்து வைத்த பிள்ளையார் போல் வாளா இருக்காமல், ஒளிபரப்பினை விரைந்து கிரகிக்கும் 'ஆன்டெனா' போல் எழுத்தாளன் உணர்வுச் சொரணை மிக்கவனாக மாறல் வேண்டும்.

மேலைநாட்டு இலக்கியச் சிந்தனையாளருள் ஒருவராகிய கவிஞர் டி.எஸ். ஏலியட் கையாண்டுள்ள ஓர் உவமையைக் கடன்வாங்கி என் போக்கில் இதனை விளக்க எண்ணுகிறேன். ஆக்ஸிஜனும் சல்பர்-டை-ஆக்ஸைடும் இணைந்த சல்பியூரிக் அமிலம் என்னும் புதிய பொருள் உருவாகிறது. இதனை உருவாக்க பிளாட்டினம் என்னும் உலோகத் தகடு கிரியா-ஊக்கியாக நின்று செயல்படுகிறது. இரு வேறு தனிமங்களுள் கலவையை உருவாக்கும் வாயிலாகப் பிளாட்டினம் செயல்படுகிறது. இலக்கிய ஆக்கத்தையும் இதுபோல் காணலாம். வாழ்வியல் அனுபவங்களும் முருகியல் உணர்வுமே இலக்கியப் படைப்பாகின்றன. இவ்விரண்டையும் எழுத்தாளன் தானே வாயிலாக நின்று

இணைக்கிறான்; வாழ்வியல் அனுபவமும் முருகியல் உணர்வும் இணையும் நிலையில் "கருத்துக்கள்" என்னும் ஒளியை எழுத்தாளனே ஏற்றுகிறான். கருத்தொளி படைப்பில் துலக்கமுறாதபோது அது வெறுஞ்சொற்குவியலாய் வறிதே நிற்கும்.

தேடல் நாட்டத்தோடு சிந்திக்க வேண்டும் என்று கூறுகிறபோது எழுத்தாளனுக்குச் சமுதாயம் பற்றிய நனவுபூர்வமான அறிவு தேவைப்படுகிறது. பிணங்கியும் ஊடாடியும், ஊடாடியும் பிணங்கியும் இயங்கும் மனித உறவுகளை அவன் தத்துவநோக்கில் புரிந்து கொள்ள வேண்டும். ஒரே நேரத்தில் மாற்றமும் வளர்ச்சியும், வளர்ச்சியும் மாற்றமும் மாறி மாறி நிகழும் இயங்கியலை உணர்தல் வேண்டும். சமூகப்-பொருளாதாரம் என்னும் அடித்தளத்திலேயே வாழ்வு என்னும் மேற்கட்டுமானம் அமைந்திருக்கும் நுட்பம் அவனுக்குப் புலனாக வேண்டும். அடித்தளம் மேற்கட்டுமானத்தை நிர்ணயிப்பதையும், மேற்கட்டுமானத்தில் ஏற்படும் சலனங்கள் அடிக்கட்டுமானத்தை மாற்றுவதையும் அவன் புரிந்து கொள்ளவேண்டும். இந்த நிலையில்தான் தான் யார்? தன் பங்கு யாது? தான் ஆற்றவேண்டிய கடமையாது? தாம் உணர்த்த வேண்டிய சிந்தனைகள் யாவை? என்பதெல்லாம் புலப்படும்.

இக்காலத் தமிழ்ப் படைப்பாளிகளில் பேசப்படும் நுவல்பொருள்கள் யாவை? மேலோட்டமான போதையூட்டும் காதல் உணர்வுகள், மனித மனங்களை வக்கரிக்கச் செய்யும் இழிந்த பாலுணர்வுகள், கொலை கொள்ளை போன்ற குற்றம் சார்ந்த செயற்பாடுகள், இவையே பெரும்பான்மையும் பேசப்படுகின்றன. இவற்றைக் கடந்து புதிய கருத்துக்களைத் தேடும் பார்வையை நம் எழுத்தாளர்கள் பெறவேண்டாமா?

இன்றைய பொருளாதார அமைப்பில் இலாப வேட்டையே மேலோங்கியிருப்பதால், இலக்கியப் படைப்பும் வாணிகமாகிவிட்டது. "இம்மை செய்தது மறுமைக்கு ஆமென்னும் அறவிலை வாணிகம்" எனப் புறநானூற்றில் ஒரு அடி உண்டு. அங்கே பேசப்பட்டது அறவிலை வாணிகம். இன்றை நாளில் நாம் காண்பது தமிழ் விலை வாணிகம். "இவ்வாறு எழுதினால் இதற்கு ஆம் என எண்ணும் இலக்கிய விலை வாணிகம்." இந்த வாணிகம் ஒழிந்தாலன்றி நாம் புதுக்கருத்துக்களைத் தேட முடியாது.

நாம் இன்று அறிவியல் - தொழில் நுட்ப யுகத்தில் வாழ்ந்து வருகிறோம். இதன் விளைவாக மனித உறவுகள் எவ்வாறு மாறியிருக்கின்றன?

இயந்திரங்களும் நவீன கருவிகளும் இருப்பதால் சமுதாயத்தில் அனைவரும் ஓய்வும் மகிழ்ச்சியும் இருப்பதுதானே முறை? இவ்வாறு இருக்கிறதா? மாறாக, வேலையில்லாத் திண்டாட்டமும் அவலமுந்தானே எஞ்சியுள்ளன! இதற்குக் காரணங்கள் யாவை? நம் நாடு விடுதலை பெற்று நாற்பதாண்டுகட்கு மேலாகியும் மக்களின் வாழ்க்கைத் தரம் உயரவில்லையே, ஏன்? எல்லோர்க்கும் எல்லாம் கிட்டக்கூடிய ஒப்பற்ற சமுதாயத்தை அமைக்க நாம் மேற்கொண்டிருக்கும் ஜனநாயக நெறி பயன்பட்டிருக்கிறதா? அரசியல் என்னும் சதுரங்கத்தில் வல்லமை பெற்றோர் மக்களைப் பகடைக் காய்களாக உருட்டி விளையாடுவது ஏன்? இப்படி எத்தனை எத்தனையோ வினாக்கள் நம்முள் எழவேண்டுமே! இவையெல்லாம் இலக்கிய ஆக்கத்திற்கு உரியன அல்லவா?

நம்நாடு விடுதலை பெற்ற பின்னர், நாம் எத்தனையோ வரலாற்று முதன்மை வாய்ந்த நிகழ்ச்சிகளையெல்லாம் தாண்டி வந்திருக்கிறோம். இந்திய-சீனப் போர் ஒருமுறை நிகழ்ந்தது. அவ்வப்போது வகுப்புக் கலவரங்கள் வெடித்துச் சிதறின. ஆங்காங்கே வன்முறையில் மதமாற்றங்கள் நிகழ்ந்தன; ஒவ்வொரு மாநிலத்திலும் மக்கள் எழுச்சியும் ஏற்பட்டன. நக்ஸலைட் என்னும் இளைஞர் இயக்கம பூதாகாரமாக எழுந்தது. ஆலைமுதலாளிகட்கும் தொழிலாளர்களுக்குமிடையே போராட்டங்கள் எழுந்தன. தெலுங்கானாவிலும் கீழ்வெண்மணியிலும் விவசாயிகளின் புரட்சி நடந்தன. அதிகாரத் துஷ்பிரயோகங்களும் கையூட்டு லாவண்யமும் பார்க்குமிடமெல்லாம் நீக்கமற நிறைந்தன. மொழியின் காரணமாகக் கிளர்ச்சிகள் நடந்தன. வங்கநாட்டிலிருந்தும் ஈழத்திலிருந்தும் ஒடுக்கப்பட்ட மக்கள் நம் நாட்டிற்கு அகதிகளாக ஓடிவந்தனர். போபால் நகரத்தில் நச்சுக் காற்றின் கசிவால் பல்லாயிரக் கணக்கான மக்கள் பாதிக்கப்பட்டனர். அமைதியாக இயங்க வேண்டிய கல்வி நிலையங்கள் ஆரவாரப் பாசறைகளாயின. வழிபடத்தக்க கோயில்கள் ஆயுதக் கிடங்குகளாக மாறின. சமுதாயத்தின் இந்த இயல்பு நிகழ்வுகளை ஊடுருவிக்கண்டு இப் பிரச்சினைகளைப் பின்னணியாகவும் நுவல்பொருளாகவும் கொண்டு புதிய கருத்துக்களைத் தரும் படைப்பில் நம் எழுத்தாளர்கள் மேலே காட்டிய சிற்சில பிரச்சினைகளைத் தொடமுயன்றிருக்கிறார்கள்; தொட்டிருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன் எனினும் பொது நிலையிலேயே நான் பேசுகிறேன்.

சமுதாயத்தில் இயல்-நிகழ்வுகளே இலக்கியப் படைப்பிற்கு மூலப்பொருளாகும். மூலப் பொருள் கையிருப்பில் இருப்பதாலேயே ஒருவன்

செய்திறன் மிக்க பொருளை உருவாக்கிவிடமுடியாது. படைப்பாளனுக்குச் சரியான "பார்வை" அமைய வேண்டும். 'பார்வை' என்பது எதையும் சரியான தொலைவணிமைத் தகவில் காண்பதாகும். புிறழ்நிலையில் அமைந்த பார்வை உண்மை காண உதவாது. ஓர் எடுத்துக்காட்டைக் காண்போம். வேலைநிறுத்தம் செய்யும் தொழிலாளர்களை வைத்து ஒருவர் புனைகதை படைக்கிறார் என வைத்துக் கொள்வோம். அக்கதையைப் படித்து முடிக்கும் போது, 'தொழிலாளர்கள் உண்ட சோற்றுக்கு இரண்டகம் விளைப்போர்; கடமையைத்தான் செய்யவேண்டுமே தவிரப் பயனை எதிர்பார்த்தல் கூடாது' என்னும் கருத்து முனைப்பாக வெளிப்படலாம். அதே கதையை இன்னொருவர் எழுதும் போது 'மனிதர் உணவை மனிதர் பறிக்கும் வழக்கம் மாறவேண்டும்' என்னும் கருத்து புலப்படலாம். இரண்டு கருத்துக்களும் தம்மளவில் சரியே என்றாலும் எடுத்துக் கொண்ட பிரச்சினைக்குரிய கதையில் காட்டப்பட வேண்டிய கருதது எது என்று எழுதுவோர் சிந்திக்க வேண்டும். மக்கள் மேம்பாட்டிற்கான கருத்து எதுவோ, அதுவே முனைப்பாகத் தெரியும் வகையில் கதையைப் படைக்கவேண்டும். இக்கருத்து வார்ப்பையே 'பார்வை' என்னும் சொல்லால் நான் குறிபபிடுகிறேன்.

ஒரே பிரச்சினையைப் பல்வேறு கோணங்களில் பல்வேறு பார்வையில் காணமுடியும என்பது உண்மையே எனினும் எந்தப் 'பார்வை' மனித குல மேம்பாட்டிற்கு வழிவகுக்கிறதோ எந்தப் பார்வை சமுதாய வளர்ச்சியின் முன்னோக்கிய இயக்கத்திற்குத் தன் பங்கை அளிக்கிறதோ அதுவே விழுமிய பார்வையாகும். தமிழ் மேம்பாடு காண விழைவோர் இத்தகு சரியான பார்வையைப் பெறுவதே கருத்துத் தேடலுக்கு வழியாகும்.

# இலக்கியமேம்பாடு நோக்கில் புதிய உத்திகளின் அறிமுகமும் நயப்படுத்தலும்

க.ப. அறவாணன்

இந்தியா விடுதலை பெற்ற பிறகு, தமிழ் இலக்கியத்தின் அரை நூற்றாண்டு வளர்ச்சியைப் பின்வருமாறு வகைப்படுத்திக் கொள்ளலாம்.

1. சிறுகதை இலக்கியம்
2. புதின இலக்கியம்
3. கவிதை இலக்கியம்
4. கட்டுரை இலக்கியம்
5. நாடக இலக்கியம்

சிறுகதை இலக்கியமும், புதின இலக்கியமும் பெருகி வளர இக்காலத்து வார, மாத இதழ்கள் பெருங்காரணங்களாக இருந்து வந்தன; இருந்து வருகின்றன. கவிதை இலக்கியம் வளர, 30 விழுக்காடு இதழ்களும், 50 விழுக்காடு கவியரங்குகளும், 20 விழுக்காடு பதிப்பகங்களும் காரணம் எனலாம். கட்டுரை இலக்கியத்தின் வளர்ச்சிக்கு 60 விழுக்காடு தனியாரும், பதிப்பகங்களும், 20 விழுக்காடு இதழ்களும், 20 விழுக்காடு மலர்களும் காரணமாக இருந்தன; இருந்து வருகின்றன. நாடகம் வளர 90 விழுக்காடு நாடக அரங்குகளும், 10 விழுக்காடு ஏடுகளும் காரணமாக இருந்தன; இருந்து வருகின்றன.

1947 வாக்கில் 10 விழுக்காடாக இருந்து படித்தோர் தொகை தற்போது 40 விழுக்காடாக வளர்ந்து. அதற்கேற்பத் தமிழில் வார இதழ்கள் 10 மடங்கும், மாத இதழ்கள் 5 மடங்கும், நாளிதழ்கள் 10 மடங்கும் பெருகி இருக்கின்றன. இதனால், தமிழ் வாசகர் வட்டம் 1947இல் இருந்ததைவிட விரிவு அடைந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. விடுதலைக்குப் பிறகு வளர்ந்த பொது நூலகங்களும், நடமாடும் நூலகங்களும், பள்ளி கல்லூரி, பல்கலைக்கழகப் பெருக்கங்களும் பெரும் துணையாக இருந்தன. ஆனால், இவை அனைத்தும் போதுமான வளர்ச்சியைக் காட்டுகின்றனவா என்பது கேள்விக்குரியது.

"கடந்த 1981ஆம் ஆண்டில் எடுத்த கணக்கெடுப்புப்படி இந்நாட்டின் கல்வி பெற்றோர் 37 சதவீதமாகும். 1971ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட கணக்கைவிட 7 சதவீதம் அதிகமாகும். இதனால், கல்வியறிவு அற்றவர்களின் எண்ணிக்கை குறைந்து விட்டதாகக் கருதிவிட முடியாது. அதற்கு மாறாக மக்கட்தொகை அதிகமாகிவிட்ட காரணத்தால் இன்று இந்தியாவில் எழுதப்படிக்கத் தெரியாதோரின் எண்ணிக்கை 4.8 கோடி ஆகும்".

1984 ஆவது ஆண்டு வரையுள்ள புள்ளிவிவரப்படி இந்தியாவில் 15 மொழிகளையும் சேர்த்து 20,000 நூல்களே வெளிவந்துள்ளன. இந்தத் தொகையில் ஏறத்தாழ 40 விழுக்காடு ஆங்கில நூல்களாகும். 1984ஆவது ஆண்டுக் கணக்குப்படி சோவியத் ஒனறியம் 82,790 தலைப்புகளில் நூல்களை வெளியிட்டு இருக்கிறது. ஆசிய நாடான சப்பான் 44,255 தலைபபுகளில் நூல்களை வெளியிட்டு இருக்கிறது. மிகச் சிறிய நாடான கொரியா 35,446 தலைப்புகளில் நூல்களை வெளியிட்டு இருக்கிறது. ஏறத்தாழ 70 கோடி மக்கள் தொகையுடைய இந்தியப் பெருநாட்டில் 20,000 நூல்களே வெளிவந்துள்ளன என்பதை ஒப்பிடும்போது, நம் நாட்டின் அறிவு வெளிப்பாட்டு வறுமை தெளிவுபடும்".

எனவே, உலக நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கிறபோது, தமிழ் மொழியில் இலக்கிய வளர்ச்சி எனபது மிகப் பினதங்கி இருக்கிறது என்பது தெளிவு. இலக்கிய வளர்ச்சியும் கூட, இலக்கிய வளர்ச்சி என்ற தலைப்புககு உட்பட்டதுதானா என்பது கருதத் தக்கது. இலக்கியததை உயர் இலககியம் (Classic Literature), பாமர இலக்கியம் (Popular Literature) என்று வகைபபடுத்திக் கொண்டோமேயானால், தமிழில் வளர்நதிருப்பது பாமரத் தமிழ் இலக்கியம் என்ற உணமை விளங்கும். இதனை இதழ்களைச சாந்து சிறுகதைகளும், புதினங்களும் வளர்ந்து இருப்பதும், பாமர மக்கள் நிறுவனமாகத் திரை வழி, நாடக இலக்கியம் வளர்ந்து இருப்பதும், வளர்ந்து இருப்பது உயர்நிலை இலக்கியம் அன்று பாமர இலக்கியம் என்பதை உறுதிப்படுத்தும். ஏனைய மொழிக்காரர்களும் ஒப்புக் கொள்ளும் உயர்நிலை இலக்கியங்கள் வளரவில்லை என்பததை தமிழ் பெற்றுவரும் 'பாரதீய ஞான பீடப் பரிசு' எண்ணிக்கையும் எடுத்துரைக்கும். சான்றாக, இந்தி, கன்னடம், மலையாளம், வங்காளம் ஆகிய மொழிகள் ஒன்றிற்கு மேற்பட்ட தடவை பாரதீய ஞான பீடப் பரிசைப் பெற்றிருந்து, தமிழ் ஒரே ஒரு பரிசில் நிற்பது

இதனை மறைமுகமாக வற்புறுத்துவது ஆகும். நம்முடைய படைப்புகளுள் பெரும்பாலன இலக்கிய ஆய்வாளர்களுக்குரிய இலக்கியப் படைப்புகளாகப் படைக்கப் பெற்றன என்று கூறல்இயலாது. அந்தந்த வாரம் இதழ்வழி எதிர்நோக்கும் பொழுது போக்கு வாசகர்களுக்குத் தீனிபோடும் நோக்கிலேயே இதழ்ப் படைப்புகள் படைக்கப் பெறுகின்றன. ஒரு சில விதிவிலக்காக இருத்தல் கூடும். நம்முடைய இலக்கிய வளர்ச்சி சிறப்பான நிலையை எய்தாமைக்கு வாசகர்களின் பொழுதுபோக்கு நோக்கும், இதழ்களின் காசு நோக்குப் போக்கும் தலையாய காரணங்கள்.

கட்டுரை இலக்கியம், உலக மொழிகளில் குறைந்த அளவே படைக்கப் பெறுகின்றன. அமெரிக்காவில் 7 விழுக்காடு, சோவியத் நாட்டில் 12 விழுக்காடு, பிரிட்டனில் 21 விழுக்காடு. ஆனால் தமிழில் இது கிட்டத்தட்ட 60 விழுக்காடு என்று சொல்லலாம். ஆனால் 60 விழுக்காடு இலக்கியமும், இலக்கியங்களைப் பற்றிய விளக்கக் கட்டுரைகளாகவும், 5 விழுக்காடு இலக்கியங்களைப் பற்றிய விளக்க கட்டுரைகளாகவும், 5 விழுக்காடு சமயக் கட்டுரைகளாகவும், 5 விழுக்காடு திறனாய்வாகவும் கட்டுரை அமைகின்றது. ஏனவே, சுய சிந்தனைகள் நிறைந்த கட்டுரை இலக்கியம் தமிழில் வளரவில்லை.

இந்தியாவின் முக்கிய மொழி வெளியீடுகளைப் பற்றியும் இந்திய ஆசிரியர்களால் எழுதப்படும் ஆங்கிலப் படைப்புகள் பற்றியும் அறியக் கீழே கொடுக்கப்பட்டுள்ள குறிப்புகள் உதவும். அண்மையில் ஓர் ஆண்டில் இந்தியாவில் 21,265 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. அஸ்ஸாமிய மொழியில் 77, வங்காளியில் 1,302, ஆங்கிலத்தில் 10,438, குசராத்தியில் 972, இந்தியில் 2,633, கன்னடத்தில 306, மலையாளத்தில் 595, மராத்தியில் 1,514, ஒரியாவில் 322, பஞ்சாபில் 597, சமஸ்கிருதத்தில் 177, தமிழில் 910, தெலுங்கில் 817, உருதுவில் 352, மற்ற மொழிகளில் 253. இவற்றில் 33 சதவீதம் இலக்கியங்கள்.

ஏடுகள் வளர்க்கும் கட்டுரை இலக்கியம் கூட, திரைப்படத் திறனாய்வாகவும், நடிக, நடிகையர்களின் வாழ்க்கைக் குறிப்பாகவும், கட்சி உணர்வுடைய அரசியல் குழப்பங்களாகவுமே பெரும்பாலும் அமைகின்றன. இவை அனைத்தும் அன்றாட இலக்கியங்கள்; பொன்றும் படைப்புகள்; பொன்றாப் படைப்புகள் அல்ல.

ஆங்கிலத்தில் வெளிவரும் நாளிதழ்களையும், அவற்றுள் இடம்பெறும் கட்டுரைகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால், நம் கட்டுரை இலக்கியத்தின் தொய்வு மிகத் தெளிவாகப் புலப்படும். அந்த வகையில் செப்டம்பர் 1988இல் வெளிவந்த இந்து, தினமணி, தினமலர், தினத்தந்தி ஆகிய நான்கு இதழ்களிலும் வந்துள்ள கட்டுரைகளைப் பற்றிய புள்ளிவிவரம் இங்கே பாகுபாடு செய்து தரப்பெற்றுள்ளது. இப்பாகுபாடுகளில் இருந்து தமிழ ஏடுகள் கட்டுரை இலக்கியத்தை வெளியிடுவதில் எத்தனை பின்தங்கியிருக்கின்றன என்பதை வெட்ட வெளிச்சமாகத் தெரிந்துகொள்ளலாம்.

## தினமணி

| | | |
|---|---|---|
| மொத்தப் பககங்கள் | | : 256 |
| அரசியல | – 8 / 256 | : 3.12 % |
| இலக்கியம் | – 4½ / 256 | : 1.75% |
| வேளாண்மை | – 2 ½ /256 | : 0.9% |
| அறிவியல் | – 16 / 256 | : 6.25% |
| பிற | – 4 ½ / 256 | : 1.66 |
| பொருளியல் | – 2 / 256 | : 0.78% |

## தினத்தந்தி

| | | |
|---|---|---|
| மொத்தப் பக்கங்கள் | | : 438 |
| அரசியல் | – ½ / 438 | : 0.114% |
| சமூகம் | – ½ / 438 | : 0.114% |
| பயணக கட்டுரை | – 1 / 438 | : 0.228% |

## இந்து

| | | |
|---|---|---|
| மொத்தப் பக்கங்கள் | | : 680 |
| அரசியல் | – 7/680 | : 1.02% |
| நீதி | – 11/4/680 | : 0.18% |
| தத்துவம் | – ¼ / 680 | :0.03% |
| மருத்துவம் | – ¾ / 680 | : 0.11% |

| | | |
|---|---|---|
| பொருளியல் | – 2¼ / 680 | : 0.33% |
| அறிவியல் | – 1 / 680 | : 0.14% |
| சமாதானம் | – 2½ / 680 | : 0.33 % |

1. நான்கு நாளிதழ்கள் கணக்கெடுப்புக்கு எடுத்துக் கொள்ளப் பெற்றன. அதில் 'தினமலர்' நாளிதழில் எவ்விதக் கட்டுரையும் இடம் பெற்றிலது.
2. வார மலர்கள் கணக்கில் எடுத்துக் கொள்ளப் பெறவில்லை.
3. தினமணியில் எல்லா நாட்களிலும் கட்டுரை இடம் பெற்றது.
4. தினத்தந்தியில் ஐந்து நாட்கள் மட்டுமே கட்டுரை வெளிவந்துள்ளது.
5. இந்து நாளிதழில் 24 நாட்கள் மட்டுமே கட்டுரை வெளியிடப் பெற்றுள்ளது.

இந்நிலையில் நம்முடைய இலக்கிய மேம்பாடு சுதந்திரத்திற்குப் பின், சுதந்திரத்திற்கு முந்திய நிலையைவிட வளர்ந்தது என்பதும், அவ்வளர்ச்சி இந்திய மொழிகளோடு ஒப்பிடும்போது போதுமானதாக இல்லை என்பதும், உலக மொழிகளோடு ஒப்பிடும்போது அவ்வளர்ச்சி மிகப் பரிதாபகரமானது என்பதும் தெளிவு. இந்நிலையிலிருந்து விடுபடத் தமிழ் இலக்கிய மேம்பாட்டை உலக அளவிற்கு உயர்த்த என்ன என்ன புதிய உத்திகளை, முயற்சிகளை நாம் மேற்கொள்ளலாம் என்பது ஆராயத்தக்கது.

1. அடிப்படைத் தேவையான கல்வியை நூற்றுக்கு நூறாக நாம் ஆக்கிக் காட்டுதல் வேண்டும். அஃது இயலக் கூடியதே. சான்றாக; சோமாலி நாட்டிலும், சீன நாட்டிலும் இதைச் செயல்படுத்திக் காட்டியிருக்கிறார்கள். எழுத்து வடிவமே இல்லாத சோமாலி மொழிக்கு எழுத்து வடிவம் அமைத்தனர். ஓர் ஆண்டிற்குப் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகங்கள் ஆகியவற்றிற்கு விடுமுறை விட்டனர். படித்துக் கொண்டிருந்த மாணாக்கர்களையும், பயின்று கொண்டிருந்த ஆசிரியர்களையும் பிரிவு பிரிவாகச் சோமாலி நாட்டில் உள்ள சிற்றூர் எங்கும் சரியான பயிற்சி அளித்து அனுப்பினர். முதியோர் கல்வியும், கட்டாயக் கல்வியும் பயிற்சி பெற்ற மாணாக்கர்களாலும், ஆசிரியர்களாலும் வழங்கப் பெற்றன. ஒரே ஆண்டில் 60 விழுக்காடு கல்வி அளவைச் சோமாலி நாடு எய்தியது. இது போன்ற ஓர் அரிய முயற்சி, சீன நாட்டிலும் மேற்கொள்ளப் பெற்றது. தமிழ் நாட்டில் நூற்றுக்கு நூறு கல்வி விழுக்காட்டை அடைந்தே

தீருவது. அதனை ஐந்தே ஆண்டுகளில் சாதித்தே தீருவது என்று அரசு கடுமையான ஒரு முடிவை எடுத்துச் செயல்படுத்துதல் வேண்டும்.

2. வங்காளம், மலையாளம், இந்தி போன்ற இந்திய மொழிகளில் சிறந்த சிறுகதைகள் புதினங்கள், நாடகங்கள் ஆகியன வெளிவருகின்றன. பிரஞ்சு, ஆங்கிலம், உருசியம், சீனம், சப்பான் ஆகிய மொழிகளில் சிறந்த இலக்கியப் படைப்புகள் வெளிவருகின்றன. அவை அனைத்தையும் உடனுக்குடன் இயல்பான தமிழில் மொழிபெயர்த்து அளிக்கும் மொழிபெயர்ப்பு இயக்கம் அனைத்து நிறுவனங்களிலும், பல்கலைக்கழகங்களிலும் அமைக்கப் பெற வேண்டும். வேற்று மொழிகளில் இருந்து அனைத்துச் செய்திகளையும் தமிழுக்கு இறக்குமதி செய்ய உழைத்தல் வேண்டும்.

3. தமிழில் சிறந்த சிறுகதைகள், புதினங்கள், கவிதைகள், கட்டுரைகள் படைக்கப் பெறும்போது அவை உடனுக்குடன் புகழ்பெற்ற இந்திய மொழிகளிலும், உலக மொழிகளிலும் மொழிபெயர்க்கப் பெறுதல் வேண்டும்.

4. இலக்கியம் ஒரே குறிப்பிட்ட பாட்டையில் எழுதப்படுவது, சொல்லப்படுவது தவிர்க்கப் பெறும், புதிய பாணியில் படைக்கப் பெறும் படைப்புகளை ஊக்கப்படுத்துதல் வேண்டும். இந்த வகையில் வெளிவரும் படைப்புகளை வாங்குவதிலும், பள்ளி நூலகம், கல்லூரி நூலகம், பல்கலைக்கழக நூலகம், பொது நூலகம் ஆகியவற்றின் வழி பரப்புவதிலும் அரசு தனி அக்கறை கொள்ளுதல் வேண்டும்.

5. நூல்களைப் படிக்கும் பழக்கத்தைப் பள்ளிப்பருவத்தில் இருந்தே வளர்க்க வழிவகை தேட வேண்டும். படிக்கும் பழக்கம் வளர்க்கப் பெற்றால்தான், வாங்கும் பழக்கம் பல்கிப் பெருகும். எனவே, நூல்களைப் படித்தல், பயன்படுத்தல் ஆகியவற்றை ஊக்குவிக்கும் முறைகளைக் கற்கும் பருவத்துப் பல்வேறு கட்டங்களில் அறிமுகப்படுத்த வேண்டும்.

6. நல்ல இலக்கியங்கள் எழுதப்பட்டாலும், விற்பனை நோக்கில் பதிப்பகத்தார்கள் ஏற்பது இல்லை. எனவே, சிறந்த இலக்கியங்கள் வெளிவராமல் புதையுண்டு விடுகின்றன. அதனால் சிறந்த படைப்பாளர்கள் புதிய இலக்கியங்களைப் புதிய உத்திகளில் எழுதும் முயற்சிகளில் இறங்குவது இல்லை. இதனை மாற்றச் சிறந்த நூல்களை வெளிக்கொணர கூட்டுறவு முறை அமைப்புகளை மாவட்டந்தோறும் ஏற்படுத்த வேண்டும்.

# தமிழில் இலக்கிய மொழிபெயர்ப்புப் பணி

ப. மருதநாயகம்

எம்மொழியின் ஆக்கத்திற்கும் மொழிபெயர்ப்புப் பணி இன்றியமையாததாகும். உலகளாவிய இலக்கியத் தாக்கங்களுக்கு இது அடிகோலும். ஏனைய மொழிகளில் உள்ள இலக்கிய வகைகளைப் புகுத்த உதவும்; ஒரு மொழியின் சொல்வளத்தையும் பொருள் நுட்பத்தையும் பெருக்கும்; புதிய குழுவினர் மற்றவரைப் புரிந்து கொள்ள வழி செய்து மனித இனத்தின் அடிப்படை ஒருமையை வெளிப்படக்காட்டும்.

*'எல்லா மொழி ஆறுகளும் சங்கமமாகும் பெருங்கடலாக என்மொழி இருக்கட்டும்'* என்றார் மலையாளக் கவிஞர் வள்ளத்தோள். இந்தியச் சூழலில் மொழிபெயர்ப்பின் தேவை மிகப் பெரிதாகும். நம் நாட்டில் பத்துக்கும் மேற்பட்ட பேரிலக்கியங்கள் "கோரிக்கையற்றுக் கிடக்குதண்ணே இங்குவேரில் பழுத்தபலா" என்ற நிலையில் பல காலமாகக் கேட்பாரற்றுக் குறுகிய மொழி எல்லைக்குள் முடங்கிக் கிடக்கின்றன. இவற்றின் தன்மையை அயல் நாட்டார் மட்டுமன்றி அண்டை மாநிலத்தார்கூட அறிந்து கொள்ளும் வாய்ப்பு இல்லை. இத்துறையில் சாகித்திய அகாடெமியின் முயற்சிகளாலும் தனிப்பட்ட சில வல்லுநர்களின் உழைப்பாலும் பெரும்பயன் ஏற்பட்டு விட்டதாகக் கூறவியலாது.

மொழி பெயர்ப்புத்துறையில் ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய ஐரோப்பிய இலக்கியங்களுக்குக் கிடைத்துள்ள வாய்ப்போடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இந்திய மொழிகளில் உள்ள நூல்கள் உலக அரங்கில் பெரும்பாலும் புறக்கணிக்கப்பட்டு வருகின்றனவென்றே சொல்லலாம். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தயாரித்துள்ள பழம் பட்டியல் ஒன்றின்படி தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டுள்ள நூல்கள் 274 ஆகும். மலையாளத்தில் 96-ம், தெலுங்கில் 60-ம், இந்தியில் 5-ம், கன்னடத்தில் 37-ம், சமஸ்கிருதத்தில் 37-ம், பெயர்க்கப்பட்டுள்ளன. ஏனைய மொழிகளிலிருந்து 280-ம், வங்காளிலிருந்து 210-ம், பிரெஞ்சிலிருந்து 81-ம், மராத்தியிலிருந்து 74-ம், தெலுங்கிலிருந்து 71-ம், மலையாளத்திலிருந்து 67-ம் கொண்டு

சேர்த்திருக்கிறோம். இப்பொழுது கணக்கெடுத்தாலும இத்தொகைகளில் பெருத்த மாறுதல்கள் இருக்கும் என்று எண்ண வழியில்லை.

சமஸ்கிருதம், தமிழ் ஆகிய இரண்டு மொழிகளிலிருநது மட்டுமே பழைய இலக்கியங்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளனவென்றும், ஏனைய இந்திய மொழிகள் ஒதுக்கப்பட்டுவிட்டன வென்றும் வங்கத் திறனாய்வாளர் ஒருவர் குறைபட்டுக் கொள்கிறார். ஆனால் திருக்குறளைத் தவிர மற்ற தமிழ் நூல்களின் ஆங்கில மொழிபெயர்ப்புகளால் மிகுந்த நலன் ஏதும் விளைந்ததாகத் தெரியவில்லை. குறுந்தொகை, பத்துப்பாட்டு, சிலம்பு, மணிமேகலை, திருவாசகம், கம்பராமாயணத்தின் அயோத்தியா காண்டம், நம்மாழ்வாரின் சில கவிதைகள் ஆகிவை மொழிபெயர்க்கப்பட்டிருப்பினும் இவ்விலக்கியங்களின் சிறப்பை வெளிஉலகிற்கு உணர்த்துவதில் நாம் வெற்றி பெற்று விட்டோம் என்று கூறுவதற்கில்லை. சங்க இலக்கியங்களில் சில மேலைநாட்டார்க்கு அறிமுகப்படுத்தப்பட்டிருப்பினும் இயற்கை வருணனையில் சீன நாட்டுச் செவ்வியல் இலக்கியங்களுக்குத் தமிழ் இலக்கியங்கள் ஈடாகாவென்று மேலை நாட்டுத் திறனாய்வாளர் ஒருவர் கூறுவதும், உலகப் பேரிலக்கியத் தொகுதிகளில் அவையொன்றும் சேர்க்கப்படாமையும் மொழிபெயர்ப்பின் குறிக்கோள் நிறைவேறவில்லையென்பதையே காட்டுகின்றன.

சிலப்பதிகாரத்திற்கும் இராமச்சநதிர தீட்சிதர், டேனியல், க.நா. சுப்பிரமணியம் ஆகியோரால் செய்யப்பட்ட மூன்று மொழிபெயர்ப்புகள் இருப்பினும் அதன் கட்டமைப்பின் சிறப்பும் இளங்கோ பெற்றுள்ள முருகியல் வெற்றியும் பிறரால் சுட்டும் பெருமை பெறவில்லை. ஆங்கிலத்தில் பலராலும் ஏனைய இருபதுக்கும் மேற்பட்ட மொழிகளிலும் எழுதப்பட்டுள்ள திருக்குறள் உலக அரங்கில் ,ஓரளவிற்குத் தன் பெயரை நிலைநாட்டியிருப்பினும் அது கூறும் பொது நெறி பாராட்டப்படுகின்றதேயன்றி, கவிதை உயர்வு அன்று என்பதும் நோக்கற்பாலது. நல்லெண்ணத்தோடு ஜி.யு. போப்பினால் ஆங்கிலத்தில் அறிமுகம் செய்யப்பட்ட மணிமேகலையும் பக்தி இலக்கியங்களின் மணி முடியெனக் கருதத்தகும் திருவாசகமும் எந்த விதமான சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. மணிமேகலைக்காக நாம் வருந்தாமல் போனாலும் திருவாசகம் அடைந்த நிலை நம் உள்ளத்தை உடைக்கவே செய்யும். சமயம், இசை, கவிதை இவை மூன்றும் இணைந்தமைந்த இலக்கியமே உயர்ந்தவற்றுள் உயர்ந்ததென்று டி.எஸ். எலியட் கூறுவார். அத்தகைய நூல்கள் மேலை

நாட்டு இலக்கியங்களில் விரல்விட்டு எண்ணக்கூடியவையே. அவற்றிற்கெல்லாம் எந்த விதத்திலும் குன்றாத பெருமையுடைய திருவாசகத்தின் அருமையை நமது மொழிபெயர்ப்புகள் உலகிற்கு உணர்த்த முடியவில்லை. உலகப் பெருங்காப்பியங்கள் எல்லாவற்றிற்கும் ஈடுகொடுக்கக் கூடியதென்று வ.வே.சு. அய்யரால் போற்றப்பட்ட கம்பராமாயணத்திற்கு இன்னும் முழுமையான ஆங்கில மொழிபெயர்ப்பே கிடைக்காத அவலநிலை இருந்து வருகிறது. தமிழர் ஒருவரால் செய்யப்பட்ட பாரதி கவிதைகளின் ஆங்கிலமொழிபெயர்ப்பை விமர்சித்த மேலைநாட்டுத் திறனாய்வாளர் கூறும் கருத்து கூர்ந்து ஆராயற்பாலது. அவர் சொல்கிறார், "பாரதி உலக மகாகவிகளில் ஒருவர் என்று தமது முன்னுரையில் மொழிபெயர்ப்பாளர் மீண்டும் மீண்டும் கூறுகின்றார்; ஆயினும் மொழிபெயர்ப்பைப் படிக்கும்பொழுது அவர் அந்தத் தகுதிக்கு உரியவர் என்ற எண்ணம் எமக்குக் கிஞ்சித்தும் தோன்றவில்லை. "சில இந்திய மொழிக் கதைகளின் ஆங்கில மொழிபெயர்ப்பைப் பற்றி சாடர்டே ரெவியூ எனும் பத்திரிகையில் விமரிசகர் இவைகளில் மன்னிக்க முடியாத அளவுக்கு எழுத்துப் பிழைகள், இலக்கணப் பிழைகள், கால வழுக்கள், வாக்கியச் சிதைவுகள், இன்ன பிற தவறுகள் மலிந்து கிடக்கின்றன" என்று கடுமையாகச் சாடுகிறார். நம்மவர்களில் பல மொழிபெயர்பபாளர்களின் ஆங்கிலம் பதினெட்டாம் நூற்றாண்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டு ஆங்கிலமாகவோ, அல்லது அமெரிக்கப் பத்திரிகைகளில் காணப்படும் பாமரநடை, மெகாலே போன்றவர்களின் கடின நடை ஆகியவற்றின் கூட்டுக் கலவையாகவோ அமைந்து ஆங்கிலத் திறனாய்வாளர்களின் எள்ளலுக்கு இலக்காய் உள்ளது. பிழையற்ற மொழியில் ஆங்கிலத்தைத் தாய் மொழியாகக் கொண்டவர்களால் செய்யப்பட்ட மொழி பெயர்ப்புகள் மூலநூலின் உயிரோட்டத்தைப் பெற இயலாது போயின. சுருங்கச் சொன்னால், மொழிபெயர்ப்புத் துறையில் நமது முதல் முயற்சிகளில் பல தவிர்க்க முடியாத பெரும் தோல்வியைத் தழுவியுள்ளன என்பதை நாம் ஒப்புக் கொண்டேயாக வேண்டும்.

ஆனால் இதனால் மனம் தளராது மறுமுயற்சிகள் பல நாம் மேற்கொள்ளவே வேண்டும். ஒரு நூலுக்கு ஒரே கொள்கையின் அடிப்படையில் அமைந்த ஒன்றுக்குமேற்பட்ட மொழிபெயர்ப்பும் வேறுபட்ட கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந்த பல மொழிபெயர்ப்புகளும் தேவையாகும். "கிரேக்கர்களுக்கு ஒரு ஹோமர்தான், எங்களுக்குப் பல ஹோமர்கள்" என்று

கூறிய ஆங்கில இலக்கிய விற்பன்னரின் கருத்து நினைவுகூரத் தக்கது. நமது இலக்கியங்களுக்கு மறு மதிப்பீடுகளைப் போன்றே பல மொழிபெயர்ப்புகளும இன்றியமையாதவை.

தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கோ, ஐரோப்பிய அல்லது இந்திய மொழிகளுக்கோ எவ்வெந் நூல்களைப் பெயர்க்க வேண்டுமென்பதில் பெரும் கருத்து மாறுபாடுகள் இருக்க வழியில்லை. சங்க இலக்கியங்களுக்கு முதலிடம் கொடுப்பதே நல்லது. தரத்தில் உயர்ந்தவை என்பதோடு மட்டுமல்லாமல் அகவலில் அமைந்த எதுகைகள் நிறைந்த இசை நயத்துக்கு இடமளிக்காதவையாய் இருப்பதால் மொழிபெயர்ப்பில் அதிகம் சிதைவுறாமல் அவற்றின் பொருளைக் கொணர முடியும். மேலும் இருபதாம் நூற்றாண்டின் மேலை இலக்கிய வல்லுநர்களான எஸ்ரா பவுண்டு, எலியட் ஆகியோர் போற்றிய நாடகத் தனிமொழி வடிவம் (Dramatic Monologue), குறிப்பால் பொருள் உணர்த்தல் (Poetry of Indirection), பொருள் நுண்மை (Subtety), பொருளைத் தெற்றென வெளிபபடுத்தும் காட்சியுருக்கள், படிமங்கள் (Imagery and Symbolism), ஆண், பெண் பாத்திரங்களின் மனநிலைகளை உள்ளவாறு படம்பிடித்துக் காட்டுதல் ஆகிய தற்காலக் கவிதைக் கூறுகளைப் பெற்றிருப்பதால் அவை காலத்தால் பழமையானவையாயினும் மேலை நாட்டாரின் கவனத்தை இப்பொழுதும் ஈர்க்கக் கூடியவை. நீதி நூல்களில் திருக்குறள் தவிர ஏனையவை கவிதைச் சிறப்புடையன என்று கூறவியலாது. சிலப்பதிகாரத்திற்கு உரிய இடம் பெற மேலும் சில மொழிபெயர்ப்புகள் மூலம் முயன்றால் வெற்றி பெற வாய்ப்புண்டு. தேவரின் சிந்தாமணியும் கம்பராமாயணமும் ஓசை நயமுடைய விருத்தப் பாக்களால் அமைந்துள்ளமையால் மொழிபெயர்ப்பாளர்களுக்குப் பெரும் அறைகூவலாகவே உள்ளன. தோல்வி மனப்பான்மையில் கம்பனைக் கைவிடல் நல்லதன்று. மனித வாழ்வு பற்றிய அவனது நோக்கும், பாத்திரப் படைப்பாற்றலும், முருகியல் உணர்வும் மேலை இலக்கியத் திறனாய்வாளர்களின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட வேண்டியவை. பக்தி இலக்கியங்களில் பெரும்பாலானவை, தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட நாம் மட்டுமே துயக்கக் கூடியவை. ஆயினும் திருவாசகம், அப்பரின் தேவாரம், நம்மாழ்வார் உள்ளிட்ட மூன்று நான்கு ஆழ்வார்களின் பாசுரங்கள் ஆகியவை உலக அரங்கில் இத்தகைய இலக்கியங்களில் ஈடுபாடுடைய ஒரு பகுதியினருக்கேனும் உரிய முறையில்

அறிமுகப்படுத்தப்பட வேண்டியவை. இந்தியத் துணைக் கண்டத்தில் திகழ்ந்த பக்தி இயக்கத்தின் பொதுப்பண்புகள் காரணமாக, இவற்றை மற்ற இந்திய மொழிகளில் எழுதுவதால் பெரும் பயன் விளையலாம். அருணகிரி, தாயுமானவர், இராமலிங்கர் ஆகியோர் கவிதைகளில் தெரிந்தெடுத்த பகுதிகள் சிலவேனும் உலகு அறிய வேண்டியவை. இவற்றுள் இராமலிங்கனாரின் கவிதைகள் கருத்தாற்றலும உள்ளத்தை உருக்கும் பான்மையும் பெற்று விளங்குவதோடு அல்லாமல் மற்ற இருவரோடு ஒப்பிடும்போது அதிக இழப்பில்லாமல் மொழிபெயர்க்கக் கூடியவை. இருபதாம் நூற்றாண்டைப் பொறுத்தவரையில் பாரதி, பாரதிதாசன் கவிதைகளில் ஒரு பகுதியும், புதுமைப்பித்தன் முதலான மணிக்கொடி எழுத்தாளர்களின் சிறுகதைகளும், தி. ஜானகிராமன், ஜெயகாந்தன் ஆகியவர்களின் நாவல்கள் சிலவும் மொழிபெயர்க்கப்பட வேண்டியவை. இப்பட்டியல் அறிஞர் குழுக்களினால் காய்தல் உவத்தல் இன்றி எந்த விதமான காழ்ப்புணர்ச்சிக்கும் ஆட்படாமல் பொறுப்புணர்வோடு நிர்ணயிக்கப்பட வேண்டியதொன்றாகும். தரக் குறைவான நூல்களை அறியாமை காரணமாகவோ, சமய, அரசியல் சார்பு காரணமாகவோ மொழிபெயர்க்க முயல்வார் விழலுக்கு நீர்பாய்ச்சும் வீண்வேலை செய்வதோடு தமிழுக்கும் இழுக்கு ஏற்படுத்துவர். கீழ்த்திசைப் பொருள் என்றாலே ஏளனத்தோடு பார்க்கும் மேலைத் திறனாய்வாளரை எளிதில் ஏமாற்ற இயலாது.

எவற்றை மொழிபெயர்க்க வேண்டும் என்பதைவிட எவ்வாறு மொழி பெயர்க்க வேண்டும் என்பது சிக்கலான வினாவாகும், 'கிரேக்க நூல்களை மொழிபெயர்க்க முனைந்த ரோமானியர்களிடமிருந்து இருபதாம் நூற்றாண்டு மொழியியலார் பலர்வரை பலவிதமான கோட்பாடுகளைத் தந்துள்ளார்கள். ஆனால் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னிருந்தே வடமொழி நூல்களைத் தமிழாக்கம் செய்ய முனைந்த நம்மவர் மொழிபெயர்ப்புகளை பற்றி அதிகம் எழுதி வைத்ததாகத் தெரியவில்லை. பேராசிரியர் போன்ற ஓரிருவர் தவிர மற்றவர் யாரும் இப்பணியிலுள்ள இடர்ப்பாடுகள் பற்றி அதிகம் கூறவில்லை. எனினும் ஒரே கொள்கையின் அடிப்படையில் எல்லா நூல்களையும் மொழிபெயர்க்க முயல்வது தற்கொலைக்கு ஒப்பாகும். மொழிபெயர்ப்பாளனின் தகுதி, அவன் தேர்ந்தெடுக்கும் நூல், அது யாருக்காக மொழிபெயர்க்கப்படுகிறது என்பதற்கேற்ப அவன் கடைப்பிடிக்க வேண்டிய விதிகள் மாறுபடும். தொன்மையான இலக்கியங்களை மொழிமாற்றம் செய்யும்போது மொழி பெயர்ப்பாளனுக்கு அதிக உரிமைகள் வேண்டுமென்றும், அவற்றை மீண்டும் ஒரு மொழியில் படைப்பதை 'Transcreation' என்றும், அவை மூலநூல்

கருத்துக்களை ஆங்காங்கே விளககிச் செல்லும் Interpretative Translation விளக்க மொழிபெயர்ப்புகளாக அமைய வேண்டுமென்றும் பி. லால் போன்றவர்கள் கருதுகிறார்கள். ஆனால் தேவைக்கதிகமான உரிமைகளை மொழி பெயர்ப்பாளன் எடுத்துக் கொள்வதும், விளக்கங்களை மிகுதியாகக் கவிதையிலேயே சேர்ப்பதும் மூலநூலுக்குப் பெரிதும் ஊறு விளைவிக்கும். மொழிச்சிக்கல் காரணமாகவோ தனது படைப்பாற்றலைக் காட்ட வேண்டுமென்பதாலோ மூலநூலில் இல்லாத கருத்துக்களைப் புகுத்துவதும் இருக்கின்ற கருத்துக்களை நீக்குவதும் மூலநூலாசிரியனுக்குச் செய்யும் துரோகமாகும்.

மொழிபெயர்ப்பாளன் தான் ஈடுபாட்டோடு படித்த, தான் ஏற்றுக் கொள்ளுகின்ற கருததுக்களைக் கூறுகின்ற நூலையே மொழிபெயர்ப்புக்கு எடுத்துக் கொள்வது நல்லது. தான் ஒன்றிப்படிக்காத நூலை எடுத்துக் கொண்டால் தோல்வி நிச்சயம். காதல் பற்றிய சங்க இலக்கியக் கவிதைகளை மொழிபெயர்ப்பதில் வெற்றி பெற்ற ஏ.கே ராமானுஜன் நம்மாழ்வாரின் பக்திப் பாடல்களை மொழிபெயர்க்கும் போது தமது கடமையில் தவறுகிறார். மூலத்தில் உள்ள நம்மாழ்வாரால் பக்திச்சுவை நனி சொட்டச்சொட்ட எழுதப்பட்ட கவிதைகள் ராமானுஜனின் சொந்தக் கவிதைகளில் காணப்படும் அங்கதம், எள்ளல், அவர் இந்து சமயம்பால் கொண்டுள்ள அனுதாபமற்ற எண்ணம், அவரது சிகாகோ வாழ்வினால் நமது தொன்மங்கள்பால் வளர்ந்துள்ள நகையுணர்வு ஆகியவற்றால் மறைமுகமாகப் பாதிக்கப்படுகின்றது (அவரது சொந்தக் கவிதைகளில் ஆன்மீகத்தேடலோ கடவுள் நம்பிக்கையோ அழுத்தம் பெறவில்லையென்றே திறனாய்வாளர்கள கூறுவர். 'முருகனுக்குப் பிரார்த்தனைகள்' கவிதைகளில் முருகனும் அவனது பக்தர்களும் அவரது புகழ்வதுபோலப் பழிக்கும் அங்கதத் தாக்குதலுக்கு ஆளாகின்றனர். இத்தகைய உணர்வு திருவாய் மொழிப்பாடல்களின் மொழிபெயர்ப்புகளிலும் மறைந்து காணப்படுகின்றது. பாடல்களைப் பொறுக்குவதிலேயே அவரது ஈடுபாடு எத்தகையது என்பதை அறிய முடிகின்றது அவர் தமது தொகுதியில் முதல் கவிதையாக,

நாம் அவன் இவன் உவன்
அவள் இவள் உவள் எவள்
தாம் அவர் இவர் உவர்

அது இது உது எது
அவை இவை உவை
அவை நலம் தீங்கு அவை
ஆம் அவை ஆய் அவை
ஆய்நின்ற அவரே

என்ற கவிதையின் மொழிபெயர்ப்பைத் தருகிறார் மொழிநூல் வல்லுநரான ராமானுஜன். இக்கவிதையால் கவரப்பட்டு கீழ்க்கண்டவாறு மொழிபெயர்க்கிறார்:

*We here and that man, this man*
*And that other in-between,*
*And that woman, this woman,*
*And that other, whoever,*
*Those people, and these,*
*And these others in-between,*
*This things dying, these things,*
*Those things, those others in between*
*Good things, bad things,*
*Things that were, that will be,*
*Being all of them,*
*He stands there.*

இது திருவாய்மொழியில் முதற்கவிதையல்லவென்பதும் நம்மாழ்வாரை அறிமுகப்படுத்தும் அ. சீனிவாசராகவனின் அழகிய சிறுநூலில் இதற்கு இடமில்லையென்பதும் குறிப்பிடத்தக்கன. நம்மாழ்வார் கடவுள் ஜனனப்படைப்புகளை ஒரு பட்டியலில் அடக்கி ஒருவரான கடவுள் பலவாகியும் தனித்து நிற்கிறார் என்பதை அழகிய உத்தி ஒன்றினைக் கையாண்டு சுட்டுச் சொற்களை அடுக்கிக் கடவுள் மறைய மொழிநூல் புலமையே மேலோங்கி நிற்கின்றது. இத்தொகுதியில் உள்ள மற்ற கவிதைகளிலும் இறையுணர்வு மங்கி இருப்பதும் தொன்மங்கள் முழுநம்பிக்கையோடு எடுத்தாளப்படாமல் அங்கதம் புலப்படும். இவையெல்லாம் நம்மாழ்வாரின் கவிதைகளில் உள்ளன போலும் என்று மூலமறியாதார் முடிவு செய்யக்கூடும்.

ஒரு கவிதையை மொழிபெயர்க்கும்போது ஏழு வகையான உத்திகளுக்கு வழியிருப்பதாக லாபிவியர் (Lafevere) கூறுவார். மூலத்தின் ஓசைக்கு முதலிடம் கொடுக்கும் Phonemic Translation, சொல்லுக்குச் சொல்லாக மொழிபெயர்க்கப்படும் Literal Translation, யாப்புக் கூறுகளைப் பாதுகாக்கும் Metrical Translation, உரைநடையாகத் தரப்படும் **Poetry into Prose,** எதுகைகள் நிரப்பப்பட்ட Rhymed Translation, அகவலாய் மாற்றப்பட்ட Blank verse Translation, விளக்கங்கள் நிறைந்த Interpretation என்றும் வகைப்படுத்துவார். மொழிபெயர்ப்பாளன் தனது திறமை, நோக்கு ஆகியவற்றிற்கு ஏற்ற உத்தியைக் கையாளலாமாயினும் அதனை முன்னுரையில் தெளிவுபடுத்தி விடுவது நலலது.

மூலம் அகவலாய் இருக்கும்போது மொழிபெயர்ப்பில் எதுகைகளைப் புகுத்துவது வேண்டாத சிக்கலை விலைகொடுத்து வாங்குவதாகும. இது கவிதைத் தன்மையை அதிகப்படுத்தும் என்று எண்ணிய காலம் போய்விட்டது. ஹோமரின் காப்பியத்தைப் பதினெட்டாம் நூற்றாண்டில் அலெக்ஸ்சான்டர் போப் இவ்வாறு மொழி பெயர்த்தார். அவர் எதுகைகளைக் கையாளுதலில் ஆற்றல் உடையவராயினும் மூலத்தின் கவிதைச் சிறப்பைக் கொணர இயலாமல் தோல்வியுற்றார். மில்டனின் காப்பியத்தைச் சுவர்க்க நீக்கம் என்ற தலைப்பில் சுப்பிரமணிய முதலியார் விருததப்பாக்களால் அமைத்தார். இது இப்பொழுது முழுவதுமாக மறக்கப்பட்டுவிட்டது. தமிழ் இலக்கியங்களில் பெருமபாலானவற்றை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யும்போது, பல முறைகளில் ஒன்றைக் கையாளுவதே மூலத்தின் நலம் கெடாமல் பாதுகாக்க எளிதான வழியாகும் இசைப்பாடல்களாய் அமைந்த பக்திப் பாடல்களை மொழிபெயர்க்கும் போது ஓசைக்கு முக்கியத்துவம் அளித்தால் அவற்றின் உள்ளம் உருக்கும் தன்மை அழிந்து போகக் காணலாம்.

திருவாசகத்தில் வருகின்ற,

முத்தனிக் கொங்கைகள் ஆடஆட
மொய்குழல் வண்டினம் ஆடஆடச்
செங்கயற்கண் பனி ஆடஆடச்
பித்தெம்பிரானோடும் ஆடஆடப்
பிறவி பிறரோடும் ஆடஆட

அத்தன் கருணையோடு ஆடஆட

ஆடற்பொற்சுண்ணம் இடித்தம்தாயே

என்ற பாடலை ஜி.யு. போப் அவர்கள்,

*While our bosoms* ***pearl - adorn'd beat - high; while***
*In our clustering looks the honey-bees play;*
*While with Civan our minds are dancing; while bright*
*Eyes with dew are gleaming;*
*While wild rupture from our lord in thrilling; while,*
*As others live, their chaning lives we live;*
*With our Father's mercy glad, ever*
*Dancing, proud we the dust of gold:*

என்று மொழிபெயர்க்கும்போது மூலத்தின் பொருள் கெடாமல் இருப்பினும் ஓசைநயம் கருதி அவர் பெய்துள்ள சொற்கள் கவிதையின் ஆன்மாவை அபபுறப் படுத்திவிட், மொழிபெயர்ப்பு உள்ளத்தைத் தொட மறுக்கிறது. மூலத்தில் `ஆட' என்ற சொல் பொருள் ஆழத்தோடு மீண்டும் மீண்டும் வந்து இசைநயம் தருகிறது. போப் அவர்களோ 'While' என்ற வெற்றுச்சொல்லைப் பலமுறை அடுக்கிப் பக்தி உணர்வை எழுப்பத் தவறுகிறார். இத்தகைய கவிதைகளின் உயிர்நாடியைக் காப்பாற்ற வேண்டுமானால் இசையைப் புறக்கணிப்பதானாலும் அல்லது வசன கவிதையாகத் தந்தேனும் முயலல் வேண்டும். இராமலிங்கனாரின் அருட்பாவில் சில.பகுதிகளை மொழிபெயர்த்துள்ள தங்கப்பா இதனை ஓரளவுக்குச் சாதித்துள்ளார். (சான்றாகக் கீழ்கண்ட பாடலைக் கூறலாம்.)

*Like a golden hill on the horizon, you have come into my life.*
*You have taken complete hold of me*
*You have become the lamp that burns*
*Perpetually in my home. You are the great*
*Wonder of inner light coming from truth. you*
*Have put an end to all the afflictions of my*
*Sad little heart. Lord of mercy, I have*
*Placed my trust in you, for sake me not.*

சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பது தவறென்றும், மூலத்தின் பொருள் சிதையாமல் அதே சமயத்தில் கவித்துவ அழகும் குலையாமல் மொழிபெயர்க்க வேண்டும் என்றும் பலர் வலியுறுத்தியுள்ளனர்.

டி.வி. ராஸட்டி நபகாவ் போன்றோர் மொழிபெயர்ப்பாளன் தனது படைப்பாற்றலையும் தனித்தன்மையையும் காட்டுக்குள் வைத்துக் கொண்டு மூலநூல் ஆசிரியனுக்கு அடிமைபோல் உணர்ந்து தன் பணியைச் செய்ய வேண்டும் என்பர். உமர்கயாமின் ரூபையாத்தை மொழிபெயர்த்த எட்வர்டு பிட்ஸ் ஜெரால்டோ பாரசீகக் கவிஞர்களின் நூல்களில் தம் விருப்பம்போல் மாற்றங்களைச் செய்து அவைகளுக்கு இலக்கியத்தரம் ஏற்றியதாகப் பெருமிதம் கொள்கிறார். இந்த இரண்டு நிலைகளும் தவிர்க்கப்பட வேண்டியவை.

தற்காலத் தமிழ்க் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதில் அரிய சாதனைகள் ஏதும் நிகழ்த்தப்படவில்லை. பாரதியும், ஓரளவுக்குப் பாரதிதாசனும் மொழிபெயர்ப்பாளர்களின் கவனத்தைக் கவர்ந்துள்ளனர். ஈழத்தைச் சேர்ந்த மஹேஸ்வரி பாலகிருஷ்ணன், பாரதிதாசனின் இசைப் பாடல்கள் சிலவற்றை மொழிபெயர்ப்பதில் பெற்றுள்ள வெற்றி குறிப்பிடத்தக்கது; முன்மாதிரியாகக் கொள்ளத்தக்கது.

**பூக்காரி**

சேர்த்துக் கட்டிய முல்லை வேண்டுமென்றேன் - நல்ல
சேயிழை அவள் சிரிப்பு முல்லை தந்தாள்!
பார்த்துப் பதித்த தாமரைப்பூத்
தீர்த்து விலைக்குக் கொடடி என்றேன்
பூத்த முகத்தாமரையால்
புதுமைகாட்டி மயங்கி நின்றாள்.
தேவையடி தாமரை இதழ் என்றேன்
தேனொழுகும் வாயிதழ் மலர்கின்றாள் - ஒரு
பூவைக் காட்டிப் பேர்சொல் என்றேன்
பூவை "என்பேர் பூவை" என்றாள்
ஆவல் அற்றவன் போல் நடந்தேன்
அவள் விழிதனில் அலர் கண்டேன்
காவல் மீறிக் கடைக்கு வந்து விழுந்து - பலர்
பண்பட வாடிய மருக்கொழுந்து நீ!
மேவாதடி என்று சொன்னேன்
வேங்கையில் ஈ மொய்க்கா தென்றாள்
தேவைக்கு மணம் வேண்டும் என்றேன்
திருமணம் என்று தழுவி நின்றாள்

## THE FLOWER - GIRL

*When I asked for a jasmine wreath*
*She smiled with her jasmine teeth!*
*Fix the price*
*Of a lotus nice*
*And hand it to me, I said*
*With her lotus face*
*New maiden grace*
*She fell on spell did shed;*
*When a lotus petal*
*(asked her spare, Her lips honey dripping she opened so fair)*
*Touching a bloom I asked the name*
*Maid in bloom said she in a flame!*
*I feigned unconcern*
*Her eyes love- darting burn!*
*The fragrant maru sprout*
*That has of vigil come out*
*To the crowded market place*
*And withered by public gaze*
*Is unbefilting, I held is the bee on the vengai beheld?*

தமிழில் உள்ள பேரிலக்கியங்களை மொழிபெயர்ப்பவர் தனித்தனியாக இயங்காமல் குழுக்களாகச் செயல்படுவது மேலாகும். பதினைந்தாம் நூற்றாண்டிலேயே பைபிளை மொழிபெயர்க்க முற்பட்டோர் நமக்கு வழி காட்டிகளாக அமையலாம். விகளி.'.ப் பைபிளின் இரண்டாவது பதிப்பைக் கொண்டுவரும்பொழுது அவர்கள் மொழிபெயர்ப்பை நான்கு கட்டங்களாகச் செய்தனர். லத்தீன் மொழியிலிருந்து எல்லா பைபிள்களையும் அவற்றிற்கு எழுதப்பட்ட விளக்கங்களையும் திரட்டி ஒப்பிட்டு ஆய்வு செய்து மூலநூலின் பிரதியாக ஒன்றைத் தெரிவு செய்தனர். இலக்கண மேதைகளோடும் சமய

நூல் வல்லாரோடும் கடினச் சொற்கள் பற்றி விவாதம் நடத்தினர். வாக்கியம் வாக்கியமாக மொழிபெயர்த்து வல்லுநர் குழுவால் மீண்டும் திருத்தம் செய்து முடிவான பதிப்பைத் தயாரித்தனர். யாருக்காக எத்தகைய நடையில் மொழிபெயர்க்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டு அதற்குத்தக அவர்தம் பணியைச் செவ்வையாகச் செய்தனர். சங்க இலக்கியங்கள் இத்தகைய பணியையே எதிர்நோக்கியிருக்கின்றன. அவை அதற்குத் தகுதியுடையன என்பது உறுதி.

# தமிழில் புதுமைமயப்படுத்தம்

இ. மறைமலை

காலச் சூழலையும் தேவையையும் ஒட்டி மொழி அடையும் வளர்ச்சியே அதைத் தகுதிப்பாடு மிக்க கருத்துத் தொடர்புச் சாதனமாக்கும். செம்மையான கலைச்சொற்கள், பொருள் மயக்கமின்றித் தெளிவான சிந்தனை உணர்வுகளை, செய்திகளை வெளிப்படுத்துதற்கேற்ற சொற்றொடரமைப்பு, கணிப்பொறியிலும் தொலைத் தொடர்புச் சாதனங்களிலும் பயன்படுத்தற்கேற்ற வரிவடிவச் சீர்மை ஆகியவை சிறப்பாக அமையப் பெறும் மொழியே உலக அரங்கில் தலைநிமிர்ந்து நிற்கவியலும். அறிவியல், தொழில் நுட்பவியல் துறையில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகளும், புதுப்புதுப் புனைவுகளும் (Inventions), சமூகவியல் மாற்றங்களும், மேலும் மேலும் முன்னேற்றத்தைத் தேடிச் செல்லும் கோட்பாடுகளும் நமது சிந்தனையைப் பாதிப்பதுடன் மொழியின் பயன்பாட்டையும் விரிவுபடுத்தி வளர்ச்சிப் பாதைக்கு வழிவகுத்துச் செல்கின்றன.

இத்தகைய புலத்துறையாக்க முயற்சிகளால் மொழி பெறும் முன்னேற்ற நிலை, வளர்ச்சி (Development), புதுமைமயப்படுத்தம் (Modernisation), மேலை மயமாக்கம் (Westernisation) என்னும் மூவகைச் செயற்பாடுகளினால் நிகழ்கிறது.

வளர்ச்சி என்பது தொழில்நுட்ப மாறுபாடுகளால் ஏற்படுவது. ஒரு மொழி தனக்குரிய வேர்ச்சொற்களைக் கொண்டே சொற்கோவையை விரிவுபடுத்திக் கொள்வதனை "வளர்ச்சி"என்னும் செயல்முறையாகக் குறிப்பிடுவார் ஃபிஷ்மன். இத்தகைய வளர்ச்சி சமூக உறவு முறைகளைப் பாதிப்பதில்லை.

எழுத்து முறைமை, பதிலிப்பெயர்கள் (Pronouns), மரியாதை (Honorifics), வினைவடிவங்கள் ஆகியவை மேலை நாகரிகத்தின் தாக்கத்தால் மாற்றம் பெறுவதனை மேலை மயமாக்கம் என்பர். எடுத்துக்காட்டாக இந்தோனேசிய மொழியில், மரபுவழிக் கிராமியப் பண்பாட்டில் உறவுமுறையைக் குறிக்கப் பயன்பெற்ற அப்பா, அம்மா, சமுதாயத்தில் ஒருவரது சமூகத் தகுதிநிலையைக் (Social Status) குறிக்கப் பயன்படுத்தப்பட்டமையையும், இன்று மேற்கத்தியப் பண்பாட்டின் தாக்கத்தால், சமூகத் தகுதிநிலையைக் குறித்தற்குக் குடும்ப உறவைக் குறிக்கும் சொற்களை விளக்கிப் பொதுச் சொற்கள் கையாளப்படுவதையும் அலிஸ் ஜபானா எடுத்துக்காட்டுவர்.

உனது, உமது, உங்கள், தங்கள் என்று பல்வேறு படிநிலைகளைக் குறிக்கும் சொற்கள் இந்தோனேசிய மொழியில் விலக்கப் பெற்று இவற்றுக்குப் பதிலாகப் படிநிலை வேறுபாடற்ற ஒரே சொல் (and) வழங்கப் பெறுவதையும் மேலைப் பண்பாட்டின் தாக்கத்தால் நிகழ்ந்த மேலை மயமாம் என்றே கூற வேண்டும். நிலமானியப் பண்பாட்டின் பிடிப்பிலிருந்து விடுபெறாத மலேசியாவில் இத்தகைய மாற்றம் நிகழவில்லை என்னும் செய்தியைப் பார்க்கும்போது மேலை மயமாக்கம் என்னும் செயல்முறை சமூக உறவு மாற்றங்களை உள்ளடக்கியது என்பது தெளிவாகும்.

புதுமை மயப்படுத்தம் மேற்கூறிய இருசெயல் முறைகளிலிருந்தும் தனக்குரிய பண்புக் கூறுகளைப் பெற்று, உயர்நுணுக்கத் துறைகளில் செம்மையாகச் செயற்படும் ஆற்றலை மொழிக்கு உருவாக்கியளிக்கிறது.

சொற்கோவை விரிவாக்கம், பல்வேறுபட்ட அறிவு நுணுக்கத் துறைகளில் பயன்படுத்தற்கேற்ற மாறுபட்ட கருத்துவெளிப்பாட்டு முறைகளின் வளர்ச்சி ஆகிய இரண்டனையுமே ஃபெர்குசன் வழிநின்று புதுமைமயப்படுத்த நெறிகளாக டாக்டர் செ.வை. சண்முகம் விளக்கிச் செல்கிறார்.

"புதுமை மயப்படுத்தம்" என்னும் நெறிமுறையின்பாற்படும்

1. எழுத்துச் சீரமைப்பு
2. சொற்கோவை விரிவாக்கம், நிலைபேறாக்கம்
3. மக்கள் தொடர்புச் சாதனங்களில் மொழியின் பயன்பாடு

ஆகிய மூன்று செயற்பாடுகளைப் பற்றிய சிந்தனைகளைத் தூண்டிவிடுவதே இந்த எடுத்துரையின் நோக்கமாகும்.

## 1. எழுத்துச் சீரமைப்பு

முருகப்பா, அ.சி. சுப்பையா, பெரியார் என்னும் முன்னோடிகளைப் பெற்று, பெரியாரின் முயற்சியால் மக்கள் மன்றத்தில செல்வாக்குப் பெற்று, நீண்ட நாட்களாக விவாதப் பொருளாக்கப்பட்டிருந்த எழுத்துச் சீரமைப்பு, வெற்றி பெற்றது எனலாம்.

எழுத்துச் சீர்மையை வலியுறுத்தும்போது கீழ்க்கண்ட நான்கு நோக்கங்களே முதன்மையாகத் தெரிகின்றன.

1) மொழியைப் பயிலுதற்கு எளிமையாக்கல்

2) வரி வடிவ ஒருங்கமைப்பு

3) உயிர் மெய் வடிவங்களுக்கான உயிர்க் குறியீடுகள் அனைத்து மெய்களுக்கும் ஒரே மாதிரி இயங்குதல்

4) பரவல் தொடர்புச் சாதனங்களில் பயன்படுத்துதற்கேற்ற அமைப்பு.

இந்நோக்கங்களை நிறைவேற்றும் முயற்சிகள் ஏற்கெனவே இருக்கும் வரிவடிவ அமைப்பு முறையிலிருந்து மிகவும் மாறுபடாத வடிவங்களை அளிக்கும் வகையிலும் தமிழர்களின் மொழிப்பற்று உணர்வுக்கு ஊறு விளைக்காத் வகையிலும் அமைதல் வேண்டும்.

இவ்வகையில் டாக்டர் வா.செ. குழந்தைசாமி அவர்களின் பரிந்துரைகள் எல்லா நிலையிலும் ஏற்கத்தக்கனவாக அமைந்துள்ளன.

| | |
|---|---|
| உயிர் எழுத்துக் குறியீடுகள் | - 11 |
| அகரம் ஏறிய உயிர் மெய் | - 18 |
| ஏனைய உயிர் மெய் வடிவங்களுக்கான உயிர்க் குறியீடுகள் | - 8 |
| ஆய்தம் | - 1 |
| மெய்க்குறியீடு | - 1 |
| மொத்தம் | - 39 |

என்று 39 குறியீடுகளைக் கொண்ட வா. செ. குழந்தைசாமி அவர்களின் திட்டம் ஒருமனதாக அனைவராலும் ஏற்கப்பட வேண்டிய திட்டமாகும். பழைமை நோக்குடன் இதனைக் குறைகூறும் போக்கு காலப்போக்கில் மாறிவிடும். ஆனால் அவரவர் தம் மனம்போன போக்கில் விதவிதமான மாற்றங்களை முன்வைக்கும் நிலையே இன்று காணப்படுகிறது. “மாற்றம் வளர்ச்சிக்காக” என்பதை மறந்து விட்டு “மாற்றம் மாற்றத்திற்காகவே” என்று மயங்கிப் பல்வேறு திருத்தங்களைப் பரிந்துரைத்துத் தமிழ்ச் சமுதாயத்தினரைக் குழப்பும் போக்கு தவிர்க்கப்பட வேண்டும்.

தமிழ் ஒலி மரபுக்கு ஒலி வடிவங்களை முன் வைத்து அவற்றுக்கான குறியீடுகளைத் தேடித் துழாவி எழுத்துச் சீர்மையைப் பற்றிய தவறான

எண்ணத்தையும் தேவையற்ற அச்சத்தையும் தமிழர்கள் மனத்தில் ஏற்படுத்தும் நிலை வருந்தத்தக்கது; தவிர்க்கப்பட வேண்டியது.

## 2. சொற்கோவை நிலைபேறாக்கமும் - சொற்கோவை விரிவாக்கமும்

மொழிப் பயன்பாட்டிற்கேற்ப மொழி வழக்குகளையோ, மொழிக் கூறுகளையோ செம்மைப்படுத்தும் முறையே நிலைபேறாக்கம் (Standardisation) எனப்படும். மொழி நிலை பேறாக்கம் பற்றி டாக்டர் செ. வை. சண்முகம் அவர்களும், சொற்கோவை நிலை பேறாக்கம் பற்றி டாக்டர். கி. கருணாகரன் அவர்களும் பல கருத்துகளை முன் வைத்துள்ளனர்.

சொற்கோவையை நிலைபேறாக்கம் செய்யும் வகையில் பல்வேறு மொழிகளில் நிகழ்ந்த முயற்சிகளை (Lexical Standardisation) கி. கருணாகரன் பின்வருமாறு தொகுத்தளிக்கிறார்.

1) கலைச் சொல்லாக்கத்தில் நிலை பேறாக்கம் செய்தல்

2) சொற்களஞ்சியங்களை உருவாக்குவதில் நிலைபேறாக்கம் செய்தல்

3) கல்வித் துறையில் பயன்படுத்துவதற்கென இலக்கணங்கள், பாடப்புத்தகங்கள், அகராதிகள் முதலியவற்றைத் தயாரிப்பதில் நிலை பேறாக்கம் மேற்கொள்ளுதல்.

4) பரவல் செய்தித் தொடர்பில் (Mass Communication) பயன்படுத்துவதற்கெனச் சொற்கள், இலக்கணச் சுருக்கங்கள், எளிதான சொற்றொடர் அமைப்புகள் போன்றவற்றை நிலை பேறாக்கக் கொள்கைகள் வழியாகத் தயாரித்தல்.

5) ஆட்சித்துறைக்கான மொழிப் பயன்பாட்டில் நிலைபேறாக்கம் மேற்கொள்ளுதல்.

6) நீதித்துறையில் பயன்படுத்தக் கூடிய முறையில் நாட்டு மொழிகளில் (ஆங்கில மொழிக் கூறுகளை மாற்றுவதற்காக) வேண்டிய புதிய சொற்கள், மொழிக் கூறுகள் போன்றவற்றில் நிலைபேறாக்கம் மேற்கொள்ளுதல்.

7) வளரும் அறிவியல் முன்னேற்றத்திற்கு ஏற்றவாறு புதுப்புதுச் சொற்கள் போன்றவற்றை அமைப்பில் நிலைபேறாக்கம் செய்தல்.

இவையனைத்தும் தமிழ் மொழியில் உடனடியாக மேற்கொள்ளப்பட வேண்டிய முயற்சிகளாகும். ஆட்சித் துறைச் சொற்களைப் பொறுத்தவரையில்

1) பிறமொழிச் சொற்களை நீக்கித் தமிழில் சொற்களை நிலைப்படுத்தல்

2) நீளமான சொற்களைத் தவிர்த்துச் சுருங்கிய வடிவமுடைய சொற்களையே கையாளல்.

3) தமிழ் ஒலியமைப்புக்கு ஏற்றவாறு சொற்களை அமைத்தல்

4) பொருள் விளக்கமும் எளிமையும் கொண்ட சொற்களை உருவாக்கிப் பயன்படுத்தல் என்னும் நால்வகை நெறிகளைக் கொண்டு நிலை பேறாக்கம் நிகழ்ந்து வருகிறது.

நடைமுறைச் சிக்கல்களைப் பொறுத்தவரையில்,

1) சொல்லமைப்பில் நிலைபேறாக்கம்

(எ-டு: க்ளுகோஸ் - குளுகோசு)

2) விகுதிகளில் நிலைபேறாக்கம்

(எ-டு: ஆள்/ஆளர்/அர்)

3. முன்னொட்டுகளில் நிலைபேறாக்கம்

(எ-டு : சார் / சார்பு / துணை)

4) சந்தியில் நிலைபேறாக்கம்

(எ-டு: தமிழ்நாடு அரசு / தமிழ்நாட்டு அரசு)

ஆகியன குறித்த நெறிமுறைகள் வரையறை செய்யப்பட வேண்டும்.

கலைச் சொல்லாக்கங்களின் நிலைபேறாக்கம் உடனடியாக மேற்கொள்ளப்பட வேண்டிய மற்றொரு பணியாகும். ஒரே ஆங்கிலக் கலைச் சொல்லுக்குத் தமிழ்நாட்டில், இலங்கையில், மலேசியாவில் வெவ்வேறு கலைச் சொற்கள் வழங்கி வரும் போக்கைக் காண்கிறோம். 1966-இல் கோலாலம்பூரில் நடந்த முதல் உலகத் தமிழ் மாநாட்டில் கா.பொ. இரத்தினம் நிறைவேற்றிய தீர்மானம் பின்வருமாறு கூறுகிறது:

*"தமிழ் வழங்கும் நாடுகளில் பயன்படுத்தப்படும் கலைச்சொற்கள் யாவும் வேறுபாடின்றி இருத்தல் தமிழ் மொழியின் வாழ்வுக்கும் வளத்திற்கும் இன்றியமையாததாகும். இந்நாட்டு அரசுகள் இத்துறையில் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டு கலைச்சொல் இணைப்புக் குழு ஒன்றினை அமைக்க உடனே நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று இம்மாநாடு இந்தியா, இலங்கை,*

*மலேசியா, சிங்கப்பூர் அரசுகளைக் கேட்டுக் கொள்வதுடன் இக்குழுவிற்கு அமைப்பாளராகத் தமிழக அரசு பணியாற்ற வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறது.”*

இத்தீர்மானத்தை ஏற்றுச் செயல்படுத்த அப்போதிருந்த முதலமைச்சர் இரா. நெடுஞ்செழியன், தமிழக அரசின் சார்பில் அதிகாரப் பூர்வமான இசைவு மடலை அனுப்பியதாகவும் கா.பொ. இரத்தினம் தெரிவிக்கிறார். எனினும் இம்முயற்சி முட்டுப்பாடுற்ற காரணம் தெரியவில்லை. தமிழ்நாட்டிலேயே ஒரே ஆங்கிலக் கலைச் சொல்லுக்கு வெவ்வேறு தமிழ்க் கலைச் சொற்கள் பயன்படுத்தப்பட்டு வருவது வருந்தத்தக்கது.

(எ.டு) Usufructuary Mortgage: அனுபவ ஒற்றி (ஆட்சி சொல்லகராதி), ஒத்தி, சுவாதீன அடைமானம் (கலைச் சொல்லகராதி)

இந்நிலையைப் போக்கக் “கலைச்சொல்லாக்க ஒருங்கிணைப்புக் குழு” ஒன்று அமைக்கப் பெறல் வேண்டும். தமிழ் கூறு நல்லுலகின் அனைத்துப் பகுதிகளையும் சேர்ந்த கல்வித்துறையாளர்கள், பல்வேறு துறை வல்லுநர்கள், தமிழறிஞர்கள், மொழியியல் வல்லுநர்கள் கொண்ட இக்குழு நிலைபேறாக்கம் செய்யும் கலைச் சொற்களையே அனைவரும் பயன்படுத்த வேண்டும் என்னும் கட்டுப்பாடு உருவாக வேண்டும். சொற்கோவை விரிவாக்கம் (Lexical Elaboration) ஒரு தொடர் ஓட்டம் போலச் செயற்பட்டு வருகிறது.

திட்டவட்டமான சொல்லாக்க வழிமுறைகளை வகுத்து 1867-இல் இப்பணியினைத் தொடங்கி வைத்தவர் தாமஸ் கிரீன் என்னும் அமெரிக்க மருத்துவர் ஆவார். ‘மனோன்மணீயம்’ சுந்தரம் பிள்ளை, பா.வே. மாணிக்க நாயக்கர், இ.மு. சுப்பிரமணிய பிள்ளை, கீ. இராமலிங்கனார் முதலான பலவேறு தமிழறிஞர்களும், பூ.சா. கோ. கல்லூரி, காரைக்குடி அழகப்பர் கல்லூரி போன்ற பல்வேறு கல்வி நிறுவனங்களின் மாணவர் அமைப்புகளும், கலைக்கதிர், அணுக்கதிர், தென்மொழி, குறள்நெறி முதலான பல்வேறு இதழ்களும் ஆற்றிய பணியால் சொல்வளம் பெருகியிருத்தல் உண்மையே எனினும் ஆட்சி மொழியாகவும் பயிற்றுமொழியாகவும் தமிழ் திறம்படச் செயற்படுத்தற்கு இது போதுமானது எனக் கூற இயலாது.

சொற்கோவை விரிவாக்கம் மேலும் செம்மையுறுதற்குப் பல பொருள் ஒரு சொல்லாட்சியும், ஒரு பொருட் பல சொல்லாட்சியும் தவிர்க்கப்படுதல் வேண்டும்.

அ. பலபொருள் ஒரு சொல்லாட்சி

நுண்ணிய பொருள் மாறுபாடுகளை உடைய பல்வேறு ஆங்கிலக் கலைச் சொற்களுக்கு ஈடாகத் தமிழில் ஒரே கலைச்சொல் மட்டுமே வழங்கி வருவது குழப்பத்தையும் பொருள் மயக்கத்தையும் ஏற்படுத்துகிறது.

எ-டு:

Unit, Fraction, Clause, Zoning, Section, Sector, Ward, Branch

- பகுதி

Completion, Closure, Conclusion, Decision, Determination, Disposal, Expiry, Finding

- முடிவு

மாறுபட்ட பொருள்களையுடைய ஆங்கிலக் கலைச்சொற்களுக்கு ஈடாக-அம்மாறுபாடு நுண்மையானதாக இருப்பினும் வெவ்வேறு தமிழ்ச் சொற்களை உருவாக்கியளிக்கும் முயற்சியும் முனைப்பும் தேவை. இன்றேல் "சொல்லவும் கூடுவதில்லை, சொல்லுந்திறமை தமிழ் மொழிக்கில்லை" என்னும் பேதையர் பன்மொழியே மேலோங்கி ஒலிக்கும்.

இதே போல ஒரு பொருட் பல சொல்லாட்சியையும் தவிர்த்தல் வேண்டும்.

Board - குழு, கழகம், மன்றம், வாரியம்.

## 3. பரவல் செய்தித் தொடர்பில் மொழியின் பயன்பாடு

செய்தித்தாள், வானொலி, தொலைக்காட்சி ஆகிய பரவல் தொடர்புச் சாதனங்களில் தமிழில் பயன்பாடு குறித்த நெறிமுறைகள் இதுகாறும் திட்டவட்டமாக வகுக்கப் பெறவில்லை. செய்தித்தாளில் பயன்படுத்ததற்குரிய மொழி நடை, சொற்றொடரமைப்பு முறை, அனைவரும் விளங்கிக் கொள்ளத்தக்க எளிய சொல்லாட்சி குறித்த நிலை பேறாக்க வழிமுறைகள் வகுத்தளிக்கப்பட வேண்டும். செய்தித்தாளிலேயே விளம்பரம், அரசியற் செய்தி, விளையாட்டுச் செய்தி, வணிகவியற் செய்தி, அறிவியற் செய்தி என்று பல்வேறு வகையான உள்ளடக்கங்களுக்கு ஏற்ப மொழி நடையும் சொல்லாட்சியும் மாறுபடுகின்றன. இவை குறித்த சிந்தனை இனியேனும் ஏற்பட வேண்டும்.

திரைப்படக் கவர்ச்சியும் அரசியற் பிணக்குகளுமே தமிழ்ச் செய்தித்தாள்களின் உள்ளடக்கமாகத் திகழ்ந்த வேளையில் அறிவியல், விளையாட்டு, பொது அறிவு தொடர்பான செய்திகளுக்கு ஆங்கில இதழ்களையே தமிழர் நாடுகின்றனர். அண்மையில் தினமணி நாளேட்டின் ஆசிரியராகப் பொறுப்பேற்ற ஐராவதம் மகாதேவன் இக்குறையைப் போக்கினார். இந்நாளேட்டின் பணிகளை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு துறைகள் தொடர்பான கருத்துகளை ஓரளவு படிப்பறிவுடைய மக்களுக்கு வழங்குதற்கேற்ற மொழிநடை, சொல்லாட்சி, வெளிப்பாட்டு முறை வரையறை செய்யப்பட்டால் பொது அறிவூட்டும் பணியில் ஈடுபடும் தமிழ் நாளிதழ்களின் எண்ணிக்கை அதிகமாகலாம்.

வானொலி, தொலைக்காட்சியைப் பொறுத்தவரையில் மொழிப் பயன்பாட்டிற்கு இதுவரை எவ்வகையான விதிமுறைகளும் வரையறை செய்யப்படவில்லை. ஆங்கில ஒலிப்பு நெறிகளைப் போலத் தமிழ் ஒலிப்பு நெறிகள் வரையறுக்கப்படல் வேண்டும். தமிழ்ச் சொல்லை வடமொழி ஒலிமரபுக்கேற்பவும் ஆங்கில ஒலிமரபுக்கேற்பவும் ஒலிக்கும் நிலை நீக்கப்பட வேண்டும். பிற மொழிச் சொற்களைத் தமிழில் வழங்கும்போது தமிழ்மை தழுவிய ஒலிப்பு நெறியே பின்பற்றப்பட வேண்டும். மனம்போனபோக்கில் தமிழை ஒலிக்கும் தொலைக்காட்சி/வானொலி அறிவிப்பாளர்களை நெறிப்படுத்தத் தேவையான வழிகாட்டு நெறிமுறைகள் உருவாக்கப்பட வேண்டும்.

பரவல் தொடர்புச் சாதனங்கள் (Mass Media) மொழியின் பயன்பாடு குறித்த ஆய்வுகள் பெருக வேண்டும். ஆங்கிலம் போலத் தமிழ் வெற்றி மிக்க பரவல் தொடர்புத்துறை மொழியாகத் திகழ்தற்குரிய தாங்குரைகளை மொழியின் ஆய்வாளர்களும் பேராசிரியர்களும் ஆய்ந்து கூறல் வேண்டும்.

தொகுத்துக் கூறின், தமிழ்ப் புதுமைமயப்படுத்தம் அனைத்துத் தரப்பினரது கூட்டு முயற்சியின்றி வெற்றி பெற இயலாது.

டாக்டர் வா.செ. குழந்தைசாமி அவர்களின் பரிந்துரைகளை முழுமையாக ஏற்று, பாடநூற்கள், புனைகதைகள், இலக்கியங்கள், தாளிகைகள் ஆகியவற்றிலும் கணிப்பொறி, தொலை எழுதி முதலான தொலைத் தொடர்புச் சாதனங்களிலும், செய்தித்தாள், வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் முதலிய பரவல் தொடர்புச் சாதனங்களிலும் எழுத்துச் சீரமைப்பு நடைமுறைப்படுத்தப்பட வேண்டும்.

சொற்கோவை விரிவாக்கமும் நிலைபேறாக்கமும் சிறந்தோங்க வேண்டுமெனில் பயிற்றுமொழியாகவும் ஆட்சி மொழியாகவும் தமிழ் திறம்படச் செயலாற்றுதற்குரிய முயற்சி மேற்கொள்ளப்பட வேண்டும்.

1956இலேயே கொண்டுவரப்பட்ட ஆட்சி மொழிச் சட்டம் இன்னும் முழுமையாக நிறைவேற்றப்படவில்லை. தலைமைச் செயலகம் முதல் ஊராட்சி அலுவலகம் வரை எல்லா மட்டங்களிலும் தமிழ் ஆட்சி மொழியாகச் செயற்பட்டு வருகிறது எனக் கூற இயலாத நிலையே தொடர்ந்து நீடிக்கிறது. "தமிழ்த் தட்டெழுத்துப் பொறிகள் கிடைக்கவில்லை என்றும், ஆங்கிலத்தில் அச்சிட்ட படிவங்கள் நிறையத் தேங்கிக் கிடக்கின்றன" என்றும் காரணங்கள் கற்பிக்கப்படுகின்றன. இந்திமொழி மைய அரசு அலுவலகங்களில் ஆட்சிமொழியாகச் செயற்படுத்தப்படுவதைப் போன்ற விரைவும் வினைத்திட்பமும் மாநில அரசு அலுவலகங்களில் தமிழ் மொழியை நடைமுறைப்படுத்துவதில் காட்டப்படுவதில்லை.

தமிழைப் பயிற்றுமொழியாக ஏற்றுக் கொள்வதிலும் தேவையில்லாத தயக்கம் ஏற்பட்டுள்ளது. "ஆங்கிலத்துக்குப் பதிலாகத் தமிழ் பயிற்று மொழியானால் இந்தி வந்து உட்கார்ந்து கொள்ளும்" என்று வீணான அச்சம் உருவாக்கப்படுகிறது.

மொழிச் சிக்கலைப் பொறுத்தவரையில் நேரு அளித்த வாக்குறுதியைச் சட்டமாக்க வேண்டுமென்று வலிறுத்தும் நாம், பயிற்று மொழியைப் பொறுத்த வரையில் அண்ணா அளித்த வாக்குறுதியைச் சட்டமாக்க வேண்டும் என்று விரும்புவதில் தவறில்லை.

தமிழர்களுக்கு, தமிழகச் சட்டப் பேரவையில் அண்ணா அளித்த வாக்குறுதியைக் காப்போம்.

"ஐந்து ஆண்டுகளுக்குள் தமிழகத்தின் எல்லாக் கல்லூரிகளிலும் தமிழைப் பாடமொழியாகவும், பயிற்று மொழியாகவும் கொண்டுவர அரசு நடவடிக்கை எடுத்துக்கொள்ளும். நடவடிக்கை எடுத்துக் கொள்வது மட்டுமல்ல; அடுத்த ஆண்டிலேயே சர்க்கார் கல்லூரிகள் அத்தனையிலும் தமிழ் பாடமொழி ஆகும் என்பதை இன்றைய தினம் அறிவிக்க விரும்புகிறேன்". (23.1.1968 - தமிழ்நாடு சட்டப் பேரவை)

இருபத்தோரு ஆண்டுகள் கடந்த பின்னும் அண்ணாவின் வாக்குறுதி நிறைவேற்றப் படவில்லை. உதட்டில் தமிழையும் உள்ளத்தில் ஆங்கிலத்தையும் வழிபடும் இரண்டாட்ட நிலை நீங்கி, தமிழ் பயன்படுபொருளாகக் கருதப்பெற்றுக் கருத்துத் தொடர்புக் கருவியாகத் திறம்படச் செயலாற்றுதற்குரிய வழிவகைகளைக் கண்டறிந்து வினையாற்றத் தொடங்குதலே தமிழுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையாகும்.

# தமிழ் இலக்கிய ஆய்வு

செ. ரவீந்திரன்

தமிழ் இலக்கிய ஆய்வு (Tamil Literary Studies) என்னும் தலைப்பை ஒட்டிப் பேசுவதற்கு முன் என் நிலை குறித்து ஒரு சில வார்த்தைகளை உங்கள் முன் வைப்பது நல்லது என்றே எண்ணுகிறேன். யாருடைய மனத்தையும் புண்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தில், அல்லது உங்கள் உணர்ச்சிகளைச் சீண்டி அலட்சியப் படுத்த வேண்டும் என்னும் நோக்கில் இங்கு நான் பேச வரவில்லை. என் அக்கறைகளும் ஈடுபாடுகளும் என் மொழியின் கலை இலக்கிய வளர்ச்சியை ஒட்டியனவே. ஒரு மொழியின் வளர்ச்சி அம்மொழியின் இலக்கிய வளர்ச்சியைப் பொறுத்தது. இலக்கிய வளர்ச்சி படைப்பிலக்கியம் படைக்கும் கலைஞனையும் அவன் படைக்கும் இலக்கியத்தினை நுகர்வோனையும் சார்ந்தது. கலைஞன் நுகர்வோன் என்ற இருவருக்குமிடையே ஒருவரின் அனுபவத்தைப் புரிதல், உணர்தல் என்ற நிலையில்தான் ஒரு மொழியின் இலக்கிய வளர்ச்சி சிறந்திருக்கும். ஒரு கலை இலக்கியம் பற்றிய மதிப்பீடுகள், ஆய்வுகள் ஒரு சரித்திர கால கட்டத்தின் 'உள் வட்டத்தின்' (Inner Circle) குரல்களாகவே ஒலிக்கும். ஒரு மொழியின், ஓர் இனத்தின் கலை இலக்கிய வளர்ச்சியெல்லாம் அந்த மொழி பேசும் இனத்தின் மக்கள் ரசனையை, அம்மக்களின் ஆக்கபூர்வமான அணுகலை ஒட்டியே உருவாகும்; வளரும். கலைஞன் நுகர்வோன் என்ற இருவருக்குமிடையே ஒருவரின் அனுபவத்தைப் புரிதல், உணர்தல் என்ற நிலையில்தான் ஒரு மொழியின் இலக்கிய வளர்ச்சி சிறந்திருக்கும். ஒரு கலை இலக்கியம் பற்றிய மதிப்பீடும் ஆய்வும் கலைஞனைப் புரிதல், இனங்கண்டு கொள்ளுதல் என்னும் அடிப்படையில் உள் வட்டத்தின் வெளிப்பாடாக ஒலித்தல் வேண்டும். இவ்வுள் வட்டத்தின் குரல்கள் மந்தைக் குரல்களாக ஒலிக்காமல் மக்கள் குரல்களாக, உயிர்ப்புள்ள குரல்களாக ஒலிக்க வைப்பதில் கல்வி நிறுவனங்களுக்குப் பங்கு உண்டு. ஆனால் நடந்தது என்ன?

இன்று தமிழகத்தின் மற்றும் இந்தியாவின் பல்வேறு பல்கலைக்கழகங்களில் நடைபெறும் தமிழ் மொழி இலக்கிய ஆய்வுகளை, ஆராய்ச்சிகளைப் பார்த்தாலே போதுமானது. ஆராய்ச்சி என்ற பெயரில் தமிழில் நடைபெறும் கேலிக் கூத்துக்களை அப்படியே படம் பிடித்துக் காட்டும்

வகையில் கன்னடத்தில் 'தமிளு தலைகள நடுவே' என்னும் பெயரில் நூல் ஒன்று வெளிவந்துள்ளது. டாக்டர் பி.ஜி.எல். ஸ்வாமி எழுதியது.

இந்த நூலின் ஒரு சில பகுதிகள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுப் 'படிகள்' என்னும் சிற்றேட்டின் 1980-ஆம் ஆண்டு ஜனவரி மாத இதழில் வெளி வந்துள்ளது. அதில் ஒரு பகுதி:

"ஒரு தமிழாசிரியர் 100 ரூ. ஆசைக்காக பிஎச்.டிக்குப் பதிவு செய்தார்; சரியான Guidance கிடைக்காமல் என்னிடம் வந்தார். அவருடைய தலைப்பைக் கேட்டேன்.

**வந்தவர்** : சங்க காலச் சிறுவர்

**நான்** : வேறு யாரோ அத்தலைப்பில் செய்தாயிற்றே.

**வந்தவர்** : அது சங்க காலச் சிறுமியர். வேறொருவர் சங்காலக் குழந்தைகள். நான் சங்ககாலச் சிறுவர்.

**நான்** : சிறுவரும் சிறுமியரும் குழந்தைகளே அல்லவா?

**வந்தவர்** : எங்கள் இலக்கியப்படி 10 வருஷத்திற்கும் சிறியோர் குழந்தைகள். அதற்கு மேற்பட்டோர் சிறுவர் சிறுமியர்.

**நான்** : சங்க இலக்கியத்தில் இப்பாகுபாடு உண்டா? எனக்குத் தெரிந்தவரை அதில் வயது பற்றிய கருத்துக்களே இல்லை.

**வந்தவர்** : அதுதான் Research என்பது. நாம் கண்டுபிடிப்பது.

இந்தத் தமிழாசிரியர் அத்தலைப்பில் ஆய்வு செய்து பிஎச்.டி. பட்டமும் பெற்றார். இத்தகைய ஆய்வுகள் பல நடந்துள்ளன" (படிகள், ஜனவரி 1980, ப. 23).

இன்று தமிழில் நடக்கும் ஆய்வுகள் கேலிக்குரியனவாகப் போய்விட்டன. இன்று பெரும்பாலான தமிழ்ப் பேராசிரியப் பெருமக்கள் ஆடுகாபட்டி அம்மையப்பா பிள்ளையாகவே ஒரு Laughing stock ஆகவே காட்சி அளிக்கின்றனர். உங்களுக்கு இந்த அவலத்தின் உக்கிரம் தெரிகிறதோ என்னமோ, எனக்கு என்னைப் போன்று வேற்று மாநிலங்களில் உள்ள பலருக்கு முகத்தில் அறைந்தாற்போன்று ஒரு பேரதிர்ச்சியாக இருக்கிறது. இன்று தமிழ்த்துறைகளுள் நடக்கும் பெரும்பாலான ஆராய்ச்சிகள் எல்லாம்

பெர்னார்ட்ஷா சொன்னதுபோல வெட்டி ஒட்டுதலாகவே இருக்கின்றன. வாழ்வின் அடையாளச் சீட்டுக்காக இன்று தமிழ்த்துறைகளுள் மேற்கொள்ளப் பெற்ற, வெறும் பிஎச்.டி பட்டப் படிப்பு ஆய்வுகளுள் பெரும்பாலானவைகளின் தரத்தினைச் சுட்டிக் காட்டுவது இங்கு அழகல்ல. ஆராய்ச்சி என்னும் பெயரால் நடைபெறும் ஆய்வுகள் எல்லாம் பல்கலைக்கழகத்தின் ஓர் ஒப்புதலுக்கான பம்மாத்துக்களே. இலக்கிய ஆய்வு (Literary Study), ஆராய்ச்சி (Research) என்னும் இரண்டினையும் ஒரே பொருளில் இன்று நாம் எடுத்தாளுகின்றோம். ஆய்வு வேறு ஆராய்ச்சி வேறு. ஆராய்ச்சி என்பது ஆய்வுக்கான மூலங்களை, அறிந்ததைக் கொண்டு அறியாததைத் தேடிச் செல்லும் ஒரு வழிமுறை அல்லது நெறி. இலக்கியக் கல்வியின்பாற்படும் ஒன்று; விஞ்ஞானப் போக்குக் கொண்ட ஒன்று. படைப்புக் கலையிலிருந்து வேறுபட்டது. ஆனால் இலக்கிய ஆய்வு அத்தகையதன்று; அது இலக்கியக் கல்வியும் (Literary Scholarship), ஆராய்ச்சியும் இணைந்த நிலையில் கலை இலக்கியம் குறித்த ஒரு பார்வை; அணுகல் முறை. எனவே அது படைப்புக்கலையின் இரண்டாவது வெளிப்பாடு. ரெனே வெல்லாக்கின் (Ren Wellek) வார்த்தைகளில் சொன்னால் அது ஒரு Second Creation.

பின் இத்தகைய ஆய்வுகள் தமிழில், தமிழ்த்துறைகளில் நடத்தப்படவே இல்லையா என்பது கேள்வி. என்னைப் பொறுத்த வரையில் தமிழ்த்துறைகளுக்கு வெளியேதாம் இத்தகைய ஆய்வுகள் நடைபெற்றிருக்கின்றன. அத்தகைய ஆய்வுகளில் தமிழ்த்துறையினரும் ஒருசிலர் அவ்வப்போது பங்கு கொண்டிருப்பதையும் காணலாம். இது ஒவ்வொரு சில தனிமனிதர்களின் காரணமாக எழுந்த ஒன்றே தவிர, அவர்கள் தமிழ்த்துறைகளில் வகித்த பதவிகளின் காரணமாக ஏற்பட்ட ஒன்றல்ல.

ஐம்பதுகளில், அறுபதுகளில் தமிழ் இலக்கிய ஆய்வானது குறிப்பிட்டுச் சொல்லும் நிலையில் இருந்தது. எழுபதுகளில் தேவலாம். எண்பதில், எண்பத்தொன்றில், எண்பத்திரண்டில் தமிழ் இலக்கிய ஆய்வுகள் எனப் பட்டியல் போட்டுப் பார்ப்பதைத் தவிர வேறு ஒன்றும் சொல்லுவதற்கில்லை. 1966-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் கோலாலம்பூரில் நடைபெற்ற முதலாம் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டின்போது 'அயல் நாடுகளில் தமிழ் ஆய்வுகள்' (Tamil Studies Abroad) என்னும் தலைப்பில் நடைபெற்ற கருத்தரங்கக் கட்டுரைகள் தவத்திரு ஸேவியர் தனிநாயகம் அடிகளால் தொகுக்கப்பெற்று நூல் வடிவில்

1968-ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டின்போது வெளியிடப்பெற்றது. இந்நூலின் பின்னிணைப்பாக எஸ். சிங்காரவேலுவால் தொகுக்கப் பெற்ற "Progress in Tamilology (1959 - 1966) என்னும் விவரணப் பட்டியலை ஒருவர் பார்த்தாலே போதுமானது. இந்நூல் வெளிவந்து முப்பது ஆண்டுகள் ஆகிவிட்டன. Nation is on the run-ல் ஈடுபட்டிருக்கும் இக்காலத்தில் இன்னும் தமிழ் இலக்கிய ஆய்வு குழவிப்பருவத்தின் தவழ்நடையிலே இருக்கிறது.

இதற்கான காரணங்களைத் தேடி மீண்டும் மீண்டும் நாம் பின்னோக்கிச் செல்லத் தேவையில்லை. நம் அணுகுமுறையின் செயற்பாட்டினை நம் இலக்கிய ஆய்வின் நெறிமுறையினைப் புதுப்பிக்க வேண்டியவர்களாக நாம் இன்று இருக்கிறோம். "நாம் இருபதாம் நூற்றாண்டில் வாழுகின்றோம் என்ற உணர்ச்சியே இல்லை" என வையாபுரிப்பிள்ளை அவர்கள் சொன்ன நிலையிலே பெரும்பாலான தமிழர்கள், அதுவும் தமிழ்த்துறையில் உள்ளவர்கள் இன்று இருக்கிறார்கள். ரெனே வெல்லாக்கின் இலக்கியக் கொள்கை (Theory of Literature) என்னும் நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு ஒன்று 1968-ஆம் ஆண்டில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது வெளியிடப் பெற்று முப்பது ஆண்டுகள் ஆகிவிட்டன. மூல நூல் வெளிவந்து நாற்பது ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்த நூலில் இலக்கியத்துக்கும் இலக்கிய ஆய்வுக்கும் இடையே உள்ள தொடர்புகள் பற்றி மிக விரிந்த அளவில் பேசப்பட்டிருப்பதைக் காணலாம். மேல்நாடுகளில் இந்த நூலை ஒட்டி, இதற்கு மேல், இதற்கு மேல் எனத் தேடிச் செல்லும் போக்கினைக் காணலாம். ஆனால் தமிழ்த்துறைகளில் இன்னும் இந்நூல் தொட்டுக்காட்டிய ஓர் ஆரம்ப நிலையிலே, அரிச்சுவடி நிலையிலே இருக்கிறோம். இது வருந்தத்தக்கது. இலக்கிய ஆய்வு என்பது முன்சொன்னது போன்று ஒரு படைப்புக் கலையின் இரண்டாவது வெளிப்பாடு மட்டுமல்ல; இலக்கியம் பற்றியதொரு வரன்முறையான, ஒருங்கிணைந்த ஒட்டு மொத்தப் படிப்பு அல்லது பார்வை (Systematic and Integrated study of Literature) என்பதும் புரிபட வேண்டும். இது தனிமனிதனின் ஆளுமையை (Personality), படைப்பாக்க மனத்தை (Creative mind) அழகியல் உணர்வை ஒட்டி உருவானது. இதற்கு மேலாக அம்மனிதனுக்கு இலக்கியக் கொள்கை குறித்து, இலக்கிய விமர்சனம் குறித்து, இலக்கிய வரலாறு குறித்து ஓர் அறிவு பூர்வமான சித்தாந்தப் பிடிப்பு ஒன்று இருக்க வேண்டும். இங்குச்

சித்தாந்தப் பிடிப்பு என்பது கட்சி உருவாக்கிய ஒன்றல்ல. அவன் அளவில் அவனுக்கு உண்மையாய் இருத்தலை ஒட்டி (being one's own self) வாழ்தலைப் புரிந்து கொள்ளுதலை, வாழ்தலின் அர்த்தத்தை உணர்ந்து கொள்ளுதலை ஒட்டிய நிலையில் உருவாக்கும் ஒன்று. இத்தகையதொரு தனி மனிதனால்தான் இலக்கியத்தை அதன் முழு அளவில் (in its totality) புரிந்து தனது ஆய்வின் பார்வையை முன்வைக்க முடியும். இங்குச் சுட்டிக் காட்டப்படும் தனிமனிதன் சமூகத்திலிருந்து அந்நியப்பட்டுப் போனவன் அல்லன். தன் தனித்துவத்தை (individuality) உணர்ந்து தனிமனிதனின் இலக்கியப் பார்வையை, இலக்கிய ஆய்வை வளர்ப்பதில்தான் கல்வி நிறுவனங்கள், தமிழ்த்துறைகள் முன்வரவேண்டும். அப்பொழுதுதான் படைப்புக்கும் படைப்பாளிக்கும் சமூகத்துக்கும் இடையே உள்ள இடைவெளியை இணைக்கும் பாலமாகத் தமிழ்த்துறை செயல்படும். இலக்கியத்துக்கென ஒரு பண்பும் பயன்பாடும் இருப்பது போல இலக்கிய ஆய்வுக்கு என ஒரு பண்பும் பயனும் இருத்தல் அவசியம். எது இலக்கியம்? எது இலக்கியமல்லாதது? எனப் பிரித்துப் பார்த்து ஓர் இலக்கியத்தை, ஒரு படைப்பை அதன் ஒருமை நிலையில் ஆய்வுக்குட்படுத்தி, மதிப்பீடு செய்து மக்கள் முன் வைக்கும் பணியில் எப்பொழுது தமிழ்த்துறை ஒரு தளமாக இயங்கத் தொடங்குகிறதோ அப்பொழுதே அது தமிழ் மொழியின் கலை இலக்கிய வளர்ச்சிக்கான பங்கை, பணியைச் செய்யத் தொடங்கி விட்டது என்பது பொருள். இந்தப் புரிதலை ஒட்டியேதான் இனிவரும் தமிழ் இலக்கிய ஆய்வுகள் தமிழ்த்துறைகளில் மேற்கொள்ளப்பெற்று நூல் வடிவில் வெளிவரல் வேண்டும். இவற்றிற்கான சாத்தியக் கூறுகளை இரண்டு நிலைகளில் தமிழ்த்துறையினர் உருவாக்கிக் கொள்ளலாம். அவை பின்வருமாறு:

1. ஓர் இலக்கியத்தை, அதன் புறவய, அகவய நிலைகளில் ஒட்டு மொத்தமாக, அதன் பூரணத்துவத்தை வெளிப்படுத்தும் பாங்கில் ஒரு மொழி இலக்கிய அணுகல் முறையில் (Mono-literary framework) ஆய்வினை மேற்கொள்ளுதல்.

2. ஓர் இலக்கியத்தை, முன்சொன்ன நிலைகளில் மட்டுமன்றி, அதன் பூரணத்துவத்தை, தேசீய, உலக, அகில இலக்கியப் பாரம்பரியத்தின் பின்னணியில், அது ஒரு மனித மனத்தின் வெளிப்பாடு என்ற நிலையில்

பன்மொழி இலக்கிய அணுகல் முறையில் (Multi-literary framework) ஆய்வினை மேற்கொள்ளுதல்.

இவ்விரண்டு அணுகல் முறைகளிலும் பின்னதான இரண்டாவதாகிய பன்மொழி இலக்கிய அணுகல் முறையே தமிழ்த்துறையில் தமிழாய்வு குறித்து மேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்று என்பதில் உறுதியான நம்பிக்கையுடையவன் நான். ஒப்பிலக்கியம் என்னும் பெயரில் இன்று உருவாகியிருக்கும் 'Comparative Literature' என்னும் இலக்கிய ஆய்வின் அடிப்படையே இலக்கியத்தை இலக்கியமாக அதன் அகில உலகப் பின்னணியில் பொதுமைப்படுத்த வேண்டும் என்பதேயாகும். அதற்கான தொடக்கத்தை வ.வே.சு. ஐயர் என்ற தனிமனிதர் 'Kamba Ramayana-A Study' என்னும் நூலின்மூலம் தொடங்கி வைத்தார்.

திராவிட இலக்கியங்களையும் இந்திய இலக்கியங்களையும் ஒப்புநோக்கிக் கற்றவனுடைய கல்வி அறிவு மிகவும் பரந்துள்ளதாயும் செழிப்புள்ளதாயும் இருத்தல் ஒருதலை. இவ் ஒப்புநோக்குக் கல்வி நமது அறிஞர்களுடைய குறுகிய மனப்பான்மையாகிய தண்ணிய சுவரை இடித்துத் தகர்த்துவிடும். அச்சுவரை அரணாகக் கொண்டு நம் அறிஞர்கள் மறைந்து வாழ முடியாது. இவ்வகைக் கல்வியின் மேல் எழுந்த ஆராய்ச்சிக்கு ஒரு புதிய பொருண்மையும், புதிய பெருமையும்படும். ஐம்பதுகளில் இந்தப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையின் ஆய்வுரை வீண்போகாத வகையில், மீண்டும் நம்மைத் தயார்படுத்திக் கொள்ளுவதற்கான நிலைக்கான சூழலை, ஓர் அணுகல் முறையைத் தமிழ்த்துறைகளில் உருவாக்க நாம் எல்லோரும் உளப்பூர்வமாக முன் வரவேண்டும் என்பதற்கான ஒரு வேண்டுகோளே என்னுடைய இப்பேச்சு.

# தமிழ் ஓலைச்சுவடிகள்: பயிற்சியும் பதிப்பும்

மு. கோ. இராமன்

தமிழ் ஓலைச்சுவடிகள் பற்றிய அக்கறை மிகுந்து வரும் இந்நாளில், அவற்றில் அமைந்துள்ள மொழி அமைப்புகளைச் சரியான முறையில் தெரிந்து கொண்டு அவற்றைச் செம்மையாகப் பதிப்பித்து வெளியிடுவது இன்றியமையாததாகின்றது. சுவடிகளில் அமைந்துள்ள எழுத்து முறைகளையும், பாடல்களிலுள்ள யாப்பு முறைகளையும் சரியாகப் புரிந்து கொண்டாலேயே செம்மையான நூல் பதிப்புகளை வெளியிட முடியும்.

## தமிழ் மொழியின் தோற்றம்

தமிழ்மொழி உலகிலுள்ள பழமையான மொழிகளில் ஒன்று. அதன் தோற்றம், அதன் ஆதி வடிவம் போன்றவற்றை அறுதியிட்டுக் கூற முடியவில்லை. பிராமி எழுத்தே தமிழுக்கு உரிய எழுத்தாக இருந்தது எனவும், தமிழ்-பிராமி எனத் தனியே எழுத்துமுறை இருந்தது எனவும் ஆராய்ச்சியாளர்கள் வாதிடுகின்றனர். இவை யாவும் கி.மு. 2ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட மொழி அமைப்பினைப் பற்றியதாகும்.

கி.மு. 2ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழ் எழுத்துகள் காலந்தோறும் எப்படி மாறித் தற்போதைய உருவம் பெற்றன என்பதைச் சா. கணேசன், இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் வெளியிட்டுள்ள கையேட்டில் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார். கல்வெட்டுகளில் காணப்பெறும் எழுத்துக்களையே இவர் இவ்வாறு ஆராய்ந்துள்ளார். பின்பு, செப்புப் பட்டயங்கள் போன்றவற்றிலமைந்துள்ள மொழி வடிவமும் அறிஞர்களால் ஆராயப் பெற்றது. ஆனால் ஓலைச் சுவடிகளிலமைந்துவந்துள்ள வடிவத்தினை ஆராய்ந்து யாரும் வெளிப்படுத்திலர்.

## ஓலைகளில் எழுதும்முறை வந்த வரலாறு

ஓலைச் சுவடிகளில் எழுதிப் படிக்கும் பழக்கம் ஆதிகாலத்திலிருந்து வந்தது என்பதைச் சங்கங்களில் நடந்துவந்த நூல் அரங்கேற்றம், சங்கப் பலகை, புனலில் எதிர்செல்லுதல் போன்ற செய்திகளிலிருந்து அறிந்து கொள்ள முடிகின்றது. ஆயினும், சங்க இலக்கியங்களிலிருந்து தெரியவரும் செய்தியான

மடலேறுதல் என்பதிலிருந்து, தாழை, பனை ஓலைகளில் எழுத்தாணிகொண்டு சித்திரம் எழுதும் பழக்கம் இருந்தது என அறிய முடிகின்றது. இதனால், சித்திர வரி வடிவங்கள் கடினமான பொருள்களான, கல், களிமண், மண்பானைகள் போன்றவற்றில் பொறிக்கப்பட்டதற்கு இணையாகவே ஓலைகளிலும், மடல்களிலும் பொறிக்கப்பட்டன என அறியலாம். ஓலைகள் 400 ஆண்டுகளுக்குமேல் அழிந்துபடுமாதலால், ஆதியில் அவற்றிலமைந்து வந்த எழுத்து முறைகளை நம்மால் அறிந்து கொள்ள இயலாததாகி விடுகின்றன. தொல்காப்பியம் கூறும் சில எழுத்து முறைகளையே ஆதிஎழுத்துமுறையாகக் கொள்ள வேண்டியுள்ளது.

### ஓலைச்சுவடிகளின் வரலாறு

பண்டு தொட்டே தமிழைப் பயில்வோர் பனை ஓலைகளில் பிரதிசெய்து படிக்கும் பழக்கம் மேற்கொண்டிருந்தனர். ஏடுகளில் எண்ணங்கள் பதிக்கப்பெற்றதால் 'ஏட்டுச் சுவடி' என்று பெயர் ஏற்பட்டது. பல சுவடிகளின் தொகுப்பு தொங்கவிட்டுள்ளமையால் 'சுவடித் தூக்கு' என்று பெயர் வழங்கலாயிற்று. ஓலைகளில் எழுதிவைத்துப் பாதுகாக்கப்பெற்றமையால் 'முடங்கல்' என்றும் பெயர் பெற்றது. ஆயினும், தூக்கு, முடங்கல் என்ற சொல்லாட்சிகள் பழந்தமிழிலக்கியங்களில் வந்தாலும் நேரிடையாக ஓலைச் சுவடிகளைக் குறிப்பன அல்ல.

சங்ககாலப் புலவர் எனக் கருதப் பெறும் இடைக்காடர் பாடியதாக மூன்று ஊசிமுறிப் பாடல்கள் கிடைத்துள்ளன (பெருந்தொகை: பக்கம் 327), மு. இராகவையங்கார் பதிப்பு, இப்பாடல்களின் பெயரைக் கொண்டே இவை ஊசி (எழுத்தாணி)யால் வரைய முடியாத ஒலிக்குறிப்புக்களைக் கொண்ட பாடல்கள் என்பது விளங்கும். இதனால் ஊசியால் எழுதக் கூடிய பிற பாடல்கள் இருந்தமை வெளிப்படை. திருஞானசம்பந்தர், யாழில் இசைக்க முடியாத யாழ்முறிப் பாடலைப் பாடினார் என்பது போல ஊசி முறிப் பாடல்களும் இருந்துள்ளமை தெரிகிறது.

ஏட்டில் பிரதி செய்து படிக்கும் பழக்கம் மிகுந்திருந்ததால் அவர்கள் எழுதும் வரிவடித்திலும் பல மாற்றங்கள் இருந்தன. கல்வெட்டுகள், செப்புத் தகடுகள் போல அழிவற்றனவாயில்லாத ஏடுகள் பிரதி செய்யப்படுவதினாலேயே காலந்தோறும் பல வடிவங்களைப் பெற்றன. கி.பி. 15 ஆம் நூற்றாண்டு ஏட்டு

எழுத்து வடிவமே நமக்கு ஆதி ஏட்டு எழுத்து வடிவமாகத் தெரியவருகின்றது. அதன் பின் கி.பி. 1611இல் எழுதப் பெற்றுக் கிடைக்கும் ஓர் ஏடுதான் மிகப் பழமையான சுவடி எழுத்து முறையினைக் கொண்டுள்ளதாகத் தெரிகின்றது. இது முதல் தற்போது வரை சொற்ப மாற்றங்களே சுவடி எழுத்து முறையில் ஏற்பட்டுள்ளன. வீரமாமுனிவர் 18ஆம் நூற்றாண்டில் செய்த சீர்திருத்தம் தவிர வேறு குறிப்பிடத்தக்க மாற்றம் எதுவும் இல்லை என்றே தெரிகின்றது.

**பிரதி செய்தலின்போது ஏற்படும் பிழைகள்**

ஏடுகளின் குறைவான ஆயுளினால், அவற்றைப் பிரதி செய்தல் தேவையாயிற்று. அவ்வக்காலத்து வரிவடிவத்திற்கேற்பச் சுவடிகளிலும் பிரதி செய்தலின்போது மாற்றம் ஏற்பட்டுள்ளது. இவ்வாறு மாற்றம் பெறாது சங்ககாலத்து வரிவடிவம் நமக்கு இன்று கிடைக்குமாயின் அதனை எளிதில் படிக்கவியலாது.

ஏட்டில் எழுதுவது என்பது தனிக்கலை. ஏடுகளின் இருபுறத்திலும் எழுதப் பெறுவதால் ஒற்றுக்கும் புள்ளி இடுவது இல்லை. எழுத்துகள் செங்குத்தாக எழுதப் பெறாது சற்றுச் சாய்த்தே எழுதப் பெற்றன. ஏடுகள் முறிவதிலிருந்து காக்கவே இவற்றைத் தமிழர்கள் மேற்கொண்டனர். எகர ஏகாரங்கள் கால்வாங்காமலும், ஒகர-ஓகாரங்கள் சுழிக்கப் பெறாமலும், இடையின வல்லின ரகர றகரங்கள் வேறுபடுத்தப் பெறாமலும், இடையின ரகரமும் துணை எழுத்தும் ஒரே மாதிரியும், கொம்புகளுக்குள் வேறுபாடு இன்றி ஒற்றைக் கொம்பாலும் எழுதப் பெற்று வந்தன. சொற்சுருக்கத்திற்காகக் கூட்டெழுத்துகள் கையாளப் பெற்றன. எழுத்தால் எழுத வேண்டியவிடத்து எண்கள், எண்களாலேயே குறிக்கப் பெற்றன. இவற்றைத் தவிரச் சில குறியீடுகள் கடைப்பிடிக்கப் பெற்றன.

ஆயினும் பிரதி செய்வோரில் கூலிக்குப் பிரதி செய்வோரும் பயிற்சி இல்லாதோரும் பிறரும் இருந்ததால், பிரதிகளில் பிழைகள் மலியலாயின. மேலும் ஒருவர் படிக்க அவ்வொலியைக் கேட்டுப் பிரதி செய்வதாலும் தவறு ஏற்பட்டுவிடும். தென்பாண்டி நாட்டினர் ழகர-ளகர, றகர-ரகர, நகர-ணகர வேறுபாடின்றிப் பேசுவதால், அவ்வாறு ஒலிகளைக் கேட்டு எழுதும்போது இவ்வெழுத்துக்களை அவற்றுள் மாற்றி எழுதி விடுவதுண்டு. இதனால் பிரதி பேதங்களுக்கும் பாட பேதங்களுக்கும் இடமளித்து விடுகின்றனர்.

### சுவடிகளின் நலிவு

தமிழகத்தில் களப்பிரர் ஆட்சி நடந்ததாகச் சொல்லப்பெறும் கால கட்டங்களில் இலக்கியம் வளம் குன்றிப் போயிருந்தது. பல்லவர்க்குப் பின் சோழப் பேரரசு பிற்காலத்தில் நிலையான ஆட்சியினை வழங்கலாயிற்று. சோழப் பேரரசு பிற்காலத்தில் நிலையான ஆட்சியினை வழங்கவியலாதபோது மொழிவளம் மீண்டும் குன்றலாயிற்று. மீண்டும் பாண்டிய மன்னர்களும் பல குறுநில மன்னர்களும் தோன்றித் தம்முள் சண்டையிட்டு, இலங்கையினராலும் விசயநகரத்து நாயக்க மன்னர்களாலும் முஸ்லிம் படையெடுப்புகளாலும் தமிழகமும் தமிழும் குன்றிப்போயின. ஐரோப்பியர் வருகை முற்றிலும் தமிழ் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை இட்டு ஆங்கில வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தது. இதனால் தமிழ்க் கல்வி நசிந்து தமிழ் நூல்கள் ஏட்டோடே இருந்து மறையலாயின. நாட்டில் அச்சுச் சாதனங்களின் அறிமுகத்திற்குப் பின்னும் ஆங்கில நூல்களும் கிறித்தவ நூல்களும் அச்சானமையின் காரணமாகத் தமிழ் நூல்கள் அச்சிடும் நிலை ஏற்பட்டது.

பக்தி இலக்கியங்கள், பக்தி காரணமாக ஓரளவு பாதுகாக்கப்பெற்று, ஓதப்பெற்றுப் பிரதி செய்யப்பெற்றும் வந்துள்ளன. அவற்றின் புனிதம் கருதியே ஏட்டிலிருந்தவாறும், பிழையோடேயே ஓதப்பட்டு வந்தன. பிரதி செய்தவர்களால் ஏற்பட்ட இப்பிழைகள், நாயன்மார்களும் ஆழ்வார்களும் மற்றும் அருளாளர்களும் செய்துவிட்ட பிழைகளாகக் கொள்ளக்கூடாத நிலை ஏற்பட வேண்டும். சுவடிகள் நலிவினாலும், பாதுகாக்கப் பெறாததினாலேயுமே இந்நிலை ஏற்பட்டது. நசிந்து விடாமல் கிடைத்தனவெல்லாம் 19ஆம் நூற்றண்டு மத்தியிலிருந்து பதிப்பிற்குள்ளாயின.

### சுவடிப் பதிப்பின் முன்னோடிகள்

இலக்கணம், இலக்கியம், காவியம், புராணம், நிகண்டு, சிற்றிலக்கியங்கள், மருத்துவம், சோதிடம், இசை போன்ற பல வகைகளிலடங்கும் நூல்கள் அச்சிட்டு வெளிவந்தன. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழ்ச் சுவடிகளைப் பதிப்பிக்கும் முயற்சியில் இராமாநுசக் கவிராயர், ஆறுமுக நாவலர், விசாகப் பெருமாளையர், ட்ருதுரை, பவர்துரை, தாமோதரம் பிள்ளை, கோமளேசுவரன் பேட்டை இராசகோபால் பிள்ளை, எழும்பூர் வேங்கடாசல முதலியார், சபாபதி முதலியார், உ.வே. சாமிநாதையர் ஆகியோர் ஈடுபட்டுத் தமிழ் நூல்களைத்

தக்க ஆய்வுக் குறிப்புகள் சேர்த்து அச்சிட்டு வெளியிட்டனர். முதலில், மூலம் மட்டுமே பதிப்பித்த நிலை மாறி, முன்னுரை, பதவுரை, பொழிப்புரை, சொல் அகராதி என்பவற்றையும் சேர்த்து வெளியிட்டவர்களில் முன்னோடியானவர் டாக்டர் ஐயர் அவர்களே.

சுவடிப் பதிப்பின்போது பெரும்பாலும் இலக்கணம், பழந்தமிழ் இலக்கியம், காவியம், சிற்றிலக்கியங்களே வெளிவந்தன. தமிழின் தேவையை இவை ஓரளவு நிரப்பின. பழந்தமிழ் நூல்கள் இருந்தும் இறந்துபட்டன பல. இறந்துபடுதலினின்று அவற்றைத் தேடிக் கண்டுபிடித்து அரிதின் முயன்று வெளியிட்ட பெருமை டாக்டர் ஐயர் அவர்களுக்கே பெரிதும் உரியது. சுமார் 3000க்கும் மேலான சுவடிகளைத் தேடிப் பெற்று, தமது 60 ஆண்டுகாலப் பதிப்பு வாழ்வில் 74 நூல்கள் வெளியிட்டு அசுர சாதனை புரிந்த மகான் ஐயர் எனில் மிகையாகாது.

ஆனால், இம்முன்னோடிப் பதிப்பாளர்களின் கவனத்துக்கு வராது ஏட்டோடேயே இருந்துபட்ட பாமரர் இலக்கியங்களைப் பெரிய எழுத்துப் பதிப்புக்களாகச் சில பதிப்பாளர்கள் வெளியிட்டதின் காரணமாக இன்று நாட்டுப்புறவியல் ஆய்வில் சுவடிப் பதிப்பும் படிப்பும் ஒரு முக்கிய இடத்தினைப் பெற்றுள்ளது. இன்னும் பதிப்பிக்கப் பெறாத செந்தமிழ் இலக்கியங்களும், மருத்துவ-சோதிட நூல்களும், பக்தி நூல்களும், நாட்டுப்புற இலக்கியங்களும் பின்னால் அட்டவணைப்படுத்திக் காட்டப் பெற்றுள்ளன.

## சுவடிப் பதிப்பு: அன்றும் இன்றும்

ஆரம்ப காலப் பதிப்பாளர்கள், ஏட்டிலிருந்தவாறே சீர் பிரிக்காமல் தொடர்ச்சியாகப் பதிப்பித்தனர். யாப்பின் முக்கியத்துவம் உணரப்பட்ட பின்னரே செம்மையான பதிப்புகள் வெளிவரலாயின. பழைய சுவடிப் பதிப்பில் ஈடுபடுவோர், சுவடிப் பயிற்சி பெற்றதோடு, மொழி வரலாறு, எழுத்து வரலாறு, யாப்பு, பாட்டியல் போன்றவற்றிலும் நல்ல பயிற்சி உடையவர்களாயிருத்தல் வேண்டும். அச்சு நூல்களில் வந்த எழுத்துக்களே அவர்களுக்குப் பழக்கமாகிவிட்டபடியால் ஏட்டிலுள்ள எழுத்துக்கள் மயக்கம் தரலாம். இவ்வாறு மயக்கம் ஏற்படுத்திய சில இடங்கள் கீழே தரப்படுகின்றன.

மையார் ஒண்கண்ணார் மாடநெடுவீதி
கையாற் பந்தோச்சுங் கழிசூழ் தில்லை...

என்ற பகுதியில் 'கழி சூழ் தில்லை' என்றால் கடற்கழி சூழும் தில்லை என்றாகி விடும். இது தென்பாண்டி நாட்டார் ஒருவரால் பிரதி செய்யப் பெற்றதால் 'களி' (ஆடல்) என்பதைக் 'கழி' என்று பிரதி செய்ததால் ஏற்பட்ட பொருள் மயக்கம் என அறியலாம்.

'வளவ ராயினும் அளவறிந் தழித்துண்'

என வரும் ஔவையாரின் கொன்றைவேந்தனடி ஒன்றில், நீதியினைக் கூறும் போது அறிவைக் கூற வேண்டிய தேவை இல்லை, இதனை 'அழித்து' எனக் கொள்ளாது 'அளித்து' எனக் கொள்ளின் பொருள் சிறக்கும்.

சிந்த நனைந்தாடித் தேவர் சிறைமீட்டு
அந்த அமரா வதிகாத்து - வந்து நிலை

என்று பிரித்துச் சேயூர் முருகன் உலாவில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. சிறைமீட்டு அந்த என்பது குற்றியலுகர விதிப்படி தளைகெட்டு விடுகின்றது. இரண்டாவதடியில் மோனை இல்லை. எனவே இச்சொற்றொடரைப் பிரிக்காமல்,

சிந்த நனைந்தாடித் தேவர் சிறைமீட்டு
வந்த அமரா வதிகாத்து

என உள்ளபடியே இருப்பின் பொருள் மயக்கம் ஏற்படாது.

சுவாமிநாதம் என்ற நூலினை அண்மையில் செ.வை. சண்முகம் (1975) பதிப்பித்துள்ளார்.

மெய்தவிரும் கழற்குடம் போல் முறையின்றிப் பிறழ்தல்
மிகும்மடத் தெங்காய் முயன்றோர்க் கன்றிச்
செய்பருத்திக் குண்டிகைபோல் கோளல் கொடைமுட்டுறுதல்
செறியுமடற் பனையெனத்தா னேகொடுத்தால் அன்றி
எய்து அடுத்தோர்க்கு ஈயாமை உடைத்தாகி யெவைக்கும்
இச்சித்தல் அழுக்காறு மனைவஞ்சங் கொடுமை
யையுறல் வீண் படிபோதன்ற குருவுக் குளதாமக் குணங்கள்
இன்மையுமே உள்ளவன் துற்குருவே

இது சுவாமிநாதத்தில் ஐந்தாம்பாடலாகும்.

இப்பாடல் மூன்று காய்ச்சீரும் ஒரு மாச்சீரும் ஆக 4 சீர் மீட்டும் மோனையுடன் மடங்கி எண்சீராக வந்த விருத்தமாகும். இதில் முதலடி

சரியாகப் பிரதி செய்யப் பெற்றுள்ளது. இரண்டாமடி, விருத்தப்பா இலக்கணப்படி அளவொத்து வரவில்லை. 3 காய்ச்சீர் ஒரு மாச்சீராக இல்லாமல், கனிச்சீராகவும் காய்ச்சீராகவும் பிரதி செய்யப் பெற்றுள்ளது. 'கொளல்' என்றிருக்க வேண்டியதைக் 'கொம்பு' வேறுபாட்டால் 'கோளல்' எனக்கொண்டதால் நேர்ந்த பிழை இது.

இதைக் 'கொளல்' எனக் கொண்டு, 'கொளல் கொடை' (விளச்சீர்) 'முட்டுறுதல்' என்பதில் உள்ள 'முட்' சேர்ந்து காய்ச்சீர்களாகும். 'டுறுதல்' என்பது புளிமாவாகி விடும். இது குறில்-நெடில் மயக்கத்தால் வந்த பிழையாகும்.

மூன்றாமடி அளவொத்துள்ளது. ஆனால் நான்காமடியில் சீர்கள் சரிவரப் பிரிக்காமல் அமைக்கப்பட்டுள்ளன. அது,

ஐயுறல்வீண் படிப்போத னற்குரவுக் குளதாம்
அக்குணங்கள் இன்மையுமே உள்ளவன் துற்குருவே

என அமைய வேண்டும்.

மங்கையர்க்கரசி வெண்பா என்ற நூலினைச் சாமி ஐயா என்பவர் பதிப்பித்துள்ளார். அந்நூலில் ஒரு பாடலில்,

வில்லா வளையாமல் வில்வளைக்கும் மேருவுக்கு
வில்லார்ந்த வாகுவலையம் மேவி யிட்டான்

என்று வருவதில், இவ்வடிகளில் வெண்பா இலக்கணம் பொருந்தியுள்ளதா என்று பார்க்க வேண்டும். 'வில்லார்ந்த வாகுவலையம்' என்ற இரண்டாமடி தளை கெட்டுள்ளது. வெண்பாவில் 4 அசைச் சீர் கொண்ட கனிச்சீர் வராது. வாகுவலையம் என்பது 4 அசைச்சீர் ஆகும். இதனை நீக்க, வில்லார்ந்த என்பதிலுள்ள 'ஆர்ந்த' என்ற மிகை எழுத்துக்களை நீக்கி 'வில்லா குவலையம்' எனப் பதிப்பிக்க வேண்டும்.

மற்றொருவிடத்தில்,

தனைநயந்து நின்றான் தாதையும் தன்பாவை
தனைநயந்து முன்னீநதான் சார்ந்து

என்று முடிகின்ற வெண்பாவில், 'தனை நயந்து நின்றான் தாதையும்' என்பது பிழை. மாமுன் நிரையும் காய்முன் நேரும் வருவதே விதி. இங்கு, 'நின்றான் தாதையும்' என்பதில் மாமுன் நேர்வந்து தளை பிறழ்ந்துள்ளது. 'தனைநயந்து

முன்னீந்தான்' என்பதற்கேற்ப முந்திய அடியில் 'தளை நயந்து முன் நின்றான்' என்றிருப்பின் தளை கெடாது. இது பிரதி செய்தவர் 'முன்' என்பதை விட்டு விட்டதால் ஏற்பட்ட மயக்கமாகும்.

சுவடிப் பதிப்பின்போது முன்பு சொல்லப் பெற்ற பயிற்சிகள் நன்கு அமையப் பெற்றாலேயே சிறந்த பதிப்பினைக் கொண்டு வர முடியும் என வலியுறுத்தவே இவ்வாறு காட்டப் பெற்றன.

## தற்காலத்தில் சுவடிகள் நிலைகள்

உள்நாட்டிலும் அயல் நாடுகளிலும் இன்றைய தினம் பல நிறுவனங்கள் தமிழ்ச் சுவடிகளைக் கொண்டுள்ளன. நம் நாட்டில் அண்மையில் சுவடிப் பதிப்பு உயிர் பெற்று எழுதலுக்கான வாய்ப்பு தோன்றியுள்ளது. சுவடிகள் உள்ள நிறுவனங்கள் வருமாறு:

| இடம் | நிறுவனம் சுவடி | எண்ணிக்கை சுமார் |
|---|---|---|
| சென்னை | அரசு கீழ்த்திசைச் சுவடி நிலையம் | 12,000 |
| | உ.வே சா. நூல் நிலையம், திருவான்மியூர் | 3,000 |
| | அடையாறு (பிரமஞானசபை) நூலகம் | 1,500 |
| | தொல்பொருள் ஆய்வுத் துறை | ? |
| | ஆவணக் காப்பகம் | ? |
| | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் | 300 |
| | சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையம் | 800 |
| | ஆசியவியல் ஆய்வு நிறுவனம் | 300 |
| | ஓலைச் சுவடிகள் பாதுகாப்பு மையம் | 500 |
| காஞ்சி | காமகோடி பீடம் ஸ்ரீசங்கராச்சரியார் மடம் | ? |
| பாண்டி | பிரஞ்சிந்திய நிறுவனம் | 750 |
| தெ.ஆ. | குமாரதேவர் மடம் | 400 |
| தஞ்சை | சரஸ்வதி மகால் நூலகம் | 2,500 |
| | தமிழ்ப் பல்கலைக்கழகம் | 1,123 |
| | தருமபுர ஆதீன மடம், மயிலாடுதுறை | 146 |
| | காசிமடம், திருப்பனந்தாள் | ? |

| | | |
|---|---|---|
| | திருவாவடுதுறை மடம், திருவாவடுதுறை | ? |
| மதுரை | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 360 |
| | மதுரை காமராசர் பல்கலைக்கழகம் | ? |
| கோவை | சாந்தலிங்க அடிகளார் மடம், பேரூர் | 272 |
| ஈரோடு | கலைமகள் கல்வி நிலையம் | 70 |
| திருவனந்த புரம் | கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசை ஓலைச் சுவடிகள் நிலையம் | 3, 280 |
| | கள்ளிக்கோட்டைப் பல்கலைக்கழகம் | ? |
| | சாகித்திய அகடமி, திருச்சூர் | ? |
| ஆந்திர | ஆந்திர பல்கலைக்கழகம், விசாகப்பட்டினம் | 100 |
| மாநிலம் | உசுமானியப் பல்கலைக்கழகம், ஹைதராபாத் | 140 |
| | திருவேங்கடவன் பல்கலைக்கழகம் | ? |
| கல்கத்தா | தேசிய நூலகம் | 390 |

இவற்றையன்றி, இன்னும் சிறுசிறு நிறுவனங்களில் கூடக் குறைந்த அளவில் சுவடிகள் இருக்கின்றன. நிறுவனங்களில் உள்ள சுவடிகளில் தெரியவந்துள்ள எண்ணிக்கை சுமார் 20,000க்கும் மேல். இவையன்றித் தனியார்களிடமும் மிகுந்த சுவடிகள் இருப்பது தற்போது தெரிய வந்துள்ளது. சுமார் 25,000 சுவடிகள் வரை கிடைக்கலாம் என்று கணக்கிடப்படுகிறது.

அயல் நாடுகளில் சுவடிகள் சென்றமை நமது புறக்கணிப்பினாலேயே ஆகும். வந்தாரை வாழ வைக்கும் தமிழகம் புறக்கணித்த சுவடிகளை மேலைநாட்டாரும் கீழை நாட்டாரும் கொண்டு சென்றுள்ளனர். அயல்நாடுகளில் சுவடிகளிருப்பதை அண்மையில், சேவியர் தனிநாயக அடிகளார், அ. தாமோதரன், கிருஷ்ணமூர்த்தி, வி.ஐ. சுப்பிரமணியம், கி. வேங்கட சுப்பிரமணியன், கிரிகோரி, திருவான்மியூர் ஜேம்ஸ் போன்றோர் தம் அறிக்கைகளில் வெளியிட்டிருக்கின்றனர். இவற்றின் விபரம் வருமாறு:

| இடம் | நிறுவனம் | எண்ணிக்கை (சுமார்) |
|---|---|---|
| பிரான்ஸ் | பாரீஸ் தேசிய நூலக சுவடி நிலையம் | 1000 |
| இங்கிலாந்து | பிரிட்டிஷ் மியூசிய நூலகம் | |
| | இந்திய ஆபிஸ் நூலகம் | |
| | ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம | |
| | இந்தியவியல் நூலகம் | |
| | ராயல் ஏஷியாட்டிக் சொசைட்டி நூலகம் | |
| | மான்செஸ்டர் மற்றும் பல பல்கலைக்கழக நூலகங்கள் | |
| ஜெர்மனி | ஹாலே, ஹம்பூர்க், பெர்லின், கோலோன் ஹைடல்பர்க் போன்ற நகரங்களிலுள்ள பல்கலைக்கழக இந்தியவியல் நிறுவனங்கள் | 1000 |
| அர்மீனியா, ஸ்பெயின் மற்றும் சில ஐரோப்பிய நாடுகள | பல பல்கலைக்கழகங்களில் | தெரியவில்லை |
| அமெரிக்கா | பல பல்கலைக்கழக நூலகங்கள | தெரியவில்லை |
| கீழைநாடுகள் | பல பல்கலைக்கழக நூலகங்கள் | தெரியவில்லை |

அயல் நாட்டார் சமயம், வர்த்தகம், பண்பாடு மற்றும் அரசியல் உறவு கொண்டதாலேயே தமிழ்நாட்டில் புறக்கணிக்கப்பட்ட சுவடிகளைக் கொண்டு சென்று பாதுகாத்து வருகின்றனர். இங்கே அழியும் நிலையிலிருந்தவை தற்போது பாதுகாப்பாகப் பெற்றாலும் அவை பற்றிய விளக்கமோ மற்றும் ஆய்வோ எதுவும் ஏற்படாது உள்ளன என்பது வருந்தத் தக்கதாகும். அயல் நாடுகளிலுள்ள சுவடிகள் ஐயாயிரத்திற்கும் மேலாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

## பதிப்பிக்காத சுவடிகள்

உள்நாட்டிலும் அயல் நாடுகளிலும் சுமார் 30,000 சுவடிகள் நிறுவனங்கள் கொண்டுள்ளன என அண்மையில் நடந்த ஆய்வு கருதுகின்றது. இவற்றில்,

| | |
|---|---|
| மருத்துவம் | 50% |
| சோதிடம் | 10% |
| சமயம் | 10% |
| கலை, இலக்கியம் | 10% |
| வரலாறு | 5% |
| இலக்கணம் | 5% |
| நாட்டுப்புற இலக்கியம் | 10% |

என்னும் விகிதத்தில் சுவடிகள் அமைந்துள்ளன. இக்கணக்கின்படி வெறும், 25% சுவடிகள்தாம் இதுவரையில் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

| | |
|---|---|
| மருத்துவம் | 5% |
| சோதிடம் | 2% |
| சமயம், இலக்கியம் | 10% |
| இலக்கணம் | 4% |
| நாட்டுப்புற இலக்கியம் | 4% |
| | 25% |

இந்நிலையில் சுமார் 75% சதவிகிதம் உள்ள சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடுவது நம் கடமை அல்லவா?

## சுவடியியல்–இனி நாம் செய்ய வேண்டியவை

1. தமிழ்ச் சுவடிகள் உலகெங்கும் பரவலாக இருப்பதாலும் பல இடங்களில் சுவடிகளுக்கு அட்டவணையே இலலையாதலாலும், அவற்றுக்குரிய விவர அட்டவணையைத் தயாரித்தல் வேண்டும்.
2. தமிழ்ச் சுவடிகளைப் படித்துப் பிரதி செய்வது இப்போது அருகி விட்டபடியாலும், சுவடி படித்துப் பிரதி செய்யும் அறிஞர்கள் ஒரு சிலரே இருப்பதாலும், எதிர்காலத்தில் சுவடியைப் படித்துப் பிரதி செய்யும் தகுதியாளர்களை உடன் உற்பத்தி செய்ய வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். பல்கலைக்கழகக் கல்லூரித் தமிழ் ஆசிரியர்களுக்கு இப்பயிற்சியை முதற்கண் அளித்துப் பின் இளங்கலை, முதுகலை, எம்.பில். தமிழ் மாணாக்கர்களுக்குரிய பாடத்திட்டத்தில் சுவடி இயலைச் சேர்த்துப் பயிற்சி தர வேண்டும்.

3. மருத்துவச் சுவடிகளே மிகுதியாகவும், மிகுதியாக வெளிவராமலும் இருப்பதால், சித்த மருத்துவ மாணாக்கர்களுக்கு இப்பயிற்சியை மிக அவசியமானதாக்க வேண்டும்.

4. அறுபதாண்டு பதிப்பு முயற்சியில் டாக்டர் ஐயர் 74 நூல்களே பதிப்பித்துள்ளார் என்பதையும் இன்னும் பல்லாயிரம் சுவடிகள் பதிப்பிக்கப் பெற வேண்டும் என்ற நிலையில், பல்கலைக்கழகம், மாநில, மத்திய அரசு, அறநிறுவனங்கள் ஊக்கமுடன் உதவி எல்லாச் சுவடிகளும் விரைவில் வெளிவர ஆவன புரிதல் வேண்டும்.

5. அயல்நாடுகளிலுள்ள சுவடிகளையும், இன்னும் பல தனியாரிடம் உள்ள சுவடிகளையும் நுண்ணிழற்படப் பிரதி செய்து ஒருசேரத் தொகுக்க அரசு உதவ வேண்டும்.

# நோக்கு நூல்களின் தேவை

## (இலக்கியம்)

கி. நாச்சிமுத்து

நோக்கு நூல்கள், கருவி நூல்கள், துணை நூல்கள் என்றெல்லாம் அழைக்கப்படும் நூல்கள் - ஒரு பொருள் பற்றிய செய்திகளை விரைந்தும், எளிதாகவும் ஆய்வாளரும் பொதுமக்களும் அறிந்து கொள்ள உதவுபவை ஆகும். எனவே இந்நூல்கள் 1. செய்திப் பரிமாற்றத்திற்கு உதவும் களஞ்சியங்களாகவும், 2. செய்தி சேகரிப்பவர்களுக்கு வழிகாட்டிகளாவும், 3. இணை ஆய்வுகளைத் தடுக்கும் சிக்கனச் சேமிப்புகளாகவும், 4. அறிவு வளர்ச்சியின் அளவுகோல்களாகவும் பிறவாறும் அமைவதில் வியப்பேதும் இல்லை.

இவற்றின் வகைகள் பலவுண்டு. எனினும் இலக்கியத்துறையின் தேவைக்கேற்ப இவற்றைக் கீழ்கண்டவாறு சுட்டலாம்.

1. அகராதிகள் பலவித அடைவுகள் - களஞ்சியங்கள் முதலியன.
2. தொகுப்பு நூல்கள், வாசக நூல்கள் முதலியன
3. நூலடைவுகள், நூல் பட்டியல்கள், இதழ்ப் பட்டியல்கள், இதழ்ச் சுருக்கங்கள், அடைவுகள்: நோக்கு நூல்கள் பற்றிய நோக்கு நூல்கள்.
4. வாழ்க்கை வரலாற்று அடைவுகள். நோக்கு நூல்கள்.
5. ஆண்டு நூல்கள், கையேடுகள், வழிகாட்டிகள், பயிற்சி நூல்கள்.
6. மேற்கோள் தொகுப்புகள், மேற்கோளடைவுகள்.
7. நிலப்படங்கள், இடப்பெயர்த் தொகுப்புகள்.

### தமிழில் இலக்கிய நூல் பெருக்கம்

இந்தியாவில் 7% மக்கள் பேசும் தமிழ் மொழியில் ஆண்டுதோறும் ஆயிரத்திற்கு மேற்பட்ட நூல்கள் வெளியாயினும் அவற்றில் பாதிக்கும் மேல் இலக்கியம் பற்றியவை என்பதைக் கீழ்க்கண்ட பட்டியல் விளக்கும்.

நூற்பதிவுச் சட்டப்படி பெற்ற நூல்கள்

**அடிப்படையில் நூல் வெளியீட்டினைக் காட்டும் பட்டியல்**

| ஆண்டு | 1974-75 | 75-76 | 76-77 | 77-78 | 78-79 |
|---|---|---|---|---|---|
| தமிழகத்தில வெளியாகும் மொத்த நூல்கள் | 1236 | 1651 | 2017 | 1863 | 2045 |
| தமிழ் நூல்கள் | 864 | 1044 | 1294 | 1319 | 1595 |
| இலக்கிய நூல்கள் | 321 | 527 | 696 | 764 | 887 |

ஆதாரம் புக் பப்ளிஷிங் இன் இண்டியா, கே.எஸ். துக்கல், நியூடெல்லி, 1980.

தமிழ் போன்ற வளரும் மொழிகளில் இலக்கியம்தான் முக்கியத் துறையாக அமைநதுள்ளது. ஏனைய அறிவியல், தொழில் நுட்பத் துறைகள் மிகவும் பினதங்கியுள்ளன. முன்னேற்றமடைந்துள்ள இலக்கியத்துறையில் எழுந்துள்ள மிகக் குறைந்த நோக்கு நூல்களைப் பார்க்கும்பொழுது இத்துறை வளர வேணடிய தேவை நன்கு விளங்கும். இப்படியிருக்க அறிவியலைத் தமிழுக்கும் கொண்டுவர நாம் அரிச்சுவடியிலிருந்து செய்ய வேண்டிய பணிகளின் அருமைப்பாடு நன்கு விளங்கும். ஓரளவு வளர்ந்துள்ள இலக்கியத்துறையில் நாம் மேலும் செப்பமுற்றாலொழிய அறிவியல் துறையில் நாம் வளர்வதற்கான வாய்ப்புகள குறைவே. இதை நாம் மனத்தில் ஊன்றிப் பணி செய்ய வேண்டும்.

## முந்தைய நிலை

தமிழில் முற்காலத்தில் எழுந்த சுமார் 80 இலக்கண நூல்களும், பழைய நிகண்டுகளும், தலபுராணங்கள், புராணங்கள் போன்றனவும் ஒரு வகையில் இலக்கிய நோக்கு நூல்களுக்கு நூல்களின் தேவையை நிறைவு செய்ய எழுந்தவை எனலாம்.

வைணவ மரபில் திவ்யப் பிரபந்தம் போற்றிக் கற்கப்பட்டு வந்ததால் வியாக்கியானங்கள் மட்டுமின்றிப் பலவித அகராதிகள், மேற்கோள் விளக்க அடைவுகள் முதற்குறிப்பகராதிகள் முதலியன எழுந்துள்ளதை வைணவ உரைமரபில் காணலாம். மிகவும் ஆழமாக நிகழ்ந்த ஆராய்ச்சிகளினாலேயே

இத்தகைய நூல்கள் எழுந்திருக்க வேண்டும். இவற்றின் பாதிப்பு, தமிழிலக்கியத்தின் பிற துறைகளில் ஏற்படாமற் போனது பெருவியப்பே.

ஐரோப்பியர் வரவிற்குப் பின் நிகண்டுகளுக்கு மாற்றாக அகராதிகளும் களஞ்சியங்களும் எழுந்தன. இந்திய மொழிகளில் அபிதான சிந்தாமணி என்ற கலைக்களஞ்சியமும், தமிழ்ப் பேரகராதியும், பொதுக் கலைக்களஞ்சியமும் நூலடைவும் தமிழில்தான் முதலில் எழுந்தன என்ற பெருமை உண்டு. ஆனால் இவை தமிழகத்தில் கற்றோர் எண்ணிக்கை கூடவும், பொது அறிவு பெருகவும், ஆராய்ச்சி பெருகவும் எவ்வாறு உதவி உள்ளன என்பது கேள்விக்குரியதே. அதாவது பயன்படுத்துவோர் தொகை பெருகியுள்ளதா என்பதே இங்குக் கேட்கப்படும் கேள்வி. அண்மையில் கேரளாவில் வெளியாகப் போகும் விஸ்வ விஞ்ஞான கோசம் என்ற இரண்டாம் பதிப்பு நூலை முன் விலை ரூ.1200/- கொடுத்து 13,000 பேர் பதிவு செய்துள்ளனர் என்ற கணக்கைத் தமிழ்க் கலைக்களஞ்சியம் 1000 படிகளை அச்சிட்டுக் கொண்டு ஆண்டுக் கணக்கில் விற்காமல் வைத்துக் கொண்டிருந்ததுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். நம் பின்னோக்கு நிலை நன்கு விளங்கும்.

### தமிழில் நோக்கு நூல்கள் மிகுதியாக எழாமைக்குக் காரணம்

1. நோக்கு நூல்களின் தேவையையும் பயனையும் அறியாமை.
2. இவை செம்மையாக அமைக்கப்படும் முறைகளை அறியாமையும் வல்லுநர்களைப் பயன்படுத்தாமையும்.
3. இவை தயாரிப்பிற்கு நீண்ட காலம் பிடித்தல்-அதனால் இவற்றில் பொறுமையாக ஈடுபடாமை-நிறுவன அமைப்புகளின் குறைவும் அவற்றின் குறைபாடுகளும்.
4. பயன்படுத்துவோர் குறைவாக இருப்பதும் பயன்படுத்தாததால் குறைகள் செப்பம் பெறாமல் வளர்ச்சி பெறாமல் இருப்பதும்.

இனி இந்நோக்கு நூல்களின் வகைகளைக் காண்போம்.

### 1. அகராதிகள், பலவித அடைவுகள், கலைக்களஞ்சியங்கள் முதலியன

அகராதிகள் முதலியவைகளைப் பொதுமக்களுக்குப் பயன்படும்படியாகப் பலவகையில் தயாரிக்கலாம். இங்கு அவற்றை விடுத்து இலக்கிய ஆய்வு, கல்வி முதலிய நிலைகளில் வெளிவந்துள்ளவை பற்றியும் வெளிவர வேண்டியவை பற்றியும் சிறிது குறிப்பிடலாம்.

அகராதிகள் என்ற நிலையில் தமிழில் பல எழுந்துள்ளன. அவற்றில் திரு. மு. சதாசிவம் தனிப்பட்ட முறையில் பலவகை அகராதிகளை வெளியிட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

அடைவுகள என்ற நிலையில் சொல்லடைவுகள், ஒத்த வாக்கிய அகராதிகள், பொருளடைவுகள் முதலியவற்றைக் குறிப்பிடலாம். இத்துறையில் தமிழில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், திருக்குறள், சங்க இலக்கியம் முதலிய 150க்கும் மேற்பட்ட இலக்கியங்களுக்குச் சொல்லடைவுகளும் பிறவும் கேரளப் பல்கலைக்கழகம் போன்ற இடங்களிலிருந்தும் வெளியாகியுள்ளன. பொருளடைவு என்ற நிலையில் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை தேவாரம் முதலிய நூல்களுக்கு வெளியிட்டுள்ள ஒளிநெறி நூல்களை நாம் எண்ணி வியக்காமல் இருக்க முடியாது. இத்தகைய சொல்லடைவு, பொருளடைவு நூல்களை இன்னும் செம்மைப்படுத்த வேண்டும். அத்துடன் தொடர் அடைவு முதலிய நிலையிலும் பல இலக்கிய நூல்களுக்கு அடைவுகள் தோன்ற வேண்டும். சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் களஞ்சியத் துறையில் ஒரு நல்ல முயற்சி. இவற்றால் பதிப்புக்கலை, அகராதியியல், மொழியியல், நடையியல், பண்பாட்டு ஆய்வு முதலியன அடையும் நன்மைகளை இங்கு விளக்க வேண்டியதில்லை.

### இத்துறையில் இனிச் செய்யமாகச் செய்ய வேண்டியவை

1. இலக்கிய, இலக்கணக் கலைச்சொல்லகராதிகள்/களஞ்சியங்கள் (எ.டு. பொற்கோ: இலக்கணக் கலைக்களஞ்சியம்)
2. இலக்கிய வகை அகராதிகள் / களஞ்சியங்கள்.
3. இலக்கியப் பாத்திரங்கள் பற்றிய அகராதிகள் / களஞ்சியங்கள்.
4. காலக் குறிப்பகராதிகள்
5. சுவடியியல் பற்றிய களஞ்சியம்

இத்தகைய அகராதிகளின் அமைப்பை உ.வே.சா. பதிப்புகளில் காணலாம்- அவர் இவற்றின் பயன் பற்றிக் கூறுவது இங்கு நினைக்கத்தக்கது.

*"அக்காலத்தில் நான் செய்து வைத்துக் கொண்ட பலவகை அகராதிகளே இன்றும் எனக்கு மூல நிதியாக உதவுகின்றன. அவற்றைக் காணும்போது 'எவ்வளவு காலம் எவ்வளவு அன்பர்களுடைய உழைப்பு இவற்றில் சென்றிருக்கின்றன!' என்று எண்ணி வியப்புறுவேன். அவற்றின் அருமை பெருமையை அச்சிட்ட புத்தகங்களைப் படிப்பவர்கள் சிறிதும் அறியார். மிக உயர்ந்த அலங்காரமான மாளிகையைக் கண்டு அதன் அழகில் ஈடுபடுபவர்கள் அம்மாளிகை எந்த அஸ்திவாரத்தின் மேல் எழுப்பப்பட்டதென்பதைக் கவனிப்பதில்லை. மிகவும் ஜாக்கிரதையாகப் போட்ட அந்த அஸ்திவாரம் பூமிக்குள் மறைந்து கிடக்கின்றது"* (என் சரித்திரம், ப. 726.)

**2. தொகுப்பு நூல்கள் வாசக நூல்கள் முதலியன**

தமிழில் தொகுப்பு நூல்களின் தேவையை முன்பே அறிந்திருந்ததால்தான் தொகை நூல்கள் வழிப் பழம் பாடல்களும் பிறவும் காக்கப்பட்டன. இது பற்றிச் சுந்தர சண்முகனாரின் தமிழில் தொகுப்பு நூற்கலை என்னும் நூலில் விரிவாகக் காணலாம்.

**இனிச் செய்ய வேண்டியவை**

1. காலந்தோறும் தோன்றும் செய்யுள், உரைநடை முதலியவை பற்றிப் பலவிதத் திரட்டு நூல்களும் தொகுப்பு நூல்களும் அமையலாம்

   எ-டு. சேரவேந்தர் செய்யுட்கோவை போலச் சோழ, பாண்டியர் செய்யுட்கோவை- (இடம் பற்றியவை).

காலம், இடம், பொருள், புலவர், இலக்கிய வகை என்ற எத்தனையோ வகையில் செய்யலாம். இவற்றில் ரசனை முறையிலான திரட்டு நூல்கள் மிகுதியும் தேவை (அகத்தியர் தேவாரத் திரட்டு வழிபாட்டு முறையை ஒட்டி எழுந்தது).

சங்க இலக்கியத்திற்கும் திருக்குறள் போன்ற பிறவற்றிற்கும் சுவையடிப்படையில் பல திரட்டுகள் கொண்டு வரலாம். இக்காலச் சிறுகதை, கவிதைத் திரட்டுகளும் இப்படியே செய்யலாம். தனிப் புலவர்கள், எழுத்தாளர் படைப்புகளிலும் திரட்டு நூல்கள் வெளியிடலாம்.

இது போன்ற இன்னொரு வகைத் திரட்டுக் கூடச் செய்யலாம். பள்ளி, கல்லூரிகளில் பாடமாக வைக்க, சொல், இலக்கணம் முதலியவற்றின் அடிப்படையில் படிநிலைகளாக அமைக்கப்பட்ட திரட்டு நூல்கள் வெளியிடலாம். இவை பாடநூல் தயாரிப்புக்கு உதவும்.

இன்னும் இது போன்று உரைகள், இலக்கியப் பகுதிகளுக்கு வாசக நூல்கள் வெளியிடலாம்.

மேற்கோள் தொகுப்புகள், பழமொழித் தொகுப்புகள், விடுகதைத் தொகுப்புகள் மற்றும் பலவித நாட்டுப்புறவியல், செய்தித் தொகுப்புகளையும் இதில் அடக்கலாம்.

மேலும் தற்காலத் தமிழ் இலக்கியத் திறனாய்வு முறைகள் இலக்கண அமைப்பு பற்றிய அளவீட்டு நூல்கள்-அடிப்படை நோக்கு நூல்கள் முதலியன வெளியிடப் பெற வேண்டும்.

### 3. நூலடைவுகள் நூல், பட்டியல்கள், இதழ்ப் பட்டியல்கள், இதழ்ச் சுருக்கங்கள், அடைவுகள், நோக்கு நூல்கள் பற்றிய நோக்கு நூல்கள்

இத்துறையில் சுவடி நூல்களின் பட்டியல்கள் பலவும், மர்டாக் காட்டலாக், சென்னை மாநில நூல் தொகை, தமிழ் நூல் விவரப் பட்டியல், தேசீய நூலடைவின் தமிழ்ப் பகுதி போன்றவையும் தமிழில் ஆய்வேடுகள் பற்றிய நூலடைவுகளும், தனி இலக்கியம், ஆசிரியர் (பாரதி, கம்பர்) பற்றி ஆய்வடங்கல் என்ற பெயரில் நூல்களும், செந்தமிழ் முதலிய இதழின் பொருளடக்கம் பற்றிய நூலடைவுகளும், மொழிபெயர்ப்பு வாழ்க்கை வரலாறு பற்றிய நூலடைவுகளும் பிறவும் வந்துள்ளன. திரு. தாமோதரனின் தமிழகராதிகள், நூலடைவு, மாதையனின் நோக்கு நூலடைவு போன்றவை நோக்கு நூல்கள் பற்றிய நோக்கு நூல்களாகும்.

இவற்றில் ஆய்வடங்கல் என்ற பெயரில் வெளிவந்தவை நூலடைவும், வாசக நூலுமாக அமைந்துள்ளன. இதழ்களின் அடைவாக வந்தவற்றில் செந்தமிழ் பற்றிப் திரு பா. ரா. சுப்பிரமணியமும் தமிழ் இதழ்வழி ஆய்வு என்று திரு மணவாளனும் வெளியிட்ட நூல்கள் செம்மையாக அமைந்துள்ளன. இன்னும் இத்துறையில் பல நூல்கள் எழ வேண்டும்.

ஏனைய நூலடைவுகளும் தமி[redacted] பற்றி வந்துள்ள நூலடைவுகளும் இன்னும் நூலகவியல் நுட்பங்கள், பயன்மிகு அகராதிகள் முதலியவற்றில் செப்பம் பெற்ற அமைப்பிலும் அளவிலும் பிறவற்றிலும் சீர்திருந்த வேண்டியதாக உள்ளன என்பர் இதில் ஆய்வு செய்யும் திரு பாபுராசன்.

இன்னும் பருவ இதழ்ச் சுருக்கங்களும், அடைவுகளும், பட்டியல்களும் அச்சில் வந்த தமிழ் நூலடைவும் ஆண்டு தோறும் வெளியிடப் பெற வேண்டும். இதற்கு அமைப்பு வசதி, கணிப்பொறி வசதி முதலியன உள்ள தமிழ்ப் பல்கலைக்கழகமும், தமிழ் வளர்ச்சித் துறையும் முயன்றால், எளிதில் செய்யலாம். இது உடனடியாகச் செய்ய வேண்டிய பணியாகும். தமிழ்ப் பல்கலைக்கழகம் தமிழ் நாடு பற்றிய ஆய்வேட்டுச் செய்திகளைத் தொகுத்துள்ளது; இதற்கு முன்னோடியாக அமையும் செய்தி சேகரிப்பு, தகவலளிப்புத் துறை தமிழியல் ஆய்விற்கு இன்னும் பலவகையில் உதவத் தக்க முறையில் கைகொடுக்க வேண்டும். இதில் தமிழ் இலக்கியத் துறையினரும் அவர்களுடன் கைகோர்த்துப் பணிபுரிய வேண்டும்.

## 4. வாழ்க்கை வரலாற்று அடைவுகள் / நோக்கு நூல்கள்

வாழ்க்கை வரலாற்று அடைவுகள். 1. யார் எவர் அமைப்பு, 2. அகராதி அமைப்பு, 3. கட்டுரை அமைப்பு என்ற மூன்று நிலையில் அமையலாம்.

தமிழ் எழுத்தாளர் யார் எவர்? தமிழ்ப் புலவர் வரலாற்று வரிசை, தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் (அண்ணாமலை), தமிழ் எழுத்தாளர் டைரக்டரி என்ற நிலையில் சில நூல்கள் வெளி வந்துலவுகின்றன. இவற்றை மேலும் செப்பம்செய்து- இன்றைய பலவித இலக்கியப் படைப்பாளிகள், அறிஞர்கள் பற்றிய வாழ்க்கை வரலாற்றுத் தொகுப்பு நூல்கள் வெளிவர வேண்டும். இவை பெரும்பாலும் அகராதி அமைப்பில் சுருக்கமாக அமைந்தால் பலருக்கும் பயன்படும்.

## 5. ஆண்டு நூல்கள்- கையேடுகள்- வழிகாட்டிகள்- பயிற்சி நூல்கள்

பொதுத்துறையில் ஆண்டு நூல்கள் வெளிவருவது போல் (மலையாளத்தில் மனோரமா ஆண்டு நூல் போலத் தமிழில் இல்லை) இலக்கியத்திற்கும் விரிவான ஆண்டு நூல் வெளிவர வேண்டும். திரு ச. வே.சுப்பிரமணியனார் முயற்சியில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

80-இல் தமிழ், 81-இல் தமிழ் போன்று நூல்களை வெளியிட்டு வந்தது. இம்முயற்சிகளைத் தொடர்ந்து, செம்மைப்படுத்தி முறையாகச் செய்யலாம். இதில் ஆண்டு தோறும் இலக்கிய வளர்ச்சியை அளவீடு செய்யும் முறையில் அமைக்கலாம்.

இலக்கியப் பயிற்சி நூல்கள், இலக்கணக் கையேடுகள், பயிற்சி நூல்கள் முதலியவையும் வெளியிடப்பட வேண்டும். பழைய இலக்கியம், இலக்கணங்களைக் கற்பிக்கப் பயிற்சி நூல்கள் தேவை; அவற்றால் இக்கல்வி செம்மையடையும்.

மொழிபெயர்ப்புப் பற்றிய பலவகை வழிகாட்டி நூல்கள் தேவை. நூற்பதிப்பு, சுவடிப் பதிப்பு, தொகுப்புக் கலை, அகராதிக் கலை, நூலகவியல் என்று பல துறைக் கையேடுகளும் தேவை.

### 6. மேற்கோள் தொகுப்புகள்: மேற்கோளடைவுகள்

சிறப்பு மேற்கோள் தொகுப்புகள் பலவகையிலும் திரட்டப்பட்டு வெளியிடப் பெறவேண்டும். தமிழில் பொன்மொழி வரிசை தவிரப் பிற வகை நூல்கள் அதிகம் காணோம். டாக்டர் தாமோதரனின் திருக்குறள் மேற்கோளடைவு போன்று பிற்காலத்தில் நூல்கள் எழவில்லை. சங்க நூல்களுக்கும் பிறவற்றிற்கும் இத்தகைய அடைவொன்று வேண்டும்.

### 7. நிலப்படங்கள்: இடப்பெயர்த் தொகுப்புகள்

இவற்றால் இலக்கிய வரலாறு, கால ஆராய்ச்சி முதலியவற்றுக்குப் பயனுண்டு. வரலாற்று முறை நிலப்படங்கள், இடப்பெயர் அகராதிகள் முதலியவையும், கல்வெட்டு. இலக்கியம் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டும் தயாரிக்க வேண்டும்.

### இன்னும் செய்ய வேண்டியவை

1. அச்சில் வாராத நூல்களை அச்சிற் கொணர்தல். இவற்றில் ஏட்டுச் சுவடிகள் மட்டுமின்றி ஆய்வேடுகள், அறிக்கைகள் போன்று அச்சில் வாராமல் நூலகங்களில் கிடப்பவைகளையும் வெளிக்கொணர்தல் வேண்டும்.
2. பழைய நூல்களுக்கு உ.வே.சா. பதிப்புகள் போன்று செம்பதிப்புகள் கொண்டு வருதல்.
3. பழைய நூல்கள் கிடைக்காதவற்றிற்கு மறுபதிப்புகள் கொண்டு வருதல்.

4. மலிவுப் பதிப்பு வரிசை வெளியிடல்

5. தமிழ் பேசும் பிற நாடுகளுக்குத் தமிழ் நூல்கள், பருவ இதழ்கள், பிற வெளியீடுகள் முதலியவற்றை ஏற்றுமதி இறக்குமதி செய்தல்.

1. மேலே கண்ட நோக்கு நூல்களைத் தொடர்ந்து வெளியிட அமைப்புகளை ஏற்படுத்தல்.

2. இத்தகைய நோக்கு நூல்களைப் பயன்படுத்தும் முறைகளையும் (அகராதிகள், களஞ்சியங்கள்), பயனையும் மாணவர்க்கும், பிறருக்கும் படிப்பித்தல்-பயிற்றுவித்தல் (குறுகிய காலப் பயிற்சி வகுப்புகள் வழி) முதலியன செய்தாலேயே இந்நோக்கு நூல்களின் பயன் மக்களுக்கும் ஆய்வாளருக்கும் சென்றடையும்.

# உத்திகளும் நயப்படுத்தமும்

தி. லீலாவதி

சிறுகதை, நாவல் படைப்புகளில் உத்திகள் நயப்படுத்தம் பற்றிய சில சிந்தனைகள்.

"இலக்கிய வித்தைகளை யார் கற்றுத்தர இயலும்? அதன் நயங்கள் சொல்லப்படுகையில் தாழ்பட்டுப் போகின்றன. பின்பற்றப் படுகையில் காலை வாரி விடுகிறது. தன்னுடைய கணைகளைத் தானே தேடும் முயற்சி அது" சுந்தர ராமசாமி கூறும் இக்கூற்று, கலை வடிவம் பற்றிச் சிந்திக்கத் தூண்டுகிறது.

கலை என்பது கருத்தும் வடிவமும் இணைந்து புனையும் ஒப்பனை. கருத்துக்கேற்ற வடிவ ஒப்பனை அமைதல் இயல்பாகிறது. ஒப்பனை நுணுக்கங்களே உத்திகள். கலை ஆக்க முயற்சிகளுக்கு உரிய தொழில் செய்வினை நேர்த்திகளே உத்திகள், அல்லது படைப்பாக்க நெறிமைகள் என்று கொள்ளலாம். கலைஞனின் தொழில் நேர்த்தியின் முத்திரைப் பதிவு உத்தி.

எழுத்துத் தவத்தின் தீவிரத்தைப் பொறுத்தது கலை வடிவம் என்பார் தி. ஜானகிராமன்.

1. எனக்காக எழுதுவது
2. உங்களுக்காக எழுதுவது
3. எனக்கும் உங்களுக்குமாக எழுதுவது

தி. ஜானகிராமன் எழுத்துப் பிறப்பின் அமைப்பினை இங்ஙனம் வகைப்படுத்துவார்:

முதல் வகை ஆன்ம நிவேதினம்
இரண்டாம் வகை எழுத்து வணிகம்
மூன்றாம் வகை தொழில் தர்மம்

என்று உணரலாம்.

எழுத்துத் தொழிலின் முதல் வகையில் புதுமை காணும் விருப்பத்திற்கு இடம் உண்டு.

இரண்டாம் வகையில் பணம், புகழ், வாசக ஈர்ப்பு என்ற வகையில் வணிக மனப்பான்மையில் உற்பத்தி முறை உருவாகிறது. இங்கு 'போலச் செய்தல்' என்ற முறையில் படைப்புத் தொழிலே எளிமைபட்டுப் போகிறது.

மூன்றாவது வகையில் தன் விருப்பமும், வாசக விருப்பமும் இணைந்த நிலையில், சுயத்தை (Self) வெளிப்படுத்தும் ஆர்வத்துடன் வாசக ஈடுபாட்டிற்கு இயைந்து எதிர்பார்ப்புகளும் நிறைவேற இடம் உண்டு.

எனவே உத்திகள் என்ற பரச்சட்டத்தில் எண்ணிக்கை உருண்டைகளாய்ப் படைப்பினை முன்னும் பின்னுமாய் எண்ணி, வரையறைக்குள் கட்டுப்படுத்த முடியாது. இங்கு உத்திகளே வார்ப்புச் சட்ட வடிவிற்குள் அமைந்தனவல்ல என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும். படைப்பு மூலப் பொருள் மாறி, தேய்ந்து, மாய்ந்து, புதுப்பிக்கப் பெறுதல் போல, மூலப் பொருளுக்குரிய வடிவத்தினை நிர்ணயிக்கும் உத்திகளும் புதுப்பிப்பதற்கு உட்படுகின்றன.

படைப்பிலக்கியச் செயற்பாட்டில் மற்றொரு கருத்து நிலையும் சிந்திப்பதற்குரியது.

1. வாழ்க்கைத் தேவைக்கான தொழிலாகப் படைப்புத் தொழில் அமைவது.
2. வேறு பல தொழில் வாழ்க்கைக்கிடையில் கலைப் படைப்புத் தொழிலை ஓர் அம்சமாகக் கொண்டு செயற்படுவது.

படைப்பே தொழிலாகும்போது, தொழில் ஆர்வம், முயற்சி, புதுவது காணும் வேட்கை, புகழ், வசதி என்ற பல நிலைகளில் தொழில் மேம்படுத்தல் அடிப்படையில் புதுமைகள் தோன்ற வாய்ப்புண்டு. இங்குப் படைப்புத் தொழில் முழுநிலையில் வைத்து எண்ணப்படும்.

இரண்டாம் நிலையில் கலை உணர்வின் அரிப்பிற்கு வடிகாலாகப் படைப்பு வெளிப்பாடு அமைகிறது. முழுநேரத் தொழிலாகப் படைப்புத் தொழில் அமைவதில்லை. ஒரு வகையில் வாழ்க்கைப் பொழுதுபோக்காக இது இரண்டாம் நிலைக்குத் தள்ளப்படுகிறது.

எனவே மேற்குறித்த இரு வகைப் போக்கிற்கேற்ப உத்திகள், வளர்தல், ஒரே நிலைப்படுதல், தேய்தல், மறைதல், புதியன முளைத்தல் என்ற கூர்தலற விதிமுறைகளுக்குட்படுகின்றன.

இப்பின்னணியில் இன்றைய சிறுகதை, நாவல் படைப்பாக்க உத்தி நிலைகள், அவற்றை நயப்படுத்தல் என்ற ஆராய்ச்சியில், சில சிந்தனைகள் தெறிப்பாக வெளிப்படுத்தப்படுகின்றன. இவ் ஆய்வு எதிர்கால எதிபார்ப்புகளையும் உள்ளடக்கி அமையும்.

நேற்றைய உத்திகளின் தேய்வில், இன்றைய புதுக் கலை வடிவங்களை உருவாக்க வேகம் பிறக்கிறது.

நாளைய எதிர்பார்ப்பில் இன்றையவை பழமை அடைய, புதிய வடிவப் பாங்குகள் உருவாககம் பெறுகின்றன.

எந்தக் கலையும் சட்ட வரம்பின் விதிகளின் பிடியில் சிக்கி விட முடியாது. கலைக்கும் வாழ்க்கைக்கும் உள்ள வேறுபாடு எண்ணுவதற்குரியது. கலையில் சுதந்திரம் பிறபபுரிமை. வாழக்கையில் கட்டுப்பாடு உயிர்நிலை.

கலைச சுதந்திரம்தான் காலமெல்லாம் கலைப் புதுமை வெளிப்பாட்டுக்குக் காரணமாகிறது.

ந. பிச்சமூர்த்தி கூற்று நினைப்பதற்குரியது. "கலைஞன் என்றொரு தனி சிருஷ்டி இல்லை; அவனும் மனிதன்தான். மனிதனுக்குள்ளே கலைஞன் இருக்கின்றான். கலைஞனுக்குள்ளே மனிதன் இருக்கின்றான்" மனிதனின் கலைஞனை வெளிக்கொணரப் படைப்புத் தொழில் முனையும்போது கலைப்பாங்கின் அழுத்தத்திற்கேற்ப உத்திகள் நயப்படுகின்றன. கலைஞன் முன்னின்று, மனிதன பின்தள்ளப்படும்போது, கலை உலகம் தளிர்க்கிறது; கலை வாழ்கிறது. கலை கொள்ளும் வடிவங்கள் மொழி, இனம், நாடு, பண்பாடு என்ற பல்வேறு காரணிகளின் அடிப்படையில் தனித்துவம் பெறுகின்றன. பின்னர், உலகப் பொதுமை நிலை அடைந்து நிரந்தரத்துவம் பெறும் கலைப் பாஙகு நெறிமைகளும் உண்டு.

தமிழ்ப் படைப்புலகம் - சிறுகதை, நாவல்- ஏறக்குறைய முறையே 75, 125 ஆண்டுகள் என்ற ஆயுள் கொண்டன.

1. இலக்கியத்தைப் படிக்கக் கற்றுக் கொள்ளுதல் (Learning to read Literature)

2. இலக்கியம் பற்றிப் படித்தல் (Learning about Literature)

என்ற இருவகை இலக்கியப் படிப்புப் பற்றிய தெளிவான சிந்தனை இங்கு ஆழங்கொள்ளாத காரணத்தால் படைப்புலக ஆண்டுகளின் எண்ணிக்கை

வளர்ச்சிக்கேற்ற உயர் படைப்புப் போக்குகள் அமையவில்லை என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

சிறுகதை, நாவல் வடிவ அமைப்புப் பின்வருமாறு அமையலாம்.

*உச்ச கட்டம்*

சிக்கல் தீர்மானம்

பொருள் வெளிப்பாடு முடிவு

தீர்மானமும் முடிவும் இறுதியில் வாசகனுக்கு விடுவித்தல் உணர்வினை ஊட்டி விடும்.

∴ பால்க்னா கூறுவது போல "நன்றாகத்தான் எழுதுகிறார்கள். ஆனால் அவர்கள் சொல்வதற்கு அவர்களிடம் ஒன்றுமில்லை" என்ற நிலைதான் பெரும்பாலும் இங்கு இருக்கிறது. சொல்வதற்கு இருக்கும்போது வடிவம் கூடதானே ஏவல் கேட்கும்.

"நாவலாசிரியனுக்கு எதைச் சொல்ல வேண்டும் என்பதில் தெளிவு இருக்குமானால், உத்திகள் அவற்றின் போக்கிலேயே அவை தங்களைக் கவனித்துக் கொள்ளும்" (The Technique will take care of itself). எனவே படைப்புத் தொழில் தோன்ற வேண்டுமானால் (Creative writing) படைப்புச் சிந்தனை (Creative thinking) வளம் பெற வேண்டும்.

சிந்னை வளர்ச்சி கலை நுணுக்க வெளிப்பாடுகளை உருவாக்கத் துணை நிற்கும்.

படைப்புத் தொழில் பார்வைக்கு எளிதாகத் தோன்றினாலும் மிகக் கடினமான தொழில் என்பதைப் புரிந்து கொள்ளும்போதுதான் படிப்பு, உழைப்பு, கற்பனை, முயற்சி, சிந்தனைத் தெளிவு என்ற படைப்பாக்கக் கூறுகளின் இன்றியமையாமையினைப் புரிந்து கொள்ள முடியும்.

சிறுகதை உத்திகள் வரையறைக்குட்பட்டன அல்ல- கலைஞனின் ஆற்றலைப் பொறுத்தது. மணிக்கொடிக் காலச் சோதனை முயற்சிகளுக்குப் பின் இன்றைய வார்ப்புகள்- போன்மை நிலை- ஒரு பக்க, ஒரு நொடி வார்ப்புகள்- வாழ்க்கையைச் செய்தி அறிக்கைகளாக (News Bulleting) வெளிப்படுத்தும் போக்கு- கலா பூர்வமான உத்திகள் கனவு நிலைதான். மனப்பதிவினை ஏற்படுத்த முயலும். புதுக் கலைவடிவங்கள் சிந்திப்பதற்குரியன.

நாவல் பனை ப்பாக்கம்- பரவலாகப் பின்பற்றப்படுகிறது. குடும்பம், வரலாறு என்ற பார்வைக்குட்பட்ட கருத்து நிலைகளில் வழக்கமான நோக்குநிலை, கட்டமைப்பு, நனவோடை உத்தி என்ற அழகிய தடங்களே பெரிதும் காணப்படுகின்றன.

வாழ்க்கை வரலாற்று நாவல்கள் (Biographical Novels), உட்டோபியன் (Utopias) நாவல்கள், டிஸ்டோபியன் (Distopias) நாவல்கள் சிந்திக்க வேண்டியவை. ஒரு புளிய மரத்தின் கதை போன்ற உத்திக்கு முதன்மை தரும் படைப்புகள் வர வேண்டும். கதைப்பொருள் தெரிவு நெறி, களத்தேர்வு நெறி, கதைமாந்தர் தெரிவு நெறி, வார்ப்பு நெறி, புனைவு நெறிக் கோட்பாடுகள் இவை பற்றிய புதிய சிந்தனைகள்.

சிறுகதையோ, நாவலோ, சுயத்தை உருவாக்குவது (Self-creation) என்பதுதான் அடிப்படை 1. யதார்த்தத்தினைச் சித்திரிப்பது. 2. உண்மையைப் புலப்படுத்துவது - இவை இரண்டாம் படியான நோக்கங்கள்- இவை. படைப்பாளியின் மதிப்புச் சின்னங்கள்.

படைப்பாளியின் நோக்கம் 1. தன்னை அறிவது 2. தன் நோக்கத்தினைப் புரிந்து கொள்வது 3. இதன் வாயிலாய்ப் படிப்பவனைத் தன்னை அறியச் செய்வது 4. புரிந்து கொள்ள வைப்பது.

இங்கு சுய பிம்ப வெளிப்பாடு (Self-Image) முக்கியம்.

"கலையின் நோக்கம் இயற்கையை நோக்கிக் கண்ணாடியைப் பிடித்துப் பார்ப்பது அன்று; நம் முகத்தை நோக்கிப் பிடித்துப் பார்ப்பது: அதுவும் நீங்கள் காணும் உங்கள் முகத்தை நோக்கிப் பிடித்துப் பார்ப்பது; அதுவும் நீங்கள் காணும் உங்கள் முகத்தை அன்று; முகத்திற்கு அப்பாலுள்ள உங்கள் முகத்தை; உறுதியான உங்கள் முகத்தைக் காண்பதாகும் என்று காலின் வில்சன் எண்ணுவது பொருத்தமான கருத்தாகிறது.

எனவே கதை பிறக்கும் முயற்சியின் நீள அகல ஆழ கனபரிமாண நிலையில் உத்தி அழகுகள் தாமே தம்மைப் புனைந்து கொண்டு உலா வரும். வேண்டுவதெல்லாம் எழுத்தினைத் தவமாக்கும் முயற்சிதான். எழுத்தினைத் தொழிலாக வழிபடும் நோக்கம்தான்.

# இலக்கிய மேம்பாட்டுக்கான நோக்கு நூல்களின் தேவை

பெ. மாதையன்

***முன்னுரை***

ஒரு குறிப்பிட்ட காலச் சமூகம் குறித்த இலக்கியப் படைப்புக்களுக்கான நூல் அடைவுகள், சொற்பொருளடைவுகள், பல்வகை அகராதிகள், அவை குறித்த இலக்கியக் கலைக்களஞ்சியங்கள், வரலாற்றுக் குறிப்புகள், புராணக் கருத்தடைவுகள், அவ்வக்காலச் சமூகப் பொருளாதார வரலாற்று ஆய்வுக்கும் மொழியாய்வுக்கும் பெரிதும் துணை நிற்கவல்லன. இவ்வகையில் இதுவரை தோற்றம் பெற்ற, இலக்கிய நோக்கு நூல்களை நோக்கித் தமிழிலக்கிய மேம்பாட்டுக்கும் இலக்கியப் பரவலுக்கும் பெரிதும் துணைபுரிய வல்லதும், நீண்டதும், பல்வகைப்பட்டதுமான எதிர்காலத் தேவை குறித்த நோக்குநூல் உருவாக்கத் திட்டங்களைப் படைத்துக்கொண்டு உரிய வகையில் செயற்படுவது இன்றைய சூழலில் கட்டாயத் தேவையாகியுள்ளது.

***நோக்குநூல் உருவாக்க வரலாறு***

தொல்காப்பிய இடை, உரி இயல்கள் மற்றும் சங்க இலக்கிய தொகுப்புகள் நோக்கு நூல் மரபில் கவனத்துக்குரியவை.

பின்னர் இம்மரபு 7, 8ஆம் நூற்றாண்டுகளில் நிகண்டுகளின் தோற்றுவாய் வழி ஆக்கம் பெறத் தொடங்கியது. அதுவும் பின்னர் 15, 17, 18ஆம் நூற்றாண்டுகளில் ஓரளவுக்கே வளர்ச்சி பெற்றது எனலாம். 17, 18, 19ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியரின் வருகையால் தமிழியல் நோக்குநூல்பரப்பு நூல் அகராதி, நூலடைவு, பொது அகராதி, பழமொழி அகராதி எனப் பல்வகையாய்ப் பரந்தது. இது பின்னர் நமது பல்கலைக்கழகங்களின் ஈடுபாட்டாலும் தனி மனிதர்களின் பல்வகைப்பட்ட முயற்சியாலும் மேலும் வளர்ச்சி பெற்றுள்ளது.

***ஐரோப்பியர் வருகையும் நோக்குநூல் வகைமை வளர்ச்சியும்***

ஐரோப்பாவிலிருந்து வந்து பாதிரியார்களின் வருகைக்குப்பின், நமது பல்கலைக்கழகங்களான கேரளா, அண்ணாமலை, சென்னை போன்றவை நோக்கு நூல் உருவாக்கத்தில் குறிப்பிடத்தக்க பணியாற்றியுள்ளன.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறை போன்றவைகளும் இப்பணியில் சிறப்பாகப் பணியாற்றியுள்ளன.

### எதிர்காலத் திட்டம்

எதிர்காலத் திட்டம் பற்றிச் சிந்திப்பதன் மூலம் நாம் கவனத்திற்கொள்ள வேண்டிய சில நெறிகளை நினைவிலிருத்திக் கொள்ள வேண்டும். அகராதிகளை எண்ணுகையில் ஏறத்தாழ 60 ஆண்டுகளுக்கு முன்னர் வெளிவந்த சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதியும், கலைக்களஞ்சியத்தை எண்ணுகையில் ஏறத்தாழ 25 ஆண்டுகளுக்கு முன்னர்த் தொடங்கி முடிக்கப்பட்ட கலைக்களஞ்சியமும் இன்றும் நம் தேவைகளை ஓரளவுக்கு நிறைவுறுத்துவனவாய் நம் நினைவில் நிலைத்து நிற்கின்றன. இதே போன்று ஆங்கிலம்-தமிழ் அகராதிகளை எண்ணுகையில் அ. சிதம்பரநாத செட்டியாரின் ஆங்கிலத தமிழ் அகராதியே நம் எண்ணத்தில் முன் நிற்கின்றது. இவை மிகத் தெளிவான வரையறுதத திட்டத்தோடு எதிர்காலப் பயன்பாட்டுச் செம்மை உணர்வோடும் செயற்படுத்தப்பட்டமைதான் இதற்கான அடிப்படைக் காரணம் என்றால் அது மிகையாகாது மேலும் அவற்றை வழி நடத்தியோரின் ஊக்கமான, முனைபபான, திட்டமிட்ட செயற்பாடும் காரணம் எனலாம். நோக்கு நூல்கள் மிக நீண்டகாலப் பயன்பாட்டை உயிர்ப் பண்பாய்க் கொண்டனவாதலால் அவற்றுக்கான திட்ட அடிப்படைகள் செம்மையாய் இருத்தல் மிக முக்கியமானது.

### இரு வகைப்பட்ட இலக்கிய நோக்குநூல் திட்டம்

அடிப்படையில், இலக்கியம் குறித்து நாம் இருவகையில் நோக்கு நூல்களை உருவாககலாம்.

1 இலககிய அடைவுகள்

2. இலக்கியச் சொல்லடைவுகள்

இவை தற்போது செய்யத் தேவையான அடிப்படைப் பணிகளே ஆகும். பின்னர் இவ்வடிப்படைப் பணிகளைக் களமாய்க்கொண்டு பல்வகைப்பட்ட தேவைகளுக்கு ஏற்றபடிப் பயன்பாட்டு நோக்கில் வெவ்வேறு வகையான நோக்கு நூல்களை உருவாக்கிக் கொள்ளலாம். இவ்வடிப்படைப் பணிகள் செம்மையாய்ச் செய்யப்பட்டால் மட்டுமே ஏனைய நோக்குநூல் பணிகளும் சிறப்புற நிறைவுறும்.

**இலக்கிய அடைவுகள்**

1867 முதல் 1920 வரையிலான தமிழ் நூல் பற்றிய அடைவுகள் வெளிவந்துள்ளன. இனி 1920க்குப் பின் வெளிவந்த தமிழ் நூல்களுக்கான அடைவுகள் எவ்வளவு வெளிவந்துள்ளன என்பதைக் கண்டு அடைவுகள் உருவாக்கப்படாதனவற்றுக்கு அடைவுகளை இனி உருவாக்குதல் வேண்டும். நூலகத்தில் ஆண்டுதோறும் வாங்கப்பட்ட நூற்பட்டியல்களை அடிப்படையாய்க் கொண்டு இவ்வடைவுகளை உருவாக்க முயலலாம். ஒவ்வொரு பல்கலைக்கழக, கல்லூரி நூலகங்களும், மாவட்ட மைய நூலகங்களும், தனியார் நூலகங்களும் இவை போல்வன பிறவும் தம்மிடமுள்ள தமிழ் மற்றும் தமிழ் தொடர்பான நூல்களுக்கான அடைவுகளை உருவாக்கி வெளியிட்டால் அவற்றை அடிப்படையாகக் கொண்டு இன்றளவும் வெளிவந்த நூல்களுக்கான அடைவை உருவாக்கிவிட முடியும். அவ்வவ் நூலக இயக்குநர்களும் நூலகர்களும் முயன்றால் இப்பணியை விரைவில் செயலாக்கிவிட முடியும்.

ஒவ்வொரு நூலும் வெளியிடப்பெற்றவுடன் விற்பனை நோக்கில் கன்னிமாரா நூலகம், கல்கத்தா தேசிய நூலகம் போன்ற நூலகங்களுக்கு அனுப்பி வைக்கப்படுவது நடைமுறையாக இருந்து வருவதைப் போன்று இனித் தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கும் ஓரிரு படிகள் அனுப்பி வைக்கப்படவேண்டும் என்பதும் அரசாணையாக இருப்பதும் நலம் பயக்கும். இத்தகு சூழல் உருவாகும் நிலையில் தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்கு அனுப்பப்படும் ஒவ்வொரு நூலும் கணிப்பொறியில் பதிவாய் அமைத்துக் கொள்ளப்பட வேண்டும். ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் அவ்வவ் ஆண்டு வெளிவந்த நூல்களுக்கான அடைவினை இதன் வழி எளிதாய்ப் பெற்று வெளியிடலாம். முன்னமேயே திட்டமிட்டுக்கொண்டு பல்வேறு வகையில் ஆசிரியர் வரிசை, நூல் வகை, நூற்பெயர் வரிசை என்பனவற்றுக்கு ஏற்றபடி அடைவுகளைப் பெறும் வகையில் இடுவரல் (input) செய்து கொள்ளலாம். இது மிக எளிமையானதொரு அடைவு நூல் உருவாக்க வழியாகும்.

இதுவரை வெளிவந்த தனித்தனிக் கட்டுரைகளைப் பற்றித் தெரிந்து கொள்ளும் வகையில் பொருள்வாரியாக, இலக்கியவாரியாகத் தனித்தனிக் கட்டுரை அடைவுகளை உருவாக்குவதும் தேவையானதொரு பணியே ஆகும். இனி இவ்வாண்டு முதல் வெளிவரும் கட்டுரைகளையும் முன்குறிப்பிட்டபடி கணிப்பொறிகளில் ஏற்றி ஆண்டிறுதியில் கட்டுரை அடைவுகளை உருவாக்கலாம்.

ஒவ்வொரு பல்கலைக்கழகத்திலும் அவ்வப் பல்கலைக்கழகம் சார்ந்த கல்லூரிகளிலும் உள்ள ஆசிரியர்கள், ஆய்வாளர்கள் ஆகியோர் தாம் எழுதிய் நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள் குறித்த ஆண்டறிக்கைகளைப் பல்கலைக்கழகங்களுக்கு அளித்தல் வேண்டும் என்பது நடைமுறைப படுத்தப்பட்டால் ஆண்டிறுதியில் அவ்வப் பல்கலைக்கழகங்கள் அவை குறித்த அடைவுகளை வெளியிட வாய்ப்பாக இருக்கும். ஆய்வுரைகளை எழுதும் ஒவ்வொருவரும் தாம் எழுதும் அனைத்தும் பயன்பாடுற வேண்டும் என்ற எண்ணத்துடனும் தாம் எழுதுவது தமிழ் இலக்கியம் மற்றும் மொழி மேம்பாட்டுக்குத் துணைபுரியும் ஒரு கூறு என்பதையும் உணர்ந்து செயற்படும் நிலை உருவாகுமாயின் இத்தகைய தொகுப்புப் பணிகளும் விரைந்து செம்மையாய் நிறைவேறும்.

இவ்வாறே ஒவ்வொரு பல்கலைக்கழகத்திலும் நடைபெறும் ஆய்வியல் நிறைஞர், முனைவர் பட்டங் குறித்த ஆய்வேடுகளின் படி ஒன்று தமிழ்ப் பல்கலைக்கழத்திற்கு அனுப்பப்படுவது நலம் பயக்கும். எதிர்காலத்தில் இவ்வாய்வேட்டு நோக்கு நூல்களை உருவாக்கவும் இவ்வாய்வுகள் பலருக்கும் பயன்படும் நிலை எய்தவும் இது வாய்ப்பாக இருக்கும். தமிழ்ப் பல்கலைக்கழகம் என்பது தமிழ் குறித்த எவ்வேட்டுச் செய்தியையும் பாதுகாக்கும் ஆய்வுக் கருவூலம் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து தாம்தாம் எழுதும் ஆய்வுரைகளை இங்கே அனுப்பி வைப்பது தமிழின் எதிர்காலம் ஆய்வுகள் நோக்கில் நோக்கு நூல்கள் உருவாகப் பேருதவியாய் இருக்கும்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆண்டுதோறும் ஆய்வரங்குகளை நடத்தி, எண்பதில் தமிழ், எண்பத்தொன்றில் தமிழ் என்பன போன்ற நூல்களை வெளியிட்டமை போன்று ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் கருத்தரங்கை நடத்தி அதன் ஒரு பகுதியாக இவ்வாண்டு வெளிவந்த நூல்களைத் தொகுத்தளிப்பது தொடர்ந்து நடைபெறுமாயின் நூலடைவு உருவாக்கப் பணி ஓரளவுக்கு நிறைவேறும். இது நடைமுறைச் சாத்தியம் என்பதால் இவை போன்ற கருத்தரங்குகள் ஒவ்வொரு ஆண்டும் நிகழ்த்தப்பட வேண்டும். சில பல்கலைக்கழகங்கள் இணைந்தும் இத்தகைய கருத்தரங்கை நடத்தி ஆண்டு வாரியான தமிழ் நூல் அடைவுகளை உருவாக்கலாம்.

**இலக்கியச் சொல்லடைவுகள்**

சங்க இலக்கியம் தொடங்கிப் பல்வகையான இலக்கியங்களுக்குச் சொல்லடைவுகள் முன்னமேயே உருவாக்கப்பட்டிருந்தாலும் அவற்றை முழுமையாய் நம்பிக் கைக்கொள்ள இயலவில்லை. எதிர்காலப் பயன்பாட்டின் அடிப்படையில் ஒருமித்த போக்கில் தமிழ் இலக்கியங்கள் முழுமைக்கும் சொல்லடைவுகளை உருவாக்கக் கணிப்பொறியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். மனித முயற்சியால் சொற்களை எழுதி எடுத்து நிரல்படுத்திச் சொல்லடைவுகளை உருவாக்கச் செல்வாகும் காலத்தில் பன்மடங்கைக் கணிப்பொறி குறைத்து விடுகின்றன. இது நடைமுறைச் சாத்தியமே. இப்பொறிகளை இதற்கெனக் கையாள்வதும் எளிமையானதே.

ஒரு பல்கலைக்கழகம் தனித்து நின்று எல்லா இலக்கியங்களுக்கும் சொல்லடைவை உருவாக்குவதைக் காட்டிலும் அனைத்துப் பல்கலைக்கழகங்களும் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைகளும் ஒருங்கிணைந்து திட்டமிட்டுப் பல்கலைக்கழக வாரியாகச் சில காலகட்ட இலக்கியங்களைப் பகிர்ந்துகொண்டு அவற்றுக்கான சொல்லடைவுகளை உருவாக்குவது விரைந்த நலம் பயக்கும்.

இத்தகைய போக்கில் சொல்லடைவுகளை உருவாக்கும் நோக்கில் அனைத்துப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர்களும் ஒருங்கிணைந்து திட்டமிட்டு மைய மற்றும் மாநில அரசுகளின் நிதி உதவி பெற்றுக் கணிப்பொறிகளை நிறுவிச் சொல்லடைவு உருவாக்கப் பணிகளில் ஈடுபடுவது இன்றைய சூழலில் தமிழின் எதிர்கால மேம்பாட்டுத்திட்ட நோக்கில் மிகவும் வேண்டப்படுவன ஆகும்.

இத்திட்டம் பல்கலைக்கழகங்களால் நிறைவேற்றப்படும் சூழலில் காலக்கழிவு அதிகம் இன்றித் தமிழ் இலக்கியம் முழுமைக்குமான காலவாரியான சொல்லடைவுகளை விரைவில் உருவாக்கிவிட முடியும். இச்சொல்லடைவுகளுக்குப் பொருள் எழுதுவதில் நீண்ட காலம் தேவைப்படும் என்றால் அடிப்படைத் தேவையான சொல்லடைவுகளை எளிதல் உருவாக்கிவிட முடியும். பின்னாளில் இக்கணிப்பொறி இடுவரல்களை அடிப்படையாகக் கொண்டு நமக்கு வேண்டியவகையில் சொற்பொருளடைவு, தொடரடைவு (Concordance), தனிக்கால அகராதிகள் (Synchronic Dictionaries), இலக்கிய ஊர்ப்பெயர், சிறப்புப்பெயர், புலவர் பெயர் அடைவுகள், புராணக் கதைத் தொகுப்பு,

பல்பொருள் ஒரு சொல், ஒரு பொருள் பல சொல் அகராதிகள் போன்ற பலவகையான நோக்கு நூல்களை உருவாக்கலாம். இச்சொல்லடைவுகளை அடிப்படையாய்க்கொண்டு ஒரு குறித்த கால மொழி நடைமுறையும் வரலாற்று மொழியாய்வுகளையும் நிகழ்த்த முடியும். இலக்கியம் குறித்த பல்வகையான ஆய்வுகளை மேற்கொள்ள இவை பெருந்துணையாகவல்லன.

சொல்லடைவுகளை உருவாக்கும் நிலையில் நாம் கவனத்தில் கொள்ளத்தக்க சில செய்திகள்:

1. சொற்பிரிப்பில் கடைப்பிடிக்கப்பட வேண்டிய நெறிமுறைகளை அனைவருமாகச் சேர்த்துத் திட்டமிட்டு உருவாக்கி அவற்றையே அனைத்துப் பல்கலைக்கழகங்களும் கைக்கொள்வது.

2. இலக்கியப் பயிற்சியும் தட்டச்சுப் பயிற்சியும் உடையவர்களைக் கணிப்பொறி இடுவரலுக்குப் பயன்படுத்திக் கொண்டு தனியே சொற்பிரிப்பு செய்தலில் வீணாகும் காலத்தை மீதப்படுத்துதல்.

3. இராஜம் ஐயர் வெளியிட்ட பல்வகை இலக்கியங்களுக்குமான மூலப்பதிப்புகளைப் பயன்படுத்திக் கொள்வது. இதைப் போன்று எளிமையான சொற்பிரிப்பு முறையில் வெளிவந்த இலக்கிய பதிப்புகளைப் பெரிதும் பயன்படுத்துவது.

4. பொருள் எழுதும் நிலையில் அவ் இலக்கியங்களில் மிகுந்த பயிற்சியுடைய அறிஞர்களைப் பயன்படுத்திக் கொள்வது.

இத்தகைய நெறிமுறைகளின் அடிப்படையில் அனைத்துப் பல்கலைக்கழகங்களும் ஒருங்கிணைந்து குறித்த ஒரே இலக்கு நோக்கிய தன்மையில் செயற்படுமாயின், இவ்வடிப்படைத் திட்டங்களை நிறைவுறுத்திக் கொண்டு இவற்றின் அடியாக மேற்கொள்ள வேண்டிய இலக்கிய மேம்பாடு குறித்த பல்வகையான நோக்கு நூல்களைப் படைத்தளிக்க இயலும்.

### நோக்குநூல் உருவாக்கமும் நடைமுறை - சமூகப்பயன்பாட்டு நோக்கமும்

இதுவரை தொகுக்கப் பெற்ற அகராதி போன்ற பல்வகைப்பட்ட நோக்குநூல்களும் எந்த அளவுக்குச் சமூகத் தேவைகளை நிறைவேற்றியுள்ளன; இலக்கியங் குறித்த பல்வகை ஆய்வுகட்கு எவ்வகையில் பயன்பட்டுள்ளன

என்பன போன்ற நடப்பு நிலைகளையும் நாம் மதிப்பீடு செய்து கொள்ளுதல் வேண்டும். பயன்பாட்டாளர்களின் நிறைகுறைகளையும் அறிந்து கொள்வது இனி நாம் உருவாக்கவிருக்கும் நோக்கு நூல்களின் பயன்பாட்டுச் செம்மைக்குப் பெரிதும் துணையாகவல்லது. இன்றைய சூழலில் நோக்குநூல்களை உருவாக்குவதோடு மட்டுமே நின்றுவிடாமல் சிலவகை நடைமுறைகளையும் நாம் கைக்கொள்வது அவசியமானது.

மொழிக்கல்வியில் வெறும் இலக்கியம் குறித்த பாடங்களை மட்டுமே வைக்காமல் அகராதிக்கலை, அகராதியியல் குறித்த பாடங்களையும் ஒரு கூறாக்க வேண்டும். கல்லூரி, பள்ளி எனும் இரு நிலைகளிலும் அவரவர் மொழிக் கல்விக்கு ஏற்ற வகையில் பாடப்பகுதியில் இதனைச் சேர்ப்பது நல்லது.

நோக்கு நூல் பயன்பாட்டு உணர்வு என்பது நம்மவரிடம் மிகக் குறைவாகவே உள்ளது. இச்சூழலை நீக்கி இத்தகு உணர்வை மிகுவிக்கும் வகையில் கல்லூரி, பள்ளி ஆசிரியர் மற்றும் மாணவர்களுக்குத் தனித்தனிப் பணிப்பட்டறைகளை நடத்தி நோக்கு நூல்களின் மிகு பயன்பாட்டு நிலையை உணர்த்துவதோடு நோக்கு நூல் உருவாக்கப் பயிற்சியையும் அளித்தல் வேண்டும்.

ஆய்வியல் நிறைஞர், முனைவர் பட்ட ஆய்வாளர்களைக் கூட்டி இலக்கியங் குறித்த அவர்தம் ஆய்வுப் போக்கில் அவர்களுக்குத் தேவைப்படும் நோக்கு நூல்களின் தேவையைக் கேட்டறிந்து அத்தேவைகளுக்கேற்ப நோக்கு நூல்களைப் படைப்பது இலக்கிய ஆய்வு மேம்பாட்டுக்குப் பெருந்துணை புரியும்.

இனி ஆய்வு நோக்கில் மட்டுமே நோக்கு நூல்களைப் படைப்பதன்றிப் பொது மக்களுக்குரிய வகையில் எளிய பயன்பாட்டு நோக்கிலேயும் அவற்றை உருவாக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட காலங் குறித்த இலக்கியங்களுக்குக் கலைக் களஞ்சியங்களை நூல் விவரம் மற்றும் நூல்நய நோக்கில் எளிய நடையில் தொகுத்தளிப்பது, காப்பியங்களில் வரும் கதைகளைத் தொகுத்து வெளியிடுதல் என்பன போன்ற பணிகளையும் மேற்கொள்ளலாம்.

### முடிப்புரை

இது கணிப்பொறி யுகம். மனித முயற்சியால் செய்யப்படும் பணிகளுக்காகும் காலத்தில் பன்மடங்கில் ஒரு பகுதியை மட்டுமே கணிப்பொறி தன் பணிச் செயற்பாட்டிற்கென எடுத்துக் கொள்கிறது. இதுவரை நாம் நோக்கு நூல்களை உருவாக்க எடுத்துக்கொண்ட காலப்பரப்பு மிகப் பரந்து பட்டதே ஆகும். இப்பரந்துபட்ட காலத்தில் கணிப்பொறியைப் பயன்படுத்தியிருப்போமாயின் நாம் மிகப் பெரிய சாதனையை மொழி இலக்கிய ஆய்வுகளில் உருவாக்கி இருக்க முடியும். நமது ஆய்வுகளும் மிகத் துல்லியமான முடிவுகளோடு வெளிவந்திருக்கும். நல்லதொரு மொழி வரலாற்றையும் உருவாக்கியிருக்கலாம்.

## துணை நூல்கள்


| | | | |
|---|---|---|---|
| 1. | பெ. மாதையன் | 1978 | தமிழியல் நோக்கு நூல் அடைவு, சகுந்தலை வெளியீடு, மேட்டூர் அணை-1 |
| 2. | வ. ஜெயதேவன் | 1985 | தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு, ஐந்திணைப் பதிப்பகம் (விற்பனை உரிமை), சென்னை. |
| 3. | A. Dhamodaran | 1978 | Tamil Dictionaries: A Bibliography, Steiner, Beitrage Zur Sudasier forsching, Siesbaden. |


## இணைப்பு - 1

### தமிழ்ப் பல்கலைக்கழக நோக்குநூல் வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| அறிவியல் களஞ்சியம், | தொகுதி 1, | பி. எல். சாமி (ப.ஆ.) | 1986 |
| | தொகுதி 2, | கி. கண்ணபிரான் (ப. ஆ.), | 1987 |
| | தொகுதி 3, | உலோ. செந்தமிழ்க்கோதை (ப.ஆ.) | 1987 |
| | தொகுதி 4, | கே.கே. அருணாசலம் (ப.ஆ.), | 1988 |
| சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் - | தொகுதி 1, | இரா, சாரங்கபாணி (ப.ஆ.), | 1986 |

| | | | |
|---|---|---|---|
| | தொகுதி 2, | இரா. சாரங்கபாணி (ப.ஆ.) | 1986 |
| | தொகுதி 3, | ப. அருணாசலம் (ப.ஆ.) | 1987 |
| சித்த மருத்துவ நூலோதி, | | சே. பிரேமா (ப.ஆ.) | 1988 |
| தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை- | | | |
| | தொகுதி 1-4, | த. கோ. பரமசிவம் (ப.ஆ.) | 1987 |
| பெரியபுராணச் சிறப்புப் பெயரகராதி - ஊர்ப்பெயர்கள், | | தா.வே. வீராசாமி, | 1986 |
| பெருஞ்சொல்லகராதி | தொகுதி 1, | தா.வே. வீராசாமி (ப.ஆ.) | 1988 |
| மர இனப்பெயர்த் தொகுதி | தொகுதி 1, | பெ. மாதையன், எச். சித்திரபுத்திரன், | 1986 |
| | தொகுதி 2, | பெ. மாதையன், எச். சித்திரபுத்திரன், | 1986 |
| வாழ்வியற்களஞ்சியம் - தொகுதி 1 முதல் 8 முடிய, | | நா. பாலுசாமி (ப.ஆ.) | 1986- 1988 |
| Catalogue of Tamil Palmleaf Manuscripts in the Tamil University | | K.C. Chellamuthu, T. Padmanaban, P.V. Nagarajan (Compilers) | 1985 |
| Computer analysis of Thirukkural | | K.C. Chellamuthu, S. Baskaran | 1986 |

# மொழி மேம்பாட்டுக்கான நோக்குநூல்களின் தேவை

க. பாலசுப்பிரமணியன்

## 1. மொழி மேம்பாடும் திட்டமிடுதலும்

மொழி மானுடப் பண்பாட்டில் அகப் பண்பாட்டின் (non- material culture) ஒரு கூறு. ஆனால் பிற பண்பாட்டுக் கூறுகள் அனைத்தின் செயற்பாட்டிற்கும் அடிப்படையாய் விளங்கும் கருத்துப் பரிமாற்றுக் கருவி என்ற வகையில் அது தனக்கென ஒரு சிறப்பிடத்தைக் கொண்டு விளங்குகிறது. எனவே, அம்மொழியின் மேம்பாட்டுக்குத் திட்டமிடுதல் மானிடப் பண்பாட்டின் ஒட்டுமொத்த வளர்ச்சிக்குத் திட்டமிடுதலாகும். இக்கண்ணோட்டத்தில் மொழி மேம்பாடடைதல் என்பது ஒரு மொழிபேசும் இடத்தின் கலை, அறிவியல், அரசியல், நிர்வாகம் போன்ற அனைத்துச் செயற்பாடுகளுக்கும் பயன்படும் வகையில் அம்மொழியின் இலக்கணம், சொற்கோவை ஆகியவை வளர்ச்சியடைதலாகும். இவ்வளர்ச்சி பழுங்காலத்தில் தேவையை நிறைவு செய்வதின் அடிப்படையில் நிகழும் இயல்பான வளர்ச்சியாக இருந்தது. ஆனால் அத்தகு இயல்பான வளர்ச்சியில் விரைவும் ஒருமையும் (Uniformity) இருப்பதில்லை. அதைத் தவிர்த்து வளரும் சமுதாயத்தின் விரைவுக்கு ஈடுகொடுக்கும் வகையிலும், அளவில் பெரிய மொழி பேசுவோரிடையே வெவ்வேறு குழுவினரின் தனித்த (Idiosyncratic) இயல்புகள் உருவாதலைத் தவிர்த்து ஒருமையுடைய வளர்ச்சி ஏற்படுவதற்கும் திட்டமிடுதல் இன்றியமையாததாகிறது. இத்திட்டமிட்ட வளர்ச்சியில் பல்வகை நோக்கு நூல்கள் மிகச் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன.

## 2. நோக்கு நூல்களும் தமிழில் அவற்றின் இன்றைய நிலையும்

பலவகை அகராதிகள், கலைச்சொல் பட்டியல்கள் (glossaries) கலைக்களஞ்சியங்கள், ஆய்வடங்கல்கள் ஆகியவை மொழி மேம்பாட்டிற்குத் தேவையான நோககு நூல்களாகும். தமிழ் ஆட்சிமொழியாகவும் பயிற்சி மொழியாகவும் பயன்படுத்தப்பட்டு உயர் கல்விக்கும் பயன்படுத்தப்படத் தொடங்கியுள்ள இன்றைய நிலையில் நோக்கு நூல்கள் தமிழுக்கு மிகப் பெரிய அளவில் தேவை. நோக்கு நூல்கள் தமிழில் ஓரளவு தோன்றியுள்ளன.

முதல் பேரகராதியும் (சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி 1924-39), முதல் கலைக்களஞ்சியமும் (தமிழ் வளர்ச்சிக் கழகம் 1954-68) தோன்றிய பெருமை இந்திய மொழிகளுள் தமிழுக்கு உண்டு. ஆட்சிச் சொல்லகராதிகள் (சென்னை அரசாங்கம், 1962), பலவகை அறிவியல் துறைகளுக்குரிய கலைச்சொல்லகர வரிசைகளும், ஆய்வடங்கல்களும் வந்துள்ளன. (ஒ. நோ. மாதையன் 1978, 6, 16-19).

எனினும் இன்றைய அறிவியல், கலை, நிர்வாக இயல் வளர்ச்சி வேகத்திற்கு ஈடு கொடுக்கும் வகையில் நோக்கு நூல்கள் இல்லை. இவ்வடிப்படையில் பலவகை நோக்கு நூல்களின் இன்றைய தேவையை இக்கட்டுரை ஆராயும்.

நோக்கு நூல்களை மூன்று பெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை 1. அகராதிகள், 2. கலைக்களஞ்சியங்கள், 3. ஆய்வடங்கல்கள். இம்மூன்று பகுதிகளில் தமிழ் மேம்பாட்டிற்கு உதவும் வகையிலான தேவைகள், அவை தொகுக்கப்பட வேண்டிய முறைகள் இங்குச் சுருக்கமாக ஆராயப்படும்.

### 3. *அகராதிகள்*

மேலே குறிப்பிட்டது போல இந்திய மொழிகளுள் முதல் பேரகராதி தொகுத்த பெருமை தமிழுக்கு இருப்பினும் அதன் கடைசிப் பின்னிணைப்பு 1939ல் வெளிவந்த பின் 50 ஆண்டுகளில் தமிழ்ச் சொற்கோவை (Vocabulary) பலதுறை வளர்ச்சி காரணமாக மிகப் பெரிய அளவில் வளர்ச்சி அடைந்துள்ளது. சொற்களின் எண்ணிக்கைப் பெருக்கம் மட்டுமன்றிப் பழைய சொற்கள் புதிய பொருள்களையும் பெற்றுள்ளன (எ-டு. கிளை- ஓர் அலுவலகம், வணிக நிறுவனம் போன்றவற்றின் பிரிவு). இச்சொற்பொருட் பெருக்கத்தை உள்ளடக்கிய அகராதி இந்த ஐம்பது ஆண்டுகளில் வெளிவரவில்லை. சொல் தொகுப்பு, சொல் தேர்வு, அகராதிப் பதிவுக் கட்டமைப்பு, வரிசைப்படுத்துதல் என்ற நான்கு வகை அகராதித் தொகுப்பு முறைகளைப் பயன்படுத்தி வெளிவந்த அகராதிகள் இக்கால கட்டத்தில் மிகச் சிலவே. பாலகிருட்டின முதலியார் (1976) தமிழ் - ஆங்கில அகராதி புதிய பொருள்களையும் சிறிதளவு தருகிறது. மற்ற பெரும்பாலான அகராதிகள், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, மதுரைத் தமிழ்ச் சங்க அகராதி ஆகியவற்றிலிருந்து சொற்களைத் தொகுத்துச் சுருக்கப்பட்டவையே. தற்காலத்தமிழின் சொற்பொருளமைப்பை முற்றிலுமாகப்

புலப்படுத்தும் ஓர் அகராதி மிக அவசரமாகத் தொகுக்கப்பட வேண்டியதொன்றாகும். இங்கு கிரியா என்ற வெளியீட்டகம் சிறிய அளவில் ஓர் தமிழ்-தமிழ்-ஆங்கிலத் தற்காலத் தமிழகராதி தொகுத்து வருவது குறிப்பிடத்தக்கது.

மேற்குறிப்பிட்ட தமிழின் பல்துறைச் சொற்கோவைப் பெருக்கத்தையும் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதித் தொகுப்பில் விடுபட்டுப் போன நூல்கள், பல வட்டார வழக்குகள் இவற்றை உட்கொண்ட பேரகராதி தொகுத்து வெளியிடப்பட வேண்டும். தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் பெருஞ்சொல்லகராதித் திட்டம் இந்நோக்கத்தில் செயல்படுகிறது. எனினும் அத்திட்டத்தின் சொல் தொகுப்புப் பணி விரிவுபடுத்தப்படுவதுடன் சொல் தேர்வுக் கொள்கையும் இன்றைய அகராதியியல், மொழியியல் கொள்கைகளுக்கு ஒவ்வும் வகையில் செம்மைப்படுத்தப்பட வேண்டும்.

தமிழ்ச் சொற்களை அவை வழங்கும் மிகப் பழைய எழுத்துச் சான்றுகள் (கல்வெட்டுகள் உட்பட) தொடங்கி இன்றைய வழக்கு வரை அவை அடைந்துள்ள வடிவப் பொருள் மாற்றங்களை மேற்கோள்களுடன் விளங்கும் வரலாற்று முறைப் பேரகராதி தொகுக்கப்பட வேண்டும் (ஒ.நோ. பாலசுப்பிரமணியன், 1989). சென்னை மர்ரே ராஜம் அவர்கள் நிறுவிய சாந்தி சாதனா என்ற நிறுவனம் 14ஆம் நூற்றண்டு வரையிலான எழுத்துச் சான்றுகளுக்குச் சொல்லடைவு தொகுத்து வரலாற்று முறை அகராதிக்கு அடிப்படையிட்டுள்ளது. மற்ற நூல்களுக்குச் சொல்லடைவு, தொடரடைவுகள் தொகுக்கப்பட்டு வரலாற்று முறை அகராதி ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக 12 தொகுதிகளாய் அமைந்த பேரகராதி போலத் தொகுக்கப்பெற வேண்டும். இது தமிழ்மொழி வரலாறு எழுதுவதற்கு அடிப்படையாய் அமையும் நோக்கு நூலாகும்.

மேற்கூறியவை பொது அகராதிகளாகும். பல்வகைச் சிறப்பு அகராதிகளும் மொழி மேம்பாட்டுக்குத் தேவையாகும். சிறப்பாக ஆங்கிலத்தில் Thesaurus என வழங்கும் ஒரு பொருட் பன்மொழி அகராதி போன்றவை தமிழுக்கு இன்றியமையாத தேவையாகும். ஒரு பொருள் அல்லது ஒத்த பொருள்களைத் தரும் சொற்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டு அவற்றின் நுண்ணிய பொருள் வேறுபாடுகள் இவ்வகராதியில் விளக்கப்படும். பல்வகை இலக்கியப் படைப்பாளிகள் பலவகைப் பொருள்களில் கட்டுரைகள் வரைவோர்

சொற்பொழிவாளர் அவர்கள் தேவைக்கேற்ற மிகப் பொருத்தமான சொல்லைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்த இவ்வகராதி துணை புரியும்.

தமிழின் வட்டாரக் கிளை மொழிகள் அனைத்திலும் வழங்கும் சொற்கள் களப்பணி மூலம் தொகுக்கப்பட்டுத் தனித்தனிக் கிளைமொழிகளின் முற்றகராதிகளும் பல கிளை மொழிகளையும் ஒப்பிட்டுத் தொகுக்கப்படும் ஒப்புநோக்கு அகராதியும் தொகுக்கப்பட வேண்டும். இவற்றுடன் பல்வகைத் தொழில் புரிவோரின் தொழில்களுக்குரிய சொற்களின் (Occupational Vocabularies) அகராதிகள் தொகுக்கப்பட வேண்டும். மொழி மேம்பாட்டுக்கு மிக இன்றியமையாத கலைச் சொல்லாக்கத்திற்கு இந்நூல்கள் இன்றியமையாதவை. பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கியோ மொழிபெயர்த்தோ சொற்களை உருவாக்குவதைவிட மக்களால் வழங்கப்படும் சொற்களைக் கண்டறிந்து பயன்படுத்துதல் சிறப்புடையதாகும். இத்தகு இயல்பான சொற்கள் வட்டார வழக்குகளிலும் தொழிலுக்குரிய சொற்களிலும் கிடைப்பது உறுதி. அவற்றிடையே இல்லாத பொழுதே புதுச் சொல்லாக்கம் செய்யப்பட வேண்டும்.

பலவகை அறிவியல், சமூகவியல், நிர்வாகவியல் துறைகளுக்குக் கலைச்சொற்பட்டியல் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. இத்துறையில் இருவகைப் பணிகள் செய்யப்படுதல் அவசியம். பல ஆசிரியர்கள் ஒரே துறைக் கலைச் சொற்களுக்கு வெவ்வேறு சொற்களை உருவாக்கிப் பயன்படுத்தும் நிலை உள்ளது. இதன் விளைவாக ஒரே பொருளைக் குறிக்கப் பல கலைச் சொற்கள் வழங்குகின்றன. ஒரே கலைச் சொல் பல துறையினரால் பயன்படுத்தப்படுகிறது (எ-டு புவியியல் - Geography, Geology). இந்நிலை மாற மாநில அளவில் பல்கலைக்கழகங்களும், அரசுத் துறைகளும் இணைந்து, ஒரு மைய நிறுவன அடிப்படையில் செயற்களங்கள் (workshops) நடத்தி, வழக்கில் உள்ள கலைச் சொற்களை ஆராய்ந்து செம்மைப்படுத்திய கலைச்சொற் பட்டியல்களைத் தொகுத்து வெளியிட வேண்டும். தமிழ்ப் பல்கலைக்கழக மொழியியல் துறை மொழியியலுக்கு இம்முறையில் கலைச் சொற்பட்டியல் தொகுத்துள்ளது. மற்ற துறைகளுக்கும் இவை தொகுக்கப்பட வேண்டும்.

இன்னொரு பணி, பல்துறைகளுக்குக் கலைச்சொல் அகராதிகள் தொகுத்தல். இன்று கலைச்சொல் அகராதிகள் என்ற பெயரில் வெளி

வந்துள்ளவை கலைச்சொற் பட்டியல்களே (glossaries). பல்துறை அகராதிகள் கலைச்சொற்களை அவற்றிற்குரிய வரைவிலக்கணங்கள் (definitions) எடுத்துக் காட்டுகளுடன் தர வேண்டும். ஆங்கிலத்தில் இத்தகு அகராதிகள் பல வெளிவந்துள்ளன. தமிழிலும் இத்தகு அகராதிகள் தொகுத்தல் அவசியமாகும். பலதுறை அறிஞர், மொழியியலாளர் இவ்விருவரும் இணைந்து செய்ய வேண்டிய பணியாகும் இது.

## 4. கலைக்களஞ்சியங்கள்

தமிழ் வளர்ச்சிக் கழகம் (1954 - 63) பத்துத் தொகுதிகளில் கலைக்களஞ்சியம் தொகுத்து வெளியிட்டது. இப்போது தமிழ்ப் பல்கலைக்கழகம் அப்பணியை மேற்கொண்டு பல தொகுதிகளை வெளியிட்டு வருகிறது. கலைக்களஞ்சியத் தொகுப்பு இன்றைய மிக வேகமான அறிவியல், பல்துறை வளர்ச்சிக்கு ஈடுகொடுத்துத் தொடர்ந்து நிகழ வேண்டிய ஒரு பணியாகும். பழைய பதிப்புகள் தொடர்ந்து திருத்தப்பட்டுப் புதுப்பிக்கப்பட்டு வெளியிடப் பட வேண்டும். இதற்குக் கலைக்களஞ்சிய வெளியீட்டு நிறுவனங்கள் கால வரையறைக்குட்பட்ட திட்டங்களாகச் செயல்படாமல் நிரந்தர அடிப்படையிலான துறைகளாகச் செயல்பட வேண்டும். இத்துறைகளில் ஒரு பகுதியினர் பல்துறைத் தொகுப்புப் பணியில் ஈடுபட்டிருக்கும்பொழுது இன்னொரு பகுதியினர் இன்றைய அறிவியல் வளர்ச்சிக்கேற்பப் பழைய தொகுதிகளைப் புதுப்பிக்கும் பணியில் ஈடுபட வேண்டும். இவ்வாறு செயல்பட்டாலே தமிழ்க் கலைக்களஞ்சியங்கள் பிரிட்டானிகா (Encyclopaedia Brittanica), அமெரிக்கானா (Encyclopaedia Americana) கலைக்களஞ்சியங்களின் தரத்தை ஓரளவாவது எட்டி, சிறந்த நோக்கு நூல்களாகத் தமிழ் மக்களுக்குப் பயன்பட முடியும்.

புதுப்பித்தல், திருத்துதல் தவிரத் தொகுத்தலிலும், மேற்கூறிய மேனாட்டுக் கலைக்களஞ்சியங்களின் தரத்திற்கு இணையாகச் செய்யப்பட வேண்டும். அனைத்துத் தொகுதிகளில் வரும் கட்டுரைகளும் ஒரே அடிப்படை அமைப்பினைக் கொண்டிருப்பதுடன், தொகுதிகளுக்கு இடையே குறுக்கு நோக்கீடு (Cross reference), ஒருங்கிணைப்பு (Coordination) ஆகியவை அமைய வேண்டும். தொகுதிகளுக்கிடையே கட்டுரைகளில் கருத்து வேறுபாடு நேராவண்ணம் கவனிக்க வேண்டும். இவை அனைத்தும் மிகச் சிறந்த பதிப்புப் பணியின் (Editorial work) அடிப்படையில் அமைய வேண்டியவை. இத்தகு செறிவுடன் வெளியிடப்படும் கலைக்களஞ்சியங்களே சிறந்த நோக்கு நூல்களாகப் பயன்படும்.

## 5. ஆய்வடங்கல்கள்

மொழி மேம்பாட்டிற்கும் மொழியின் பல்துறை ஆராய்ச்சி வளர்ச்சிக்கும் ஆய்வடங்கல்கள் மிக இன்றியமையாதவையாகும். ஆய்வடங்கல்கள் பல்வகைப்படும். ஒரு துறையில் வெளிவந்துள்ள ஆய்வு நூல்கள், கட்டுரைகள் ஆகியவற்றை வெளியீட்டுச் செய்திகளுடன் தொகுத்துக் கொடுக்கும் நூலடைவுகள் (Bibliographies) ஒருவகை. தமிழில் இவை தற்பொழுது பெருமளவில் வெளிவருகின்றன (ஒ. நோ. மாதையன் 1978). நூல்கள் கட்டுரைகளில் கூறப்பட்டுள்ள செய்திகளை மிகச் சுருக்கமாக ஓரிரு வாக்கியங்களில் சுருக்கி அச் சுருக்கத்துடன் வரும் விளக்க நூலடைவுகள் (Annotated Bibliographies) பெரும் அளவில் தொகுத்து வெளியிடப்பட வேண்டும். ஆய்வாளருக்கு இது பெருந்துணை புரிவதாகும்.

ஆய்வாளருக்குப் பயன்படும் இன்னொரு வகை நோக்கு நூல், இன்று தமிழில் இல்லாதது, ஒரு துறையில் வெளிவரும் ஆய்வு நூல்கள் கட்டுரைகள் ஆகியவற்றின் சற்று விரிவான செய்திச் சுருக்கங்களைத் (abstracts) தொடர்ந்து வெளியிடும் காலமுறை இதழ் (periodical). ஒவ்வொரு துறைக்கும், சிறப்பாகத் தமிழ் மேம்பாட்டுக்கெனத் தமிழியல் ஆய்வுக்காகக் கால முறை இதழ் (Tamilogical Research Abstractus) தொடங்கப்பட வேண்டும். தமிழியல் ஆய்வு வளர்ச்சிக்கு இது மிக அவசியமானதாகும். இத்தகு காலமுறை இதழ் வெளியிடத் தமிழகத்திலும் பிற மாநிலங்கள், பிற நாடுகளிலும் தமிழ் ஆய்வில் ஈடுபட்டுள்ள அனைத்துத் துறைகளும் ஒத்துழைப்பு நல்க வேண்டும்.

மேற்கூறியவாறே தமிழ் ஆய்வுக்குப் பயன்படும் வகையில் வெளியிடப்பட வேண்டிய இன்னொரு நோக்கு நூல் தமிழ், மொழியியல் துறைகளில் நிகழ்த்தப்பெறும் முன் முனைவர் (M.Phil), முனைவர், முது முனைவர் (Post- doctoral) ஆய்வுத் தலைப்புகள், அவற்றின் ஆய்வுத் திட்டங்கள் (research plan) பற்றிய வெளியீடு. ஒரே பொருளில் ஒன்றுக்கு மேற்பட்டவர் ஆய்வு நிகழ்த்துவதைத் தவிர்ப்பதற்கும், ஒத்த பொருளில் ஆய்வு செய்வோர் தம்முள் தொடர்பு கொள்வதற்கும் இது இன்றியமையாததாகும். இதுவும் காலமுறை அடிப்படையில் பல்துறையினரின் ஒத்துழைப்புடன் வெளியிடப்பட வேண்டியதாகும்.

தமிழ் மேம்பாட்டுக்குரிய அடிப்படையான நோக்கு நூல்களின் தேவைகள் இக்கட்டுரையில் விளக்கப்பட்டன. ஒவ்வொரு துறையில் பணிபுரியும் ஆய்வாளர் அனைவரும் ஒருங்கிணைந்து அவ்வத்துறைக்குரிய நோக்கு நூல்களின் தேவைகள் பற்றி முடிவெடுத்து அவற்றைத் திட்டமிட்டுத் தொகுத்தல் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிவதாகும்.

## மேற்கோள் நூல்கள்


சென்னை அரசாங்கம் 1962 ஆட்சிச்சொல் அகராதி, சென்னை.

சென்னைப் பல்கலைக்கழகம் 1924-1939 Tamil; Lexicon Vol. I-VI Supplement, Madras

தமிழ் வளர்ச்சிக் கழகம் 1954-1968 கலைக்களஞ்சியம் தொகுதி 1-10, சென்னை.

பாலகிருட்டின முதலியார், இரா, 1976 தமிழ் ஆங்கில அகராதி, தென்னிந்தியத் தமிழ்ச் சங்க வெளியீடு, சென்னை.

பாலசுப்பிரமணியன், க. 1989 "வரலாற்றுமுறைத் தமிழ்ப் பேரகராதிக்குப் பின்புலப் பணிகள்", தமிழ் அகராதிக்கலை கருத்தரங்கு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

மாதையன், பெ., 1978 தமிழியல் நோக்கு நூல் அடைவு, மேட்டூர் அணை.

Encyclopaedia Americana, 1984 Vol. 1-30

Encyclopaedia Brittanica 1987 Ed.15 Vol. 1-29

# கல்லூரிகளில் மொழிபெயர்ப்புப் பாடம்

முத்து. சண்முகன்

கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் மொழிபெயர்ப்புப் பாடம் இருந்தால், அது எப்படி நடைபெறுகிறது; அதற்குரிய காரணங்கள் என்ன; குறைகள் இருப்பின் அவைகளை நீக்கி அப்பாடத்தை எவ்வாறு செம்மைப்படுத்தலாம் என்பன பற்றிய சிந்தனைகளே இக்கட்டுரையின் நோக்கம். இங்குக் கூறப்படும் செய்திகள் என் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டு திரட்டப்பட்டன. இதனால் எவரையும் குறைகூறுவதாக நினைக்கவேண்டாம். இன்று பொதுவாக இருக்கும் நிலைமைகளை, என் அனுபவங்களைக் கூறி விளக்குகிறேன். இன்று நிலவும் நிலையை அறிந்துகொள்வது நமது வளர்ச்சிக்கு அடிகோலுவதாகும். வளர்ச்சிக்கு இது மிகவும் தேவை.

இன்று தமிழ் இலக்கியங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க வேண்டும்; நமது பண்பாட்டை, இலக்கியப் பரப்பை வெளிநாட்டவருக்குப் பறைசாற்றவேண்டும்; இது ஒரு அடிப்படை வேலை என்றெல்லாம் பேச ஆரம்பித்திருக்கிறோம். அதற்கெனத் திட்டம் தீட்டுகிறோம். குழுக்கள் அமைக்கிறோம். தமிழாசிரியர்களே இவற்றில் முக்கிய பொறுப்பேற்கின்றார். வேறு யார் ஏற்கமுடியும்? ஆனால் இன்று எத்தனைத் தமிழ் இலக்கியங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார்கள்? தமிழ் இலக்கியங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருப்பவர்கள் எல்லாம் வெளிநாட்டவர்; அல்லது பிறதுறைகளில் பணியாற்றுகின்ற தமிழர். ஏன் தமிழாசிரியர்கள் தமிழ் இலக்கியங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கவில்லை? நான்கூட மொழியியல் துறையிலும் பயிற்சி பெறவில்லை என்றால் குறுந்தொகையை மொழிபெயர்த்திருப்பேனா என்பது ஐயமே.

உலகெல்லாம் தமிழ் முழக்கம் செய்யவேண்டும் என்று நமக்குள்ளே கூக்குரல் எழுப்புகிறோம். ஆனால் நம்மவரில் எத்தனைபேர் இன்று தமிழ் இலக்கியத்தைப் பற்றி, தமிழர் பண்பாட்டைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதுகின்றனர்? தமிழ் இலக்கியங்களைப் பற்றித் தமிழ்க் கலையைப் பற்றி இன்று ஆங்கிலத்தில் எழுதுகின்றவர்கள் எல்லாம் பிற நாட்டவர். ஆனால், தமிழியல் ஆராய்ச்சி தொடங்கிய காலத்தில், தமிழைப் பற்றி எழுதியவர்கள்

எல்லாம் ஆங்கிலத்திலேயே, ஆங்கிலத்தில் பயிற்சி இல்லாதவர்களைத் தவிர, மற்றையோர் எல்லாம் ஆங்கிலத்திலேயே எழுதினர். ஆங்காங்கே தமிழ் இலக்கியத்திலிருந்து சிற்சில பாடல்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தனர். தமிழியல் ஆராய்ச்சி சென்ற 25 ஆண்டுகளில் வளர்ந்தது போன்று, இந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் வளர்ந்து இருக்குமோ என்பது ஐயத்திற்குரியதே. இவ்வளர்ச்சியின் போக்கு வேறாக இருக்கலாம்.

நூற்றுக்கணக்கான ஆய்வேடுகள் தமிழ் இலக்கியத்தைப் பற்றியும், தமிழோடு தொடர்புடைய பல்வேறு துறைகளைப் பற்றியும் வெளிவந்திருக்கின்றன. எல்லாம் தகுதியுடையன என்று கூறமாட்டேன். நூற்றுக்குப் பத்து தேறினால் போதும். ஆனால் இந்தப் பத்துங்கூட ஆங்கிலத்தில் வந்தால்தானே நம் ஆராய்ச்சியின் வளர்ச்சியை வெளிநாட்டவர் அறிந்துகொள்ள முடியும். ஆங்கிலத்தில் இவை வெளிவரவில்லையே. ஆங்கிலத்தில் எழுதப்படுகின்ற கட்டுரைகளை இங்குத் தமிழகத்தினுள்ளே கிண்டல் செய்பவர்களும் உள்ளனர். இவர்கள் ஏன் தங்கள் எதிர்ப்புகளை, கருத்து மாறுபாடுகளை ஆங்கிலத்தில் எழுதி அதே பத்திரிகைகளுக்கு அனுப்பக்கூடாது? இன்று வருகின்ற ஆய்வேடுகளில் பெரும்பாலும் தமிழைத் தவிர வேறு எந்த மேற்கோள்களும் இருப்பதில்லை. இருந்தாலும் மூலத்தைப் படித்து மேற்கோள் காட்டி இருக்கமாட்டார்கள். எவராவது, எங்காவது கூறி இருப்பதை எடுத்துக் கூறுவார்கள். ஒருவர் ஒரு பொருளைப் பற்றி அதுவரை வந்த நூல்கள், கட்டுரைகள் எல்லாம் படித்துவிட வேண்டும் என்பது விதி. அவர் அவ்வாறு படித்த நூற்களைத்தான் துணைநூற்பட்டியலில் கொடுக்கவேண்டும். சில ஆய்வேடுகளில், அதிலும் குறிப்பாக எம். ஃபில். ஆய்வேடுகளில் தமிழில் வந்த நூல்களைத் தவிர வேறு எதிலிருந்தும் மேற்கோள்கள் காட்டப்படுவதில்லை. அதிலும் மூன்றாந்தரமான நூல்களில் இருந்து தவறான கருத்துடைய மேற்கோள்களை ஆதாரமாகக் காட்டி மேலே செல்வது மிக வருந்தத்தக்க செயலாக இருக்கிறது.

நான் ஓய்வு பெற்றபின் என்னிடம் ஆங்கிலம் பேச, எழுதக் கற்றுக்கொள்வதற்கு மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தைச் சார்ந்த தமிழில் முனைவர் பட்டத்திற்கு வேலை செய்கிற ஆராய்ச்சி மாணவர்கள், பல்வேறு துறைகளில் முதுகலை வகுப்பில் படிக்கின்ற மாணவர்கள் வந்தனர். இவர்களில் பெரும்பான்மையோர் தமிழ் மாணவர்களே. இவர்கள் ஒரு வாக்கியங்கூடச்

சரியாக ஆங்கிலத்தில் பேசவோ எழுதவோ தெரியாதவர்கள். எப்படி இவர்கள் இளங்கலையில் ஆங்கிலத்தில் தேறினார்கள் என்பது வியப்பாக இருக்கிறது. மதுரையில் டோக் பெருமாட்டி கல்லூரியில் தமிழ் முதுகலை மாணவியர்களுக்கு ஆங்கிலம் பேச எழுதக் கற்பித்தேன். மாணவர்கள் விரும்பி, ஆர்வமாகக் கற்ற பாடம் இது. எந்த அடைமழை இருந்தாலும், எந்தத்தேர்வு இருந்தாலும், எனக்கு மட்டும் ஓயவு கிடையாது. அவ்வளவு ஆர்வம் மாணவர்களுக்கு. இறுதியில் அவர்கள் முதல்வரிடம் சென்று 'மிஸ் இப்பொழுதுதான் எங்களுக்குத் தமிழ் படிப்பதில் நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது இனி எந்தப் போட்டித் தேர்வுகளுக்கும் நாங்கள் ஆயத்தமாக இருக்கிறோம்' என்றனர்.

குற்றாலம் பராசக்தி கல்லூரியிலும் அதே அனுபவம் எனக்குக் கிடைத்தது. தமிழ் மாணவர்கள் ஆங்கிலம் கற்க விரும்புகின்றனர். அதன் தேவையை உணருகின்றனர். ஆங்கிலத்தில் தகுதியின்மையே அவர்கள் உள்ளத்தில் ஒரு தாழ்வு மனப்பான்மையை உண்டுபண்ணுகிறது. ஆங்கிலத்திலும் ஓரளவு தகுதி இருந்தால்தான் மற்ற மாணவர்களோடு போட்டிபோட முடியும்; தலை நிமிர்ந்து நிற்கமுடியும் என்பதை உணருகின்றனர். அதிலும் ஒரு மொழியில் இலக்கியப் பயிற்சி பெற்றவர்களுக்கு மற்றொரு மொழி மிகவும் தேவை. அதற்கு ஆங்கிலம் நமக்குப் பெரிய வாய்ப்பாக இருக்கிறது. இந்த வாய்ப்பினை நமது மாணவர்களுக்கு நாம் உருவாக்கிக் கொடுக்கவில்லை என்றால் நமது பொறுப்பில் தவறிவிட்டோம் என்பதுதானே பொருள்.

முதுகலை மாணவர்கள், முனைவர் பட்டத்திற்கு வேலைசெய்யும் மாணவர்கள். இவர்களுடைய ஆங்கிலத்தகுதி இதுவென்றால், இளங்கலை மாணவர்களின் தகுதியைப் பற்றி என்ன கூற முடியும்? தஞ்சைப் பகுதியில் ஒரு கல்லூரியில் மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். ஏன் தெரியுமா? ஆங்கில ஆசிரியர்கள் ஆங்கிலப் பாடத்தை ஆங்கிலத்திலேயே நடத்தினாராம். மாணவர்களுக்குப் புரியவில்லையாம். தமிழில் நடத்தவேண்டுமாம். இந்த மாணவர்களுக்குத்தான் நாம் மொழிபெயர்ப்புப்பாடம் நடத்த வேண்டி இருக்கிறது. ஆங்கிலத்தைப் படித்துப் புரிந்துகொள்ளும் ஆற்றல் இல்லாத மாணவர்கள் எப்படி ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்க முடியும்?

நமது பல்கலைக்கழகமொன்றில் தமிழ் முதுகலை வகுப்பில் மொழிபெயர்ப்புப் பாடத்தைப் புகுத்தினர். மாணவர்களுக்கு மொழிபெயர்க்கும்

அளவிற்கு ஆங்கிலத்தகுதி இல்லை. அதனால் ஆங்கிலம் பேச எழுத அவர்களைப் பழக்கும் பாடத்தையும் புகுத்துவது நல்லது என்றேன். அதற்கு உடன்படாமல், மொழிபெயர்ப்புப் பாடத்தையே புகுத்தினர். ஓராண்டு அனுபவத்திற்குப் பின்பு, என் கருத்திற்கே வந்தனர்.

இத்தகைய மாணவர்களுக்கு மொழிபெயர்ப்புப் பாடம் வைப்பதில் பயன் என்ன? ஆங்கிலத்தைப் படித்துப் புரிந்துகொள்ள முடியாத நிலையில் எப்படி அவர்களுக்கு ஆங்கிலத்தில் இருந்து தமிழுக்கு மொழிபெயர்க்க முடியும்?

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் ஒரு மூன்றுமாத காலம் மொழிபெயர்ப்புத் துறையில் பணியாற்றினேன். அக்காலத்தில் கல்லூரிகளில் இளங்கலை மாணவர்களுக்கு மொழிபெயர்ப்புப் பாடம் எவ்வாறு நடைபெறுகிறது என்பதைக் கண்டறிய சில கல்லூரிகளில் உள்ள மொழிபெயர்ப்பு நோட்டுப்புத்தகங்களை வாங்கி மதிப்பீடு செய்தோம். ஆண்டு ஒன்றுக்கு இரண்டு அல்லது மூன்று மொழிபெயர்ப்பு கொடுக்கப்படுகின்றன. மொழிபெயர்ப்புக்குக் கொடுக்கப்படுகின்ற ஆங்கிலப் பகுதிகள் மொழிபெயர்ப்பில் எத்தகைய சிக்கல்களைத் தீர்க்கக் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்ற வரன்முறை எதுவும் இல்லாமல் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சில கல்லூரிகளில் சில ஆங்கிலச் சொற்களுக்குப் பொருள் கூறுவதோடு மொழிபெயர்ப்புப்பாடம் முடிந்துவிடுகிறது. இருவருடைய மொழிபெயர்ப்பில் உள்ள தவறுகளைப் பட்டியலிட்டு வகைப்படுத்தி, சிக்கல்களைக் கண்டு, சிக்கல்களை மையமாகக் கொண்டு மொழிபெயர்ப்புக்குரிய வரன்முறைப்படுத்தப்பட்ட பயிற்சி நூல் (Graded work book) - ஒன்றினை உருவாக்க வேண்டும். மாணவர்கள் செய்யும் பிழைகளைத் திரட்டிக்கூற இங்கு இடம் போதாது. பாவம் அவர்கள் என்ன செய்வார்கள்? ஆசிரியர்களுக்கே வருவோம்.

இனி ஆசிரியர்களின் நிலையைக் காண்போம். சில ஆண்டுகளுக்கு முன்பு மதுரைப் பல்கலைக்கழகக் கல்லூரிப் பேராசிரியர்களுக்கு மொழிபெயர்ப்புப் பயிற்சிப் பாடம் ஒன்று நடத்தினேன். அப்பொழுது அவர்களுக்குச் சிக்கல்களை மையமாகக் கொண்ட சில ஆங்கிலப் பகுதிகளைக் கொடுத்து மொழிபெயர்க்கச் சொல்லி அவர்கள் மொழிபெயர்ப்பை அவர்கள் முன்னிலையிலேயே ஒத்துப்பார்த்துக் கலந்துரையாடினோம்.

ஆசிரியர்களுக்கே மொழிபெயர்ப்பில் தெளிவில்லை. அவர்கள் செய்த பிழைகளை எல்லாம் வரன்முறைப்படுத்தி வைத்திருக்கிறேன். சில எடுத்துகாட்டுகளை மட்டும் இங்குக் கூறுகிறேன்.

Soda water contains no soda- என்பதற்குக் கிடைத்த மொழிபெயர்ப்புகள்:

1. சோடா நீர் சோடாவை தனக்குள் கொண்டில்லை
2. சோடா நீர் சோடாவினால் (மட்டும்) நிறைந்ததல்ல.
3. சோடா நீர் சோடாவைக் கொண்டதல்ல.
4. சோடாவைக் கலந்து சோடா நீர் அமையவில்லை.

If you have a glass of soda water on a table, it separates into two things, a liquid and a gas.

1. ஒரு குவளை சோடா நீரை மேசைமீது ஊற்றினால் இது இரண்டாகப் பிரிகிறது. ஒன்று நீர் மற்றது வளி.
2. ஒரு டம்ளர் சோடா நீரை நீ மேசைமேல் விட்டால் அது நீராகவும் காற்றாக (வு) (வாய்வு) மாக இருபொருளாக அமையும்.
3. ஒரு மேஜையின்மீது ஒரு குவளை சோடாத் தண்ணீர் ஊற்றினால் அது இரண்டு பொருளாகப் பிரிகின்றது. ஒன்று திரவம், மற்றொன்று வாயு.

சிலவற்றையே மேலே கூறியிருக்கின்றேன். மூலத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாமை, ஆங்கிலத்தை அப்படியே தமிழ்ப்படுத்த முயலுதல், தமிழ் வாக்கியங்கள் தமிழ் மரபிற்கேற்ப அமையாமை ஆகிய பல பிழைகளைக் காணலாம். இத்தகைய ஆசிரியர்கள் எப்படி மொழிபெயர்ப்புப் பாடத்தைச் செம்மையாகக் கற்பிக்கமுடியும். குருடனும் குருடனும் சேர்ந்து குருட்டாட்டமாடுகின்ற கதையாக இன்று கல்லூரிகளில் மொழிபெயர்ப்புப் பாடங்கள் நடைபெறுகின்றன. இந்த நிலையில், இப்பாடத்தை எப்படி எவ்வாறு திருத்தியமைக்கலாம்? மொழிபெயர்ப்பு இப்படி நடைபெறுவதைவிட வேண்டவே வேண்டாம் என்று கூறிவிடப் பல ஆசிரியர்கள் முன்வருவார்கள். நமது தகுதியைப் பெருக்கி, புதிய துறைகளில் பயிற்சிபெற்று, மாணவர்களின்

தேவைக்கேற்பப் பாடத்திட்டத்தை மாற்றியமைக்க நாம் ஆயுத்தமாக இல்லையே. கல்வியைப் பற்றிய நமது அணுகுமுறை ஆசிரியரை மையமாகக் கொண்டது. நாம் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு எதைக் கற்றோமோ அதையே இன்றைய மாணவனும் கற்கவேண்டும் என்பது நமது அணுகுமுறை. இன்றைய மாணவனது தேவையை மையமாக வைத்துக் கொண்டு கல்விமுறைகளை மாற்றியமைக்க நாம் ஆயத்தமாக இல்லை. நாம் புதிதாகப் படிக்கவேண்டுமே.

*மொழிபெயர்ப்பு வேண்டும் என்று வைத்துக்கொண்டால் என்ன செய்யலாம்?*

1. இன்று நடைமுறையில் இருக்கும் மொழிபெயர்ப்பினைப் பற்றிய விரிவான கள ஆய்வு தேவை.
2. தமிழ் முதுகலை மாணவர்களுடைய ஆங்கிலமொழித் தகுதியைப் பெருக்குதல்.
3. முதுகலைப் பட்டப்படிப்பில் அல்லது எம்.'.பில்., பட்டப்படிப்பில் மொழிபெயர்ப்புப் பாடத்தைக் கட்டாயப் பாடமாகக் கொண்டுவருதல், இதில் கோட்பாடுகளும், செயல்முறைகளும் அமைதல் வேண்டும். கல்லூரி, பல்கலைக்கழகங்களில்தான் இது நடைபெற வேண்டும். அஞ்சல் வழிக்கல்வியில் இது அவ்வளவு வெற்றிபெறாது.
4. கல்லூரி ஆசிரியர்களுக்கு மொழிபெயர்ப்புப் பயிற்சிக் கோடை வகுப்புகள் நடத்துதல்.
5. மொழிபெயர்ப்புக்குரிய பயிற்சி நூல் ஒன்றை உருவாக்குதல். இதில் கொடுக்கப்பட்டிருக்கும் பகுதிகள், 1. சிறியதாய் இருக்க வேண்டும். 2. ஒரு சிக்கலை மையமாகக் கொண்டிருக்க வேண்டும். அரைமணி நேரத்தில் மொழிபெயர்ப்பை முடித்துவிட்டு, மற்ற அரைமணி நேரத்தில் முன்னைய மொழிபெயர்ப்புப் பகுதியில் உள்ள தவறுகளைத் திருத்திக் கலந்துரையாட வேண்டும். கொடுக்கப்பட்டிருக்கும் ஆங்கிலப் பகுதிகள் அவனது ஆங்கில அறிவையும் பெருக்கவேண்டும்.

இதற்கென ஒரு குழு அமைத்து, தமிழகத்திலுள்ள ஏதாவது ஒரு பல்கலைக்கழகம் இதற்குப் பொறுப்பேற்று இதனைச் செயற்படுத்த முன்வருமா?

# தமிழ் இலக்கிய மேம்பாடு– புதுக்கருத்துத் தேடல்கள்

இரா. சந்திரசேகரன்

காலந்தோறும் இலக்கிய வடிவங்கள் மாறுகின்றன. இலக்கியத்தின் பாடுபொருளும். உத்திகளும், வெளிப்பாட்டு முறைகளும் மாறுகின்றன. சமூக அமைப்புகளும், அதிகார வரம்புகளும் இவற்றின்மீது ஆதிக்கம் செலுத்தி வந்துள்ளன. எனினும், இலக்கியத்தின் நோக்கம் எல்லாக் காலத்திலும் ஒன்றைத்தான் மையமாகக் கொண்டிருந்தது. மனித மதிப்புகளைக் காப்பதும், கையாளுவதும், மாற்றியமைப்பதும் போன்றவற்றின் மூலம் மனித குலத்தை நிரந்தரப்படுத்துவதே அது (1:401). மனித மதிப்புகளைக் காப்பாற்றுவதற்காக இலக்கியம் புதிய புதிய கருத்துத் தேடல்களை எதிர்நோக்கியுள்ளது.

ஒரு படைப்பாளியிடத்தில், கருத்தைத் தேடி எடுத்துக் கொடுத்து எழுதுக என்று சொல்வதற்கு யாருக்கும் உரிமையில்லை. அது அவனுடைய படைப்புச் சுதந்திரத்தை நசுக்கி விடுவதாகும். ஆனால் சமூகம் அவனிடம் என்ன எதிர்பார்க்கிறது என்று தன் எதிர்பார்ப்பைச் சொல்ல எப்பொழுதும் உரிமையுண்டு. இதன்மூலம் படைப்பாளியின் ஆழ்பார்வையில் மாற்றங்களை ஏற்படச் செய்து அவனை இச்சமூகத்திறகுள் அழைத்து வரும் கடமையும் உண்டு.

இன்றைய கால கட்டத்தில் தமிழ் இலக்கியத்தில் என்னென்ன கருத்துக் கூறுகள் இடம் பெறலாம் என்று பட்டியலிட்டுக் காட்டுவதல்ல இக்கட்டுரையின் நோக்கம். மிகச் சுருக்கமாகச் சில களங்களை அடையாளங்காட்டுவதே இதன் நோக்கம். அறிவுபூர்வமான சோசலிச சமூக அமைப்பை எதிர்நோக்கும் தத்துவார்த்தச் சார்புடையதாக இக்கட்டுரையின் தேடல் இயங்குகிறது.

## இன்றைய நிலை

இந்திய விடுதலை என்பது, இந்தியச் சமூகத்திலும் அதனுள்ளடங்கிய தமிழ்ச் சமூகத்திலும், ஓர் ஆற்றல் வாய்ந்த ஊடு சக்தியான அலையாக வந்தது. பொருளாதார, சமூக, பண்பாட்டு அமைவுகளின் வளர்ச்சி நோக்கிய மாறுபாடுகளின் உயிர்ப்பு ஊக்கியாக அது எதிர்நோக்கப்பட்டது. இந்திய விடுதலைக்கு முன்னைய தமிழ் இலக்கியம், விடுதலையை எதிர்நோக்கிய

கருத்தமைவுகளைப் பாவியது. விடுதலைக்குப் பிறகு, தமிழ் இலக்கியத்தில், விடுதலையின் பயன் விளைவுகளாக எதிர்நோக்கப்படும் கருத்தமைவுகள் பரவலாக இடம் பெற்றன. விடுதலைக்குப் பிறகு கடந்த முப்பது ஆண்டுகளில் படைப்பிலக்கியங்களில் எடுத்தாளப்படும் கருத்துக்களைப் பற்றிப் பல ஆய்வுகள் வெளிவந்துள்ளன. அவற்றை விரிவாகப் பட்டியலிட்டுத் தொகுத்தளிப்பது மிகவும் விரியும். மிகச் சுருக்கமாகச் சுட்டிக் காட்டுவதாயின், தமிழ் நாவல்களில் அரசியல்-சமூக மாற்றங்களை நோக்கிய பல சிந்தனைகள் வெளிப்படத் தொடங்கின. விடுதலையை நோக்கி எழுச்சி பெற்ற தேசிய வீறு, விடுதலைக்குப் பிறகும் தொடர்ந்தது. அதையொட்டிய நிலையில் நமது வாழ்வில் நிகழ்ந்து நின்ற, புதிதாக உருப்பெற்ற அரசியல், சமூகக் கொடுமைகளும் நாவல்களில் கருத்தாட்சி செய்யத் தொடங்கின. அரசியல் விடுதலை மூலம் சமூக விடுதலையை நோக்கிய பயணம் வற்புறுத்தப்பட்டது. கைம்பெண் துயர், வரதட்சணைக் கொடுமை, கலப்பு மணம், பெண்ணடிமை, தவறி விழுந்த, வஞ்சிக்கப்பட்ட பெண்களுடைய மறுவாழ்வு தொடர்பான பெண்கள் சிக்கல்கள், தீண்டாமை, பகுத்தறிவு, மூடப்பழக்க வழக்கங்கள், பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், சமூக நவீனமாதலில் ஏற்படும் பின்னீர்ப்பு தொடர்பான சமூகச் சிக்கல்கள் முதலாவை அவற்றுள் முக்கியமானவை. ஆண்-பெண் உறவு, கற்பு, தொடர்பான பண்பாட்டுச் சிக்கல்களும், தனிமனித ஆளுமைச் சிதைவு போன்றவையும் இடம்பெறலாயின. தீர்வு தரும் நோக்கில் காதலின் மேன்மை, அன்பின் சிறப்பு, கூட்டுறவின் உயர்வு, நல்ல பண்புகளின் வெற்றி ஆகியவையும் நாவல்களில் எடுத்துக்காட்டப்பட்டன (2:35-40).

சிறுகதை இலக்கியத்திலும், நாவல் இலக்கியத்தில் எடுத்தாளப்படும் கருத்தமைவுகளையொட்டிய சிந்தனைகளே பரவலாக இடம் பெற்றன. வறுமைத் துயர், தொழிலாளர் போராட்டம், பணத்தேவையின்முன் தனிமனித ஆளுமை மற்றும் பண்பாட்டின் சிதைவு, குடும்பத்தில் கணவன்-மனைவி உறவு, குடும்ப-சமூக உறவுச் சூழ்நிலைகளில் மன எழுச்சிகள், பெண் சிக்கல்கள், தனி மனித வேஷங்கள், குழந்தைப்பாசம், அன்பின் வலிமை என்று நல்லனவும் தீயனவுமான பல தரப்பட்ட கருத்துக்கள் எடுத்தாளப்பட்டன. ஜெயகாந்தன் வழியாகச் சிறுகதை இலக்கியத்தில் ஒரு புதிய அலை எழுச்சி பெற்றது. மாறி வரும் சமூக, பொருளாதார, பண்பாட்டுச் சூழலமைவுகளால், எதிர்கொள்ள வேண்டிய புதிய சிந்தனைகளை இந்த அலை சிறுகதை இலக்கியத்தில் கொணர்ந்தது (3:30).

தமிழ்க் கவிதையைப் பொறுத்தவரை, பாரதியின் எழுச்சி இந்த நூற்றாண்டின் தமிழ்க் கவிதைக்கு ஒரு புதிய பரிமாணத்தை அளித்தது. அரசியல் விடுதலையும், அதைச் சார்ந்த சமூக விடுதலையும் இக்காலக் கவிதையின் உயிர்ப்பாயிற்று, தேசியம், ஒற்றுமை, இயற்கைப் புனைவு, தன்னுணர்ச்சி வெளிப்பாடு முதலானதும், தொழிலாளர், மகளிர், வறியோர் மேம்பாடும் கவிதைகளில் முதன்மைப்படுத்தப்பட்டன. மொழி, இனம், பண்பாடு தொடர்பான பழமை மீட்சியும் அதிகமாக இடம் பெறலாயிற்று. புதுக்கவிதை இயக்கங்கள் செல்வாக்குப் பெற்ற பிறகு சமூக அவலங்களைக் கடுமையாகச் சாடிப் புதிய சமூகப் புரட்சி அமைப்பை உருவாக்கும் போர்க்குணம் மிகுந்த கவிதைகள் பரவலாக எழுச்சி பெற்றன.

தமிழ் நாடக இலக்கியம் பிற இலக்கிய வடிவங்களைப் போலச் செல்வாக்கு மிக்கதாக வளரவில்லையெனினும் ஆங்காங்கே சில வளர்ச்சிக் கீற்றுக்களை இனங்காட்டுகின்றன. புராண-இதிகாச நாடகங்களும், வரலாற்று-காவிய நாடகங்களும், தனிமனிதர் வீரம்-காதல் வெளிப்பாட்டு நாடகங்களுமே மிகுந்து வந்துள்ளன. நாடக மேடைகளைச் சார்ந்துள்ள நகைச்சுவைத் தோரண நாடகங்களுக்கிடையிலும் கோமல் சாமிநாதன், இந்திரா பார்த்தசாரதி போன்றோர் வழியாக அரசியல் மற்றும் சமூகக் கீழ்மைகளைக் கிண்டலாகச் சுட்டவும் போர்க்குணத்துடன் மோதவும் முனையும் நாடக அலையும் எழுச்சி பெற்று வருகிறது.

மேற்குறித்த நான்கு இலக்கிய வடிவங்கள் தவிர, நவீன செய்திப்பரவல் சாதனங்கள் வழியே திரை இசைப்பாடல்கள், தொலைக்காட்சி, வானொலி நாடகங்கள் போன்றவற்றின் மூலம் சமூகக் கரைகளைக் கட்டி எழுப்பும் முயற்சிகளும் நடைபெற்று வந்துள்ளன. ஆக இதுவரை சுட்டிக்காட்டப்பட்டவையெல்லாம், தமிழ் இலக்கியத்தில் சமூக மாற்றத்தை எதிர்நோக்கும் கருத்துக்களை இடம்பெறச் செய்வதற்கான முயற்சிகள் நடைபெற்றிருக்கின்றன என்பதற்கான அடையாளம்தான். போதுமான வலிமையோடு அவை இயங்கியிருக்கின்றனவா என்பது நம்முன் உள்ள பெரிய வினா? தமிழ் இலக்கியத்தில் அவ்வப்போது ஒளி வீசிய வெளிச்ச-எழுச்சிக் கீற்றுகளை மட்டும் தனியே தொகுத்துப் பார்க்கும்போது நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் பரவலாக வந்து கொண்டிருக்கின்ற - அவற்றை இலக்கியங்கள் என்ற சொல்லால் அழைக்க முடியாது-புனைகதைகள், கவிதைப்

போலிகள், நாடகத் துணுக்குகள் புதிய கருத்துத் தேடல்களுக்கான ஊற்றுக் கண்களை அமைத்து வைத்திருக்கின்றன.

இலக்கிய மேம்பாட்டிற்கான புதிய கருத்துத் தேடலுக்கு நாம் ஆயத்தமாவதற்கு முன், அடைபட்டுக் கிடக்கும் ஊற்றுக் கண்களை நாம் திறந்தாக வேண்டும். அரசனும், நிலப்பிரபுவும், சமயமும், தனியுடைமையும் என நம் இலக்கியங்களின் கருத்துக்களை ஆளுமை செய்த புறச்சக்திகளுக்கும் இலக்கிய ஊற்றுக் கண்களுக்கும் இடையேயான போராட்டம் தொடர்ந்து நடைபெற்றுத்தான் வந்துள்ளது. அதன் விளைவுதான் இலக்கிய வடிவங்களிலும் கருத்தமைவிலும் ஏற்பட்டு வந்துள்ள மாறுதல்கள். இன்றைய நிலையில் மேற்சொல்லப்பட்ட வெளிச்சக் கீற்றுகள் சிலவற்றை விலக்கி விட்டுப் பார்த்தோமானால் வெகுஜன பத்திரிகைகளின் வழியாக நமது சமூகத்தை ஆளுமைசெய்து வரும் கணிப்பு இதுதான்: கொலை கொள்ளை சார்ந்த துப்பறியும் புனைக்தைகள், பாலுணர்வு மிகை, வக்கிர மன உணர்வுகளின் வெளிப்பாடு, காதலைப் பற்றிய போலியான தன்-சோகப் பாங்கு, நவீனமாதலின் பெயரால் தனிமனித - குடும்ப-சமூக ஒழுக்க வரையறைகளின் சிதைவை நியாயப்படுத்துதல், போலியான புறநிலைப் பண்பாக்கம் முதலான கருத்துக்களே. ( நமது இலக்கியச் சூழலை நசித்து, புதிய கருத்துத் தேடலுக்கரன ஊற்றுக் கண்களை அடைத்துக்கொண்டிருக்கும், இந்தக் கவிப்பை எவ்வாறு நீக்குவது? வெகுஜனப் பத்திரிகைகளிலிருந்து அல்லது அவற்றின் ஆளுமையிலிருந்து இலக்கியத்தை மீட்டாக வேண்டும். ஏனெனில் வெகுஜனப் பத்திரிகைகள் பொருளாயத அமைப்பின் உற்பத்திப்பொருளாகவே இலக்கியத்தையும் த்ருகிறது. இலக்கியம் படைக்கப்படுவது என்ற நிலைமாறி உற்பத்தி செய்யப்படுவது என்ற நிலையை வெகுஜனப் பத்திரிகைகளின் பொருளாயத சக்தி உருவாக்கி விட்டது. புதிய கருத்துத் தேடல், இந்த மீட்சியிலிருந்துதான் புறப்பட முடியும்.)

## கருத்துத் தேடல்கள்

இன்றைய தமிழ் இலக்கிய மேம்பாட்டிற்கான புதுக் கருத்துத் தேடல்களைக் கீழ்க்காணும் மூன்று பரந்த நோக்கு வெளிகளில் மேற்கொள்ளலாம்.

1. சமகாலச் சமூக அமைப்பின் மாற்றத்தை எதிர்நோக்குவன

2. தனிமனித ஆளுமையை நிலைநாட்டுவன.

3. உலகம் முழுமைக்கான மனித மதிப்புக்களை உருவாக்குவன

இந்த மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புபட்டவையே. இவையெல்லாவற்றிற்கும் அடிப்படையாக இருப்பது மனித நேயமே. பொதுவாக எல்லாக் காலத்திலும் இலக்கியம், எல்லாவகையான புற ஆதிக்கச் சக்திகளுக்கும் இடையிலும், வாழ்ககையின் பொருள் மற்றும் அர்த்தபூர்வமான மனித வாழ்வு பற்றிச் சாசுவதமான கேள்வியையே பற்றிக் கொண்டு நகர்ந்து இயங்கி வந்திருக்கிறது. இப்போதும் அப்படித்தான்.

**சமூக அமைப்பு - மாற்றம்**

தமிழ்ச் சமூகத்தில் இந்திய அரசியல் விடுதலைக்குப் பிறகு எதிர்நோக்குப்படுகிறது. சமூக விடுதலையை நோக்கி அதை வலியுறுத்தி இயக்கும் வகையில் நமது இலக்கியம் நகர்ந்தாக வேண்டும். ஏற்கெனவே சுட்டிக்காட்டப்பட்ட கொடுமைகள், படம்பிடித்துக் காட்டப்பட்ட அவலங்கள், எதார்த்தமான வாழ்வியல் துன்பங்கள் ஆகியவையெல்லாம் தமிழ் இலக்கியத்தை, இலட்சிய பூர்வமான கனவு வெளியிலிருந்து நடைமுறை வாழ்க்கைக்கு இறக்கிக் கொண்டு வந்துள்ளது.

(லியோ டால்ஸ்டாயின் இலக்கியத்தைப் பற்றி எழுதும்போது இலெனின் இவ்வாறு எழுதினார். *"உழைக்கிற மக்கள் தங்கள் எதிரிகளை அடையாளம் காண்பதற்காக மட்டுமல்ல, மக்கள் தங்கள் எதிரிகளை அடையாளம் காண்பதற்காக மீட்சிக்குத் தடையாக உள்ள பலவீனங்களை வீழ்த்துவதற்கும் டால்ஸ்டாய் இலக்கியங்கள் துணைநிற்கும்" (5:156).* இன்றைக்கு நமது இலக்கியமும் இதையே பின்பற்ற வேண்டியுள்ளது..) கொடுமைகளை இனங்காட்டுவது மட்டுமல்ல, தீர்வு சொல்வது மட்டுமல்ல, கொடுமைக்குள்ளானவர்கள் தம் மீட்சிக்குத் தடையாக உள்ள பலவீனங்களை உணர்ந்து அவற்றிலிருந்து மீண்டும் எழுச்சி பெறுவதற்கான கருத்துக்கள் ஊட்டப்படுதல் வேண்டும். ஏனெனில் ஒரு சமூகப் புரட்சி எனப்படுவது மேலிருந்து தரப்படுவது அன்று; கீழிருந்து ஆக்கப்படுவது. நமது சமூக அமைப்பின் மாற்றம் ஒரு (சோசலிச) சமவுடைமைச் சமூகத்தை நோக்கியது என்ற கருத்தின் கீழ், இலக்கியமும் அதை நோக்கும்போது, மக்கள் பற்றிய உணர்வு ஜனநாயக மதிப்புக்கள், நாட்டுப்பற்று, நாட்டு மக்களின் சகல நலன்கள், உழைப்பு,

சகல நிலையிலும் மனித சமத்துவம் (ஆண்-பெண்-ஏழை உயர்ந்தோர்), செல்வக் குவிப்பின்மை போன்ற நெறிகளே முன்னிறுத்தப்படும். சுருக்கமாகச் சொல்லப்போனல் மனிதன், ஒரு சமூகக் கூட்டமைப்பில் அவனுடைய உழைப்பின் பங்கு, அவன் சமூகத்துடன் கொண்டுள்ள உறவின் அடிப்படையிலேயே கவனிக்கப்படுகிறான். அதனால்தான் சோசலிச எதார்த்தவாத இலக்கியத்தின் மகத்தான தேட்டமானது, உழைப்பை ஓர் அழகியல் மற்றும் தார்மீக வகையாகக் கருதுகிறது (1:137). முன்னைய இலக்கிய நாயகர்கள் உழைப்பு நடைமுறைகளில் ஈடுபட்டிருக்கவில்லை. ஆனால் இன்றைய இலக்கியம் உழைப்பின் சகல பரிமாணங்களையும், அதன் சிக்கல்களையும் ஒரு மரியாதையுடன் எடுத்துத் தர வேண்டியுள்ளது. உழைப்பின் வழியாக ஒரு மனிதனை அவன் காலத்தோடு இணைத்து வைப்பதையே சோவியத் இலக்கியத்தின் மகத்தான கண்டுபிடிப்பு என்று லியானோன் கூறியது இதனால்தான். (1:130) எல்லோரும் எல்லாமும்பெற வேண்டும் என்ற கனவு காணப்படுகிற சமூக அமைப்பு பொருளாயதக் குவிப்பினைச் சமமாக்கும்போதுதான் உருவாக முடியும். அரசியல், சமூகம், சமயம், பண்பாடு போன்ற சகல நிலைகளிலும் ஏற்பட்டுள்ள சிக்கல்களின் அடிப்படை, பொருளுடைமையும், குவிப்புமே என்று உணரும்போதுதான் உழைப்பை முன்னிலைப்படுத்துதல் எவ்வளவு மகத்தான காரியம் என்பது விளங்கும்.

சமூக அமைப்புகள் காலந்தோறும் மாறி வருகிறபோது புதிய புதிய மதிப்புகள் செல்வாக்குப் பெறுகின்றன. முடியாட்சிக் காலத்தில் *"மன்னனுக்காக உயிர் விடுவதே பெரிய தியாகம்"* என்று இருந்த மதிப்புக்கூறு இன்று சிதைந்துபோய் விட்டது. மாறாகப் புதிய மரபுகள், புதிய மதிப்புகள் உருவாகி விட்டன.

சமூகத்தில் நடைபெறுகிற பலவிதமான மனித-எதிர்வுக் கொடுமைகளுக்கு எதிராகப் போராட வேண்டியுள்ளது. அறிஞர் அண்ணா முதலானவர்கள் இலக்கியங்களில், தமிழ்ச் சமூகத்தைப் போலியாக ஆட்டிப் படைத்துவந்த மூடப்பழக்க வழக்கங்கள் கடுமையாக எதிர்க்கப்பட்டது. அத்தகைய எதிர்ப்புக் குரல், இன்று பல நிலைகளிலும் எழ வேண்டியுள்ளது. அதே நேரத்தில் சமூகத்தின் எளிமையையும் அழகையும் உயர்த்தவும் தேவையாகிறது. சோவியத் இலக்கியத்தில் கிராமங்களைப் பற்றிய இலக்கியம் பரவலாக எழுந்ததன் மூலம், சமூகத்தில் எளிமை, பாரம்பரியம், நாட்டின் மீது ஒருவன்

கொண்டுள்ள பற்று முதலான உணர்வுகள் பரவின என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். (1:196).

சமகாலச் சமூக அமைப்பின் மாற்றத்தை-ஓர் அறிவு பூர்வமான சோசலிசச் சமூக அமைப்பினை இலக்காக மேற்கொள்ளும் நிலையில்-எதிர்நோக்கும்போது நம் கருத்துத் தேடல்கள் கீழ்க்காண்பவற்றிலிருந்து தொடங்கப்படலாம்.

1) பொருளாயதக் குவிப்பு சமூகத்தின் சகல நிலைகளிலும் தோற்றுவித்துள்ள நசிவு.

2) அரசியல், சமயம், கல்வி, கலை போன்றவற்றில் மனிதனுக்கு எதிராக நிகழும் போலிமை

3) அறிவுக்கேலாத மூடப்பழக்க வழக்கங்கள் முதலானவற்றிற்கு எதிரானதாகவும், அவற்றை அழிக்க முன்வருவதுமான போர்க்குரல்.

1. கண்டறியப்படாத கிராமங்களின் உழைப்பு, எளிமை சார்ந்த மேன்மை.

2. அறிவு, பண்பாடு சார்ந்த ஒழுகும் வாழ்வின் உன்னதம்.

3. சமவுடைமை அமைப்பின் ஜனநாயகம், கூட்டுணர்வு, உழைப்பின் மீது நேயம் முதலான பண்புகளின் சிறப்பு

ஆகியவற்றை முன்னிறுத்துவதான விளக்கம்.

## தனிமனிதச் சிதைவு– மீட்சி

"பொதுவாக எந்த நல்ல இலக்கியமும்-அது மனிதனுக்காகச் சொல்லப்படுமேயானால் - அதில் ஒழுக்கம் பற்றிய தேடல்கள் இருந்தாக வேண்டியது தேவையான அம்சம்" என்று குஸ்நெட்சோவ் மிக வலியுறுத்துவார் (1:5). இத்தகைய ஒழுக்கமானது, சமூக உறவுகளை அடிப்படையாகக் கொண்டது. சக மனிதரோடு மேற்கொள்ளும் தோழமை, கூட்டுறவு, அன்புணர்வு, இரக்கம் ஆகியவற்றின் வழியாக வெளிப்படுவது. அண்மைக் கால மேற்கத்திய இலக்கியங்களில், தனிமனிதம், அவனைச் சுற்றியுள்ள சமூகத்திலிருந்து விலகிச் சென்று வாழ முனைவதை மையப்படுத்தும் போக்கு இருப்பதை டிமிட்ரி மார்கோவ் விரிவாக எடுத்துக்காட்டுவார் (7:67). மனிதனுக்கும் வலியுறுத்தப்பட வேண்டியது இன்றைய நமது கடமையாகிறது. நவீன சமூகத்தின் சமூகத் தீமைகளுக்கான காரணம் சமூகக் காரணிகளால் அல்ல, மனிதாபிமான காரணங்களால் அதாவது பண்பாட்டுப் பாரம்பரியத்தில் ஏற்பட்டுள்ள முறிவின்

காரணத்தினால் அமைவது என்று லீவிஸ் (1:407) எடுத்துக் கூறுகிறார். நவீன வளர்ச்சிகளுக்கிடையிலும், காலங்காலமாக இருந்து வந்திருக்கும் பண்பாட்டுத் திரட்சியைக் காப்பாற்றி வைப்பதுதான் மனித மதிப்புகளை இயக்கி வைக்கும் ஆற்றலாக அமையும். காலம் காலமாக இலக்கியம் அதைத்தான் செய்து வந்துள்ளது. வாழ்க்கையின் பொருள், ஆன்மிகத் தன்மை, உயர்ந்த மதிப்புகள், உண்மை, அன்பு, இரக்கம், தோழமை, கொள்கையில் நிலைத்திருத்தல் போன்ற உயர்ந்த கருத்துக்களே காலகாலத்திற்கும் மனித மதிப்புகளாக இருக்கின்றன. நவீன வாழ்க்கை நெறிகள் பல சமயங்களில் இந்த மனித மதிப்புகளைச் சிதைக்க முனைகின்றன. வாழ்க்கையின் உண்மையான பொருளை அறிந்து கொள்வதை விடவும், அதன் சலனங்களைப் பற்றிக் கொண்டு மனிதனைச் சிதைக்க முனைகின்றன. வாழ்க்கையின் உண்மையான பொருளை அறிந்து கொள்வதை விடவும், அதன் சலனங்களைப் பற்றிக் கொண்டு மனிதன் சிதைந்து கொண்டிருக்கின்றான். இன்றைய தமிழ் இளைஞனிடத்தில் வன்முறை, ஒழுக்க மீறல்கள், போலி நாகரிக மயக்கம், வாழ்க்கையில் விரக்தி, அவநம்பிக்கை, போதைப் பொருள்களில் ஈடுபாடு, உழைப்பின் மீது வெறுப்பு போன்ற பல சிதைவுச் சக்திகள் வேரூன்றி வருகின்றன. இவற்றிலிருந்து தமிழ் இளைஞனை மீட்டெடுத்தாக வேண்டும். இவற்றின் ஆபத்துக்களை எச்சரிப்பதுடன் மட்டுமல்லாமல், இவற்றிற்கான தீர்வுகளை நம் பாரம்பரியப் பண்பாட்டுச் செழுமையிலிருந்து கொண்டு வர வேண்டும். அறிவுக் கூர்மை மட்டும்பெற்று நெறியும் நம்பிக்கையும் இல்லாமல் வளர்ந்து பாழ்பட்டுப் போன இளைஞர்கள் சிலர் என் நினைவில் நிற்கின்றார்கள். அவர்களுக்காக நான் கண்ணீர் விட்டிருக்கிறேன்" என்று 'அகல் விளக்கு' சந்திரன் பாத்திரப்படைப்புப் பற்றி டாக்டர் மு.வ. ஒரு முறை எழுதினார் (4: 37) இன்றைய கருத்துத் தேடலின் நோக்கத்தை இத்தகைய கண்ணீருடன் நாம் தேட வேண்டியுள்ளது.

இவ்வாறு தனிமனிதனைக் காப்பாற்றுகிற - அவனை அவன் சிதைவிலிருந்து மீட்டெடுக்கிற முயற்சிக்கான கருத்துத் தேடல்களைக் கீழ்க்காணும் முயற்சிகளின் மூலம் தொடங்கலாம்:

1. பழைய பண்பாட்டின் மூலங்களை, அவற்றின் செழுமையை மீட்டுத் தொகுத்துரைப்பது.

2. மனிதப் பண்புகளின் மிக உயரிய மூலங்களை இரக்கம், தோழமை போன்றவற்றை எடுத்துக் காட்டுவது.

3. மனிதனை, அவனுடைய தனித்திறமைகளுக்கான சிறப்புக்களை விடவும், சமூக உறவுகளின் மூலமே அவனைச் சிறப்புக்குள்ளாக்குவது:

4. மனிதனைச் சிதைக்கும் போதைப்பொருள் முதலாயினவற்றிலிருந்து மீட்டெடுப்பது.

5. பொருளாயத நலத்தை விடவும், வாழ்க்கையின் உண்மையான பொருள் வேறு உள்ளது என்பதை உணர்த்துவது.

சுருக்கமாகச் சொல்லப் போனால் மனிதனுடைய வாழ்வு அவனுக்காக அல்லாமல், அவனைச் சுற்றியுள்ள சமூகத்திற்காக என்று அவனுக்கு உணர்த்துவது.

***பன்னாட்டுப் பார்வை***

அறிவியல் தொழில் நுட்பப் புரட்சியானது நமது காலத்தின் அறிகுறியாய்க் கருதப்படுகிறது. அவை வாழ்க்கையின் சமூக, பொருளாயத, தார்மீக மற்றும் மனோவியல் அம்சங்களிலும், மனிதப் பண்புகள், உறவுகள் அன்றாட எதார்த்தத்தின் போக்குகள் ஆகியவற்றிலும் அடிப்படையான மாற்றங்களைக் கொணருகின்றன (1:130). முன்னைய கால கட்டங்களில் காணப்படுவதை விடவும் இலக்கியக் கருத்தெல்லைகளின் களங்கள் விரிவடைகின்றன. உலகம் முழுமையும் இணைத்துக் கட்டுகிற நெறி தேவைப்படுகிறது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் பாடப்பட்ட செவ்வியல் நெறியின் நடைமுறைப் பாங்கு இன்று செயலூக்கமான வழிகளுடன் தேவையாகிறது. பன்னாட்டு அளவிலான அகில உலகப் பார்வையுடன் மனித குலப் பிரச்சினைகளை இனங்காட்டுவதும், தீர்வு காட்டுவதுமாகிய கருத்தமைவு நமது இலக்கியத்தில் கொண்டுவரப்படுதல் வேண்டும். 'நவீன உலகில் உலகளாவிய முரண்பாடுகள் மனிதனை ஆவேசத்துடன் எதிர்கொள்ள வருகின்றன. மனிதனுக்கும் இயங்கியல் இயற்கைக்கும், மனிதனுக்கும் அவன் வாழ்தலின் இரத்தலுக்கும், மனிதனுக்கும் அணு ஆயுதப் பரவலுக்கும், மனிதனுக்கும் அறிவுத் தேடலுக்கும் என முரண்பாடுகள் கிளைத்து வருகின்றன' என்று டாட்யான லியுபிமோவா எழுதினார்

(6:131). இத்தகைய முரண்பாடுகளுக்குள் 'மனிதம்' தன்னை இழந்துவிடக்கூடாது என்பது, பன்னாட்டு நோக்கின் அடிப்படையாகும். சுருக்கமாகச் சொல்வதாயின் உடன்நிகழும் வாழ்க்கை நிகழ்ச்சிகள் மட்டுமல்லாது (சர்வதேச) பன்னாட்டு அளவிலான மனித வாழ்வின் அர்த்தத்தைத் தேடுகிற கருத்துக்கள் இன்றைய தமிழ் இலக்கியத்தில் தேவையாகின்றன. மதம், இனம், மொழிகளின் பேரால் நடைபெறும் ஆக்கிரமிப்புகள், நாடளாவிய பஞ்சம், வறுமை, நிறவெறி, வேகமான வளர்ச்சியில் இணைந்து வர முடியாமல் சப்பையாகிப் பின் தேங்குகிற மக்களின் இயலாமை, ஆக்கிரமிப்புகளின் ஆயுத பலங்களுக்கு முன் நசிவுபடும் மனிதரின் தீனமான சோகம், பொருளாயத ஏற்றத் தாழ்வுகளின்கீழ் மிதிபடும் மனிதனின் இறுக்கம், அறிவியல் கருவிகளுக்கு முன் மனிதப் பண்புகளின் சிதைவு ஆகியவையெல்லாம் இலக்கியங்களில் கருத்துப் பொருளாகிறபோது, இலக்கியம் பன்னாட்டுப் பார்வையுடையதாகும். அணு ஆயுதங்களுக்கெதிராகவும் மிகை இயந்திரப்பயன்பாடுகளுக்கெதிராகவும், மனிதன் தனக்குத் தானே அந்நியமாகிச் சிதைவதற்கு எதிராகவும் ஆன போர்க்குரல் தமிழ் இலக்கியத்தில் உருவாக வேண்டும். ஏனெனில் தமிழிலக்கியம், தமிழனுக்காக உருவானது மட்டுமல்ல; அது மனித குலத்துக்கும் சொந்தமானது.

இத்தகைய பன்னாட்டு நோக்கு, நவீன காலச் சமூகத்தின்-மனித குலத்தின்-சகல மாறுதல்களையும் வளர்ச்சியை நோக்கித் திசை திருப்பும்-ஆற்றல் மிக்கதாக அமையும் என்பது மட்டுமல்ல, நவீன கால வளர்ச்சியுடன் மனிதனை இணைத்தும் கொண்டுசெல்லும். இதற்குத் தேவையான கருத்துத் தேடல்களின் முயற்சிகள்-சுருக்கமாகச் சொல்லப் போனால் கீழ்க்காண்பனவற்றிலிருந்து முகிழ்க்கலாம்.

1. நவீன அறிவியல் வளர்ச்சியின் சாதனைகள் அனைத்து மக்களும் புரிந்து கொள்ளும்படியாக எளிமையாக்கி எடுத்துத் தருதல் (அறிவியல் புதினங்கள் போல...)

2. அணு ஆயுதங்கள், மிகை இயந்திரப் பயன்பாடு போன்றவற்றினால் மனிதகுலத்துக்கு நிகழவிருக்கும் நசிவுகளுக்கு எதிராகக் குரல் கொடுத்தல்.

3. இனம், மொழி, மத ஆக்கிரமிப்புகளுக்கு எதிராகப் போர் தொடுத்தல்.

4. நிற வேற்றுமை, பொருளாயத வேற்றுமை போன்றவற்றின் கொடுமைகளை எதிர்த்தல்.

5. உலக சகோதரத்துவத்தை, சமத்துவத்தை வலியுறுத்தல்

தமிழிலக்கியத்தைப் பொறுத்தவரை, உலகளாவிய கருத்துக்கள், அதிகம் இப்போது இடம் பெறுவதில்லை. நம் கருத்துத் தேடல்கள் இத்திசையில் சரியாகத் திருப்பப்படுமானால், தமிழ் இலக்கியம், உலக இலக்கியமாகும்.

சமகாலத் தமிழ் இலக்கியத்தில், புதுக் கருத்துத் தேடல்களை, நிகழ்காலச் சமூகத்தோடு தொடர்புபடுத்தி மட்டுமல்ல, எதிர்காலச் சமூகத்தோடு தொடர்புபடுத்தியும் தேட வேண்டியுள்ளது. ஏனெனில் இலக்கியம் சமூகத்தின் பிரதிபலிப்பு என்று மட்டும் அல்ல, அது சமூகத்தை ஆக்குவது, ஓர் இலட்சியத்தை நோக்கி இட்டுச் செல்வது என்றும் காணுகிற ஆழ்பார்வை நமக்கு வலுப்படுவது தேவை. *"கழிந்தவற்றிலும் நிகழ்வனவற்றிலும் எனக்கு நம்பிக்கையில்லை. எதிர்காலத்தில் மட்டுமே நான் ஆர்வம் கொண்டுள்ளேன்"* என்று ஜேம்ஸ் ஜாய்ஸ் ஒருமுறை கூறினார் (8:204). ஒரு சாதாரண எழுத்தாளன் பழைய கால, நிகழ்கால சாதனைகளை எடுத்துக்காட்டுவதில் ஆர்வம் கொள்கிறான். ஆனால் ஒரு மகத்தான எழுத்தாளன், *"புதிய இலக்குகளைப் புதிய ஒளியை நோக்கிய எதிர்காலத்துக்குள் தன்னை முன்தள்ளிக் கொள்கிறேன்"* என்று ரே. பி. வெஸ்ட் (8:203) கூறுவது கூட இதுதான். ஆனால் எதிர்காலம் என்பது எங்கிருந்து வருகிறது? இன்றிலிருந்துதான். இன்றைய சமூக அமைப்பும் அதன் இயங்கியல் தன்மைகளும் தருகிற ஓர் ஆழ்பார்வை - தரிசனம் (Vision) படைப்பிலக்கியரிடம் ஒரு தத்துவச் சார்புடைமையை உருவாக்கி வைக்கிறது.)

மனித குலத்தைப் பிடித்துள்ள, மேன்மேலும் பீடித்துக் கொண்டிருக்கும் துன்பங்களின் மூல காரணங்களாகிய மனிதம் மனிதனைச் சுரண்டுவதை அகற்றி, போர்களைக் கைவிட்டு, எல்லா விஞ்ஞானத்தையும் அறிவையும் இயற்கையையும் மனிதாபிமானத்துக்கு உட்படச் செய்வதே இன்று நமக்கு முன்னுள்ள ஒரு பெரும் பொறுப்பு. இதைத் தேடுகிற-தேடிச் செயல்படுகிறபோதுதான் தமிழிலக்கியம், தமிழருக்காக என்று மட்டுமில்லாமல், உலக மனிதனுக்காக என்று ஆகும்.

**சான்று நூல்கள்**


1. 'இன்றைய சோவியத் இலக்கியத்தில் மனித மதிப்புகள்' - பெலிக்சு குஸ்நெட்சோவ், என்.சி.பி.எச். வெளியீடு, சென்னை - 1985.
2. 'இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்' - மா. இராமலிங்கம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1973.
3. 'இருபதில் சிறுகதை' - பியூலா மெர்சி, ஜெய்குமாரி ஸ்டோர்ஸ், நாகர்கோவில், 1974.
4. 'விடுதலைக்குப் பின் தமிழ் நாவல்கள்' - (பதி) பாக்கியமுத்து, கிறித்துவ இலக்கியச் சங்கம், சென்னை, 1974.
5. Foundations of Marxist Aesthetics A Progress Publishers, Moscow, 1978.
6. Problems of Contemporary Aesthetics - T. Lyumbimova, A, Zis, Radugh Publishers, Moscow, 1985.
7. Socialist Literature: Problems of Development - D. Markov, Radugh Publishers, Moscow, 1984.
8. The Writer in the Room - Ray B. West - Popular Prakasham, Bombay, 1972.

# இலக்கிய மேம்பாடு– புதுக்கருத்துத் தேடல்கள்

இராம. பெரியகருப்பன்

தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் புதிய புதிய கருத்துக்களின் அடிப்படையில் படைப்பிலக்கியங்கள், ஆய்வுகள் வளர்தல் வேண்டும். பழைய பாட்டையிலேயே செல்வது புதுமையும் புத்துணர்ச்சியும் தாராது.

ஒரு காதற் காட்சி என்பது அகமரபுப்படியே அமைதல் வேறு; இக்காலச் சூழலுக்கேற்ற மாற்றமுடன் அகமரபையும் பிரதிபலிப்பது வேறு. இவை தவிரப் புதிய மரபுகளையும் படைக்கலாம். மேலும் இன்று வெளிவருகின்ற படைப்பிலக்கியங்களிலும் ஒரேமாதிரியான நிகழ்ச்சி, கருத்துப் பின்னல்களையே படித்துச் சலிப்படைகிறோம். பக்கத்து மொழிகளின் அளவு மாற்றம் வளர்ச்சி, முன்னேற்ற நிலைகள் தமிழில் காணப்படவில்லை என்ற குறை அடிக்கடி பேசப்படுகிறது.

கீழ்க்கண்ட கருத்துரைகள் இது தொடர்பாக அவைமுன் ஆய்வுக்குப் படைக்கப்படுகின்றன:

1. சமகால நிகழ்வுகள், அரசியல் சூழல்கள், மக்கள்தொகைப் பெருக்கத்தினால் வரக்கூடிய பேரவலங்கள், இந்தியர்களின் சுகாதார மனப்பான்மை, இன்மை என இவ்வாறு பல்வேறு பொருள்கள் பற்றிக் குறுங்காப்பியங்கள், நாவல்கள் தோன்ற வேண்டும்.

2. காதலை மையமிட்ட கதைகளைவிட, அதைத் துணைக்கருவாகக் கொண்ட கதைகளில் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

3. இன்றைய நிலையில் சமுதாய அங்கத இலக்கியத்திற்கு நிறைய வாய்ப்புண்டு. சின்னச்சின்னத் துணுக்குகளாகப் புதுக்கவிதையில் எழுதப்படுவனவற்றைத் தொகுத்தாலே, ஒரு முழுநீள அங்கதப்பார்வை கிடைக்கும். நாகரிகமாக, நுட்பமாக அதேசமயம் உள்ளத்தில் சென்று தைக்கின்ற இலக்கியங்கள் படைக்கப்பட வேண்டும்.

4. 'ஊழல்' என்பது இன்று சமூகத்தை அழுத்திக் கொண்டிருக்கும் மிகப்பெரிய சிக்கலாகும். இதைப் பல கோணங்களில் அணுகலாம். கவிமணியின் 'மருமக்கள் வழி மான்மியம்' போல முழுநீள அங்கதச் சுவை அமைந்த குறுங்காப்பியங்கள் கதைகளைத் தோற்றுவிக்கலாம்.

5. பாரதியார் நடிப்புச் சுதேசிகள் என்று சொல்வதைப்போல் பல்வேறு துறைகளிலும் போலிகள் பெருகிவிட்டார்கள். இப்போலிகளைப் பற்றிச் செறிவு மிகுந்த இலக்கியங்கள் படைக்கலாம்.

6. தமிழில் நகைச்சுவை இலக்கியங்கள் மிகக்குறைவாக உள்ளன. நகைச்சுவை மிக்க, நினைக்க நினைக்கச் சிரிப்பூட்டுகின்ற கற்பனை வளம் மிகுந்த இலக்கியங்கள் தமிழில் மிகக்குறைவாக உள்ளன. ஆங்கிலத்தில் காணப்படுவது போன்ற சுவை மிகுந்த இலக்கியங்கள் தமிழில் இதுவரை தோன்றாமை கருதத்தக்கது.

7. தமிழில் அறிவியல் தொடர்பான படைப்பிலக்கியங்கள் குறைவாகவே வெளிவருகின்றன. நேரடி அனுபவமுள்ளவர்கள் விஞ்ஞான இலக்கியங்களை எழுதவேண்டும். ஒரு மருத்துவர் அல்லது விமான ஓட்டி அல்லது விலங்கியல் ஆய்வாளர் தத்தம் துறை சார்ந்த கருத்துக்களின் அடிப்படையில் படைப்பிலக்கியங்களை எழுதுவார்களேயானால் அறிவியலும் படைப்பிலக்கியமும் ஒருங்கிணைந்து உன்னதமாக விளங்கும்.

8. படைப்பிலக்கியத்தில் பாலுணர்ச்சிகளைப் பற்றி விரித்தெழுதுவோர் அதனை மேலோட்டமாக அறிந்துகொண்டு மட்டுமே எழுதுகின்றனர். வரதட்சிணை முதல் வேலை பார்க்கும் பெண்களின் வாழ்க்கைச் சிக்கல்கள் வரை அனைத்திலும் முழுமையான உளவியலடிப்படையில் இலக்கியங்கள் படைக்கப்படவேண்டும்.

9. நமது கிராமப்புறங்கள், எளிய மக்களின் வாழ்க்கை முறைகள், தொழிலாளர் வர்க்கத்தின் சறுக்கல்கள் போன்றவற்றை முழுமையாக யாரும் சித்திரிக்கவில்லை. சிசுவதை போன்ற நூற்றுக்கணக்கான சமூகச்சிக்கல்கள் தேடுவாரற்றும் தீர்ப்பாரற்றும் கிடக்கின்றன. அவையெல்லாம் கண்டுகொள்ளப்பட்டும் தேடப்பட்டும் எழுதப்படவேண்டும்.

10. புதிய புதிய செய்திகளை - கருத்துக்களைத் தேடித் தொகுக்க வேண்டும். அவற்றைப் புதிய புதிய கோணங்களில் படைக்க வேண்டும். சொல் புதிது, பொருள் புதிது; என்பதற்கொப்ப புதிய பொருள், புதிய பார்வை ஆகியவற்றால் தமிழிலக்கியத்தை மேம்படுத்த வேண்டும். இதற்குப் பிறமொழி இலக்கியப் படிப்புப் பெரிதும் துணைபுரியும். உலக இலக்கியக் கண்ணோட்டம் உதவி செய்யும்.

# மொழிபெயர்ப்பியல்

அ. வெ. சுப்பிரமணியன்

**மொழிபெயர்ப்பு - முந்தைய நிலை**

சங்க காலத்தில் மொழிபெயர்ப்புப் பற்றிய கருத்து இருந்தது என்றாலும் அது ஓர் இயக்கமாகத் தோன்றவில்லை. ஜைனர்களும் வடநாட்டு இந்துக்களும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின் பெருமளவில் தமிழ்நாட்டில் குடியேறத் தலைப்பட்டனர். அவர்களின் இலக்கியங்கள் சமஸ்கிருதம், பிராகிருதம், பாலி மொழிகளினின்றும் தமிழில் பெயர்த்து வெளியிடப்பட்டன. இவற்றுள் பெரும்பகுதி பிருஉறத்கதை (கதாசரித்சாகரம்) என்ற கதைக் கொத்து ஜைனர்களால் ஜைனசமய நூலாக இயற்றப்பட்டது. இதனை முதல் நூலாக வைத்துக் கொங்குவேளிரால் பெருங்கதை என்ற தலைப்பில் உயர்ந்ததொரு காப்பியமாகத் தமிழில் இயற்றப்பட்டது. இது மொழிபெயர்ப்பல்ல; உயர்ந்த படைப்பிலக்கியமாக எண்ணத்தக்கது. தண்டி வடமொழியில் இயற்றிய காவியாதரிசம் எனும் நூலைத் தண்டியாசிரியர் தமிழில் தழுவலாக இயற்றினார்; இது தண்டியலங்காரம் என்ற பெயரில் உலவுகின்றது. இவை தவிர நிகண்டு நூல்கள் வடமொழியில் உள்ள முறையைப் பின்பற்றித் திவாகரம், பிங்கலந்தை போன்ற நிகண்டுகள் ஆக்கப் பெற்றன. இவையும் மொழிபெயர்ப்பு ஆகா.

ஆங்கிலேயர், மற்றுமுள்ள ஐரோப்பியர் தமிழ்நாட்டுக்கு வணிக நோக்குடன் வந்து நாட்டை ஆளத் தொடங்கிய பின் விவிலிய நூல் தமிழில் பெயர்க்கப்பட்டதுடன் போப், கால்டுவெல் போன்ற அறிஞர்களின் முயற்சியால் திருக்குறளும் திருவாசகமும் ஆங்கிலத்தில் பெயர்க்கப்பட்டன. இந்நூற்றாண்டில் பல தமிழ் இளைஞர்கள் இரவீந்திரநாத் தாகூரின் சாந்தி நிகேதனத்தில் வங்க மொழியைக் கற்று வங்கப் புதினங்களையும் சிறுகதைகளையும் தமிழில் ஆக்கித் தந்தனர். விடுதலை இயக்கத்தின் விளைவாக இந்தி மொழியில் நல்ல பயிற்சி பெற்றவர் சிலர். பிரேம் சந்த் போன்றவர்களின் நூல்களைத் தமிழாக்கம் செய்தார்கள். கா.ஸ்ரீ.ஸ்ரீ மராட்டிய புதினங்களைத் தமிழில் பெயர்த்துத் தந்தார்கள். மற்ற திராவிட மொழிகளினின்றும் தமிழில் பற்பல நூல்கள் பெயர்க்கப்பட்டன. ஆயின் தமிழிலிருந்து மற்ற இந்திய மொழிகளுக்கும் ஆங்கிலத்துக்கும் மொழிபெயர்க்கப் பெருமுயற்சி எடுக்கப்படவில்லை. மிகச் சிறுபான்மையான நூல்கள் ஆங்கிலம் தவிர ருஷ்ய, பிரெஞ்சு, ஜெர்மன்,

செக் மொழிகளில் பெயர்க்கப்பட்டன; இவை பதினாயிரக்கணக்கான படிகளமைந்த பதிப்பாக வெளியிடப் பெற்று அத்தனை படிகளும் விற்பனை ஆயின என்பது கவனிக்கத் தக்க ஓருண்மை.

## இன்றைய நிலை

தமிழக அரசு, மொழிபெயர்ப்புத் துறையில் அவ்வப்பொழுது ஊக்கம் காட்டி வருவதால் சிற்சில நூல்கள் வெளியாகின்றன. ஆயினும் நிலைமையில் பெருத்த மாறுதல் இல்லை என்பதே உண்மை. எட்டு ஆண்டுகளுக்கு முன் தமிழக அரசு ஆறு மொழிபெயர்ப்பு நூல்களை வெளியிட்டது. வெளியீட்டு நிகழ்ச்சியில் அன்றைய முதல்வர் "ஆறு நூல்களென்ன? அடுத்த ஆண்டு அறுபது நூல்களை வெளியிட வேண்டும்" என்றார்கள். அடுத்த ஆண்டுக்குள் இந்த இயக்கத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. தஞ்சையில் உள்ள தமிழ்ப் பல்கலைக்கழகம் இவ்வேலையை முனைந்து செய்யும் என்ற அரசின் தமிழ்த்துறை எதிர்பார்த்தது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தாலும் இத்துறையில் ஒன்றும் செய்ய இயலவில்லை. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மொழிபெயர்ப்புப் பணியில் இறங்கிப் பெருந்தொண்டாற்றினால் அது பொருத்தமுடையதாக இருக்கும். ஆனால் இத்துறையில் இந்நிறுவனம் சற்றும் கவனம் செலுத்தவில்லை. மொழிபெயர்க்கும் திறனுடைய இரு மொழியாளர்கள் இந்நிறுவனத்தில் ஒருவர் கூட இல்லாமை வருந்துதற்குரிய ஒன்று. அண்மையில் அரசின் முயற்சியால் மொழிபெயர்ப்பு நூல்கள்-கம்பராமாயணம் பால காண்டமும் நற்றிணையும் ஆங்கிலக் கவிதையாகப் பெயர்க்கப்பட்டு வெளிவந்தன. வெளியீட்டு விழா நடைபெற்று இரண்டு மாதங்கள் ஆகியும் நூல்கள் இன்னும் விற்பனைக்குக் கொண்டு வரப்படவில்லை என்பது கவனிக்கத் தக்கது.

## மேம்பாட்டுக்கான வழி வகைகள்

இன்றைய நிலை தளர்நிலையே என்பதைத் தமிழின் ஆக்கத்தில் முனைப்புடைய அனைவரும் ஏற்றுக் கொள்வார்கள். உலக மொழிகளின் நிலையை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது தமிழின் நிலை எத்துணை தாழ்ந்தது என்பதை உணர்ந்து கொள்கிறோம். ஜெர்மன் மொழியில் ஆண்டுக்கு 5000 நூல்கள் மொழி பெயர்க்கப்படுகின்றன. மிகச் சிறிய நாடாகிய செக்கோசுலொவேகியாவில் பேசப்படும் செக் மொழியில் ஆண்டுக்கு 1000 மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியாகின்றன. தமிழில் 100க்கும் குறைவே என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்!

இந்த அவல நிலை விரைவில் மாற வேண்டும் என்றால் சில உத்திகளைத் தாமதம் இன்றி நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும். மேனாட்டில் பல்கலைக்கழகங்களிற் பல, உயர்ந்த நூல்களை வெளியிடுகின்றன. இலக்கியத் தரத்தில் உயர்ந்த நூல்கள் விரைவில் விற்பனை ஆகாமல் நின்று விடுகின்றன என்ற எண்ணத்தில் தனியார் துறையைச் சேர்ந்த வெளியீட்டகங்கள் இவற்றை வெளியிடத் துணிவதில்லை. தமிழ்நாட்டில் உள்ள பல்கலைக்கழகங்கள் இதுகாறும் இத்துறையைப் புறக்கணித்தே வந்திருக்கின்றன; இந்நிலையை மாற்றி விரைவிலேயே உயர்ந்த தரமுடைய இலக்கிய நூல்களைப் பல்கலைக்கழகங்கள் வெளியிடத் தொடங்க வேண்டும். அண்ணா பல்கலைக்கழக துணைவேந்தர் இத்துறையில் எடுத்துள்ள முயற்சி பாராட்டத் தக்கது. செயல்முறையில் கணிசமாக ஓராண்டுக்கு 10, 15 நூல்களை ஒவ்வொரு பல்கலைக்கழகமும் வெளியிடத்தக்க அமைப்பு உருவாக வேண்டும்.

இன்று அரசு இத்துறையில் தொடர்ச்சியாகக் கவனம் செலுத்தி ஆண்டுக்கு இத்தனை என்ற ஒரு திட்டப்படி மொழிபெயர்ப்புகளை வெளியிட வாய்ப்பு இல்லை; இதுவே மெய்யான நிலை. அரசின் எந்தத் துறையும் இத்தகைய ஆக்கப் பணியைச் செய்யும் நிலையில் உருவாகவில்லை. ஆகவே மொழிபெயர்ப்புகளை வெளிக்கொணர ஒரு வாரியம் நிறுவப்பட வேண்டும். ஆண்டுக்கு 200 நல்ல தரமுள்ள பெயர்ப்பு நூல்களை இந்நிறுவனம் வெளியிட வேண்டும் என்று அரசு கண்டிப்பாக உத்தரவு பிறப்பித்து, அது தன் பணியைச் சரிவரச் செய்து வருவதை அவ்வப்பொழுது கண்காணித்து வரவேண்டும். இந்த 200 நூல்களில் 150 தமிழில் பெயர்க்கப்பட வேண்டும்; 50 நூல்கள் ஆங்கிலம் முதலான வேறு மொழிகளில் பெயர்க்கப்படல் வேண்டும். இம்மொழிபெயர்ப்பு வாரியம் நாளிதழ்களில் விளம்பரங்களை வெளியிட்டு நல்ல மொழிபெயர்ப்பாளர்களைத் தெரிந்தெடுத்து வேண்டிய பயிற்சி அளித்துத் திறமுள்ள ஆசிரியர்களை உருவாக்க வேண்டும். இது இன்றியமையாத ஓர் பணி. இதனை செவ்வனே செய்து காட்ட வேண்டிய கடப்பாடு அரசிற்கு உள்ளது. முன்னேற்றம் அடையாத நாடுகளில் இத்தகைய கடமை அரசின் மேல் படிகின்றது; தனியார் வெளியீட்டகங்களை எதிர்பார்ப்பது பயனற்றது. அரசே முன்வந்து ஆற்ற வேண்டிய பெரும் சமூகப் பணி என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் காணப்படும் பல குறைகளை நீக்க முடிந்தால் இதனை ஓர் இலட்சிய நிறுவனம் ஆக்கலாம். பலமொழிகளில் தேர்ச்சி பெற்றவர்களை நியமித்து அவர்களைக் கொண்டு தமிழரல்லாதார் தமிழ் கற்க உதவும் தக்க மொழிபெயர்ப்புகள் அடங்கிய நல்ல பல பாட நூல்களை எழுதுவித்து இந்நிறுவனம் வெளிக்கொண்டு வர வேண்டும். தமிழ் மொழி ஒன்றையே பயின்ற புலவர்களை இதில் நியமனம் செய்து இதை உலக நிறுவனம் என்று பெருமையாக அழைப்பதில் யாதொரு பயனுமில்லை. இந்நிறுவனத்தை அடிப்படையில் மாற்றிஅமைக்கும் உரமும் உறுதியும் அரசுக்கு இருந்தால் இதிலிருந்து நல்ல பயனைப் பெறலாம்.

ஆண்டுக்கு ஒரு முறை அரசு சில நூல்களுக்குப் பரிசளித்துவருகிறது. மொழிபெயர்ப்பு நூல்களுக்கும் சில பரிசுகளை அளிக்கலாம்; இப்படிச் செய்வதால் இப்பணியில் ஈடுபட்டுள்ள எழுத்தாளர்களுக்குச் சிறிது ஊக்கம் ஏற்படும். மைய சாகித்திய அகாதமி தமிழ் மொழியிலிருந்து ஆங்கிலம், மற்ற மாநில மொழிகளுக்கு நூல்களைப் பெயர்ப்பதில் ஒரு சிறிதும் ஊக்கம் காட்டவில்லை. தமிழக அரசு இந்த நிறுவனத்தின் போக்கை மாற்றுவதில் ஊக்கம் காட்ட வேண்டும். மைய அரசுக்கு இதனைக் காட்டி அகாதமியின் மனப்போக்கை மாற்றி அமைக்க வேண்டும்.

உலக மொழிகள் பேசப்படும் பல நாடுகளில் தமிழர்கள் வாழ்ந்து வருகிறார்கள். பாரிஸ், ஜப்பான், ரோம், மாஸ்கோ போன்ற நகரங்களில் தமிழ்ச் சங்கங்கள் நிறுவப்பட்டு நல்ல முறையில் இயக்கப் பெறுகின்றன. அந்தந்த ஊர்த் தமிழ்ச் சங்கத்துடன் மொழிபெயர்ப்பு வாரியம் தொடர்பு கொண்டு நல்ல எழுத்துத் திறமை உள்ள தமிழர்களை அந்தந்த மொழிகளிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கச் செய்து நூல்களை வெளியிடலாம்; இத்தமிழ்ச் சங்கங்களின் உதவி கொண்டு தமிழில் அறிமுகமுடைய அந்நாட்டு எழுத்தாளர்களைக் கண்டறிந்து தமிழினின்றும் அம்மொழிகளில் உயர்ந்த நூல்களைப் பெயர்த்தும் வெளியிடலாம். உலகத் தமிழ்ச் சங்கம் என்பது இன்று ஒரு கனவாக நிற்கிறது; அது நடைமுறையில் உருவாகிச் செயல்படத் தொடங்கினால் வேறு நாடுகளுடன் மேற்குறிப்பிட்ட வகையான தொடர்புகளைக் கொள்ள அது பெரிதும் பயன்படும்.

உலகின் பல பாகங்களில் ஆயிரக்கணக்கான சிந்தனையாளர்கள், கவிஞர்கள் எத்தனையோ காலமாகப் பற்பல மொழிகளில் எழுதிவைத்த

அத்தனை உயர்ந்த நூல்களையும் தமிழன் படித்துப் பயன் பெற வேண்டுமென்றால் மொழிபெயர்ப்பு ஒன்றே அதற்குத் திறவு கோலாகும். மற்ற இடங்களில் கண்டறியப்பட்டவற்றை நாமும் புதிதாகக் கண்டறிய நேரத்தையும் திறனையும் வீணாக்காமல் உலக அறிஞர் கண்டுபிடிப்புகளை எல்லாம் நாம் மொழிபெயர்ப்பில் படித்துணர்ந்து புதிய புலன்களை ஆராயத் தொடங்க வேண்டும் என்றால் பல உலக மொழிகளிலிருந்து தமிழில் பெயர்த்து வெளியிடும் இயக்கம் பெருவெள்ளமாகப் பெருகிவர வேண்டும். தவிரத் தமிழில் உள்ள உயரிய நூல்களை நாம் நுகர்வது போல் மற்றையோரும் நுகரச் செய்ய வேண்டும். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற உயர்ந்த எண்ணத்தின் தூண்டுதலினால் தமிழினின்றும் வேறு மொழிகளுக்குப் பெயர்த்து வெளியிடுகிறோம். இவ்வியக்கம் பெருகுமானால் மற்றை மொழி பேசுவோர் பெரிதும் பயனடைவதுடன் தமிழினத்தின் உயர்ந்த சாதனைகளை அவர்கள் உணர்ந்து நமக்கு உரிய பெருமைகளைத் தர முன் வருவார்கள். இது பெரும் பயனாகும்.

# தமிழ் மொழிப் பயன்பாட்டுக் களங்களின் விரிவாக்கம்

இராம. சுந்தரம்

இலக்கியம் இலக்கணம், கலை, பண்பாடு, தத்துவம் முதலாய துறைகளில் தமிழ் சிறப்புறப் பயன்பட்டு வந்துள்ளது. ஆட்சியியல் துறையிலும் கட்டடக்கலை, கப்பல் கட்டுதல், தச்சு, கொல்லு முதலாய மரபுவழித் தொழில்களிலும், வேளாண்மை, மருத்துவம் முதலிய வேறுசில துறைகளிலும் கூடத் தமிழ் ஓரளவுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், இன்றைய புதிய அறிவியல்-தொழில் நுட்பத் துறையில், தகவல் தொடர்புச் சாதனத் துறையிலும் போதிய அளவு பயன்பாடு கொள்ளவில்லை. அதைப் பற்றிச் சிந்திப்பதும் அதற்கான வழிவகை காண்பதுமே இந்த எடுத்துரையின் நோக்கமாகும்.

## அறிவியல்- தொழில் நுட்பம்: நூல்கள்

கடந்த சில ஆண்டுகளாக அறிவியலும் தொழில் நுட்பமும் வியத்தகு வளர்ச்சி பெற்று வருகின்றன. பெரிதும் வளர்ச்சி அடைந்த ஆங்கிலம், பிரெஞ்சு, ரஷ்யன் போன்ற மொழிகள் கூட அறிவியல் வளர்ச்சிக்கு ஈடுகொடுக்க முடியாத ஒருநிலை ஏற்பட்டுள்ளது எனின் தமிழ், மலையாளம் முதலிய இந்திய மொழிகளின் நிலைபற்றிக் கூற வேண்டியதில்லை. எனினும், தமிழ் கடந்த இரண்டு நூற்றாண்டுகளாக இத்துறையில் சிறிய அளவிலேனும் பயன்படுத்தப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

19-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் நவீன அறிவியலைத் தமிழில் சொல்லும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு வந்திருக்கிறது. தொடக்க நிலை, நடுநிலைப் பள்ளிகளில் தமிழ்வழி அறிவியல் கற்பிக்கப்பட்டதால் பாடநூல்கள் வெளிவந்தன.

ஆங்கிலப் பாட நூல்களை அடியொற்றிய அத்தமிழ்ப் பாடநூல்களில் ஆங்கிலம், சமஸ்கிருதக் கலைச் சொற்களே மிகுதியாகக் கையாளப்பட்டன. 1850-களில் சாமுவேல் ஃபிஷ்கிறீன் என்பவர் இவ்வகையில் பல மருத்துவ நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். தமிழ்க் கலைச்சொல் பட்டியல்களையும் உருவாக்கினார். கலைச்சொல்லாக்க நெறிமுறைகளையும் வகுத்தார். 20-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் பாரதியார் போன்றவர்கள்

தமிழ்வழி அறிவியல்கல்வி பற்றி அழுத்தம் திருத்தமாகக் கூறினர். 1940-களில் உயர்நிலைப் பள்ளிகளில் தமிழ் பயிற்றுமொழியான காரணத்தினால் நூற்றுக்கணக்கில் பாடநூல்களும் பொதுநூல்களும் வெளிவரலாயின. அதைத் தொடர்ந்து 1960-களில் கல்லூரிகளிலும் தமிழ் பயிற்றுமொழியாக அறிமுகம் செய்யப்பட்டது. இதன் பலனாகத் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் ஏற்பட்டு, அதன்வழிப் பல பாடநூல்களும், கலைச்சொல் பட்டியல்களும் வெளிவரலாயின. என்.சி.பி.எச்., வானதி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் முதலிய நிறுவனங்களும் பல அறிவியல் நூல்களை வெளியிடத் தொடங்கின. தமிழ்ப் பல்கலைக்கழகம் பொறியியல், மருத்துவப் பாடநூல்களை வெளியிடுகிறது. இன்று புதுப்புது அறிவியல் துறை சார்ந்த நூல்கள் பெரிதுமாகக் கணிசமான அளவில் வெளிவந்து கொண்டிருக்கின்றன. இது வரவேற்புக்குரியதாகும்.

## இதழ்கள்

பாடநூல்கள், பொதுமக்களுக்கான நூல்கள், ஆய்வுநூல்கள் மட்டுமின்றிப் பல இதழ்களும் அறிவியல் செய்திகளை வெளியிட்டு வருகின்றன. 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளிவந்த தினவர்த்தமானி தொடங்கி இந்தப் பணி நடைபெற்று வருகிறது. இலக்கிய இதழ்கள் சிலவும் அறிவியல் கட்டுரைகளை வெளியிட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தொடங்கப் பெற்ற 'செந்தமிழ்' இதழில் சுமார் 80 பக்க அளவில் பிரகிருதிசாஸ்திரம் பற்றித் தொடர் கட்டுரை வெளிவந்துள்ளது சிறப்பாகப் பதிவு செய்யவேண்டிய செய்தியாகும். 'தமிழ்ப்பொழில்', 'செந்தமிழ்ச்செல்வி' முதலிய இலக்கிய இதழ்களும் அவ்வப்போது பல அறிவியல் கட்டுரைகளை வெளியிட்டுள்ளன. 1917-இல் 'தமிழர்நேசன்' என்ற இதழ் அறிவியலுக்கெனத் தொடங்கப் பெற்றது. தற்போது கலைக்கதிர், விஞ்ஞானச்சுடர், இளம் விஞ்ஞானி முதலிய இதழ்களும், தினமணி, தினமலர், தினகரன் முதலாய நாளிதழ்களும் அறிவியல் செய்திகளைத் தாங்கி வெளிவருகின்றன. இலக்கியத் தமிழ், அறிவியல் தமிழ் வளர்ச்சியுற இவை உதவுகின்றன.

## தகவல் தொடர்புச் சாதனங்கள்

வானொலி, தொலைக்காட்சி, செய்திப்படங்கள் (Documentary Film), வீடியோ முதலியனவும் இன்று தமிழ் மொழி மேம்பாட்டுக்கு உதவுகின்றன.

அறிவியல், தொழில் நுட்ப நிகழ்ச்சிகளும் மக்களோடு தொடர்புடைய பலதுறை நிகழ்ச்சிகளும் இவற்றின்மூலம் நடத்தப்பெறுகின்றன. அரசியல் பிரச்சினைகள், இலக்கியம், கலை தொடர்பான விவாதங்கள், விளையாட்டுத்துறை, வேளாண்மைத்துறை எனப் பல்வேறு பிரிவுகள் பற்றிய கருத்துகளைப் படிப்பறியா மக்களுக்கும் இவை கொண்டு செல்வதால் தமிழில் எளிமையும் சிக்கனமும் கையாளப்படுகின்றன. வானொலி, தொலைக்காட்சி இரண்டும் பிற சாதனங்களைவிட (நூல்கள், இதழ்கள்) உடனுக்குடன் செயல்பட வேண்டியிருப்பதால் பல இக்கட்டுகளைச் சந்திக்கின்றன. போதிய கலைச்சொற்கள் இல்லாததும், மொழிபெயர்ப்பு வசதி இல்லாததும் முக்கியக் குறைகளாகச் சொல்லப்படுகின்றன. இதனால் சில நேரங்களில் நிகழ்ச்சிகள் எதிர்பார்த்த பலனைத் தரவில்லை. மக்கள் நல்வாழ்வுத்துறை, பண்பாட்டுத்துறை முதலியவை தயாரிக்கும் செய்திப்படங்கள் மக்களுக்குக் கருத்துகளைப் புரிய வைப்பதில் பெருமுயற்சி எடுத்து அதற்கேற்பத் தமிழ் மொழிநடையில் மாற்றங்களைச் செய்கின்றன. கிரிக்கெட், கால்பந்துப் போட்டி விமர்சனங்களும் தமிழைப் புதிய முறையில் பயன்படுத்துகின்றன. இவை எல்லாம் முன் எப்போதும் கண்டிராத விளைவுகளாகும்.

**விளம்பரம்**

மக்கள் புதிய புதிய பொருள்களை வாங்கிப் பயன்படுத்தும் இயல்பினர். பொருள் உற்பத்தியாளர்கள் பற்பல உத்தியைப் பயன்படுத்தித் தத்தம் பொருள்களை விற்பனை செய்கின்றனர். விளம்பரங்களில் பயன்படுத்தப்படும் தமிழ் சுருக்கமானதாகவும் மனத்தில் பதியக்கூடியதாகவும் இருக்க வேண்டும். எனவே, அதற்கேற்ப மொழியில் மாற்றம் நிகழ்கிறது. பல விளம்பரங்களில் வினைச் சொற்களே இடம்பெறுவதில்லை. ஓசை நயம் கருதி வாக்கிய அமைப்புகளிலும் மாற்றங்கள் நிகழ்கின்றன. ஆங்கிலத்துக்கு நிகராகத் தமிழ் பயன்படுத்தப்படுகின்றது. ஆயினும் இவை பெரும்பாலும் மொழிபெயர்ப்பாக இருப்பதால் மொழிநடையில் சிக்கல் ஏற்படுவது தவிர்க்க இயலாததாகிறது.

அரசியல் அரங்கிலும் இன்று தமிழ் மிகச் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறது. 'மேடைத்தமிழ்' நன்கு வளர்ந்துள்ளது. சுவரொட்டிகளில் காணப்படும் கொள்கை விளக்கங்களைக் கொண்ட வாசகங்களும் மொழிநடையில் ஒரு இறுக்கத்தை உண்டு பண்ணியுள்ளன.

தமிழ் நவீன யுகத்துக்கு ஏற்பத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொண்டு வருகிறது என்பதற்கு இவையெல்லாம் சான்றாகும். எனினும், இன்னும் தமிழை நவீனப்படுத்த வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. இதற்குத் தமிழ் மட்டுமே அனைத்து நிலைகளிலும் பயன்படும் மொழியாக வேண்டும்.

**செய்ய வேண்டுவன**

1. அறிவியல், தொழில் நுட்பம், அரசியல், மேலாண்மையியல், விளையாட்டு இயல் எனப் பல்கிப் பெருகி வரும் பல்வேறு துறைகளிலும் பயன்படுத்தப்படும் கலைச் சொற்களைத் தொகுக்கவும், புதிய கலைச்சொற்களை உருவாக்கவும், கலைச் சொல்லகராதிகள் தயாரிக்கவும், உடனுக்குடன் தேவைப்படுவோருக்கு அவற்றைக் கொடுத்துதவவும் கலைச்சொல்லாக்க மையம் ஒன்று அமைதல் வேண்டும்.

2. புதிய அறிவுத்துறைகளைத் தமிழில் கொண்டுவர மூலநூல்கள் வெளிவருவதோடு மொழிபெயர்ப்பு நூல்களும் வெளிவரவேண்டும். இதற்கென ஒரு மொழிபெயர்ப்பு மையம் நிறுவப்பட வேண்டும்.

3. அறிவியல் கண்டுபிடிப்புகளை எல்லாம் மக்கள் அறிந்து கொள்ளும் விதத்தில் உரிய விளக்கங்களோடு கூடிய அறிவியல் கண்காட்சி மையங்களை மாவட்டம் தோறும் நிறுவவேண்டும்.

4. தமிழ்வழி அறிவியலைப் பரப்புவதால் தமிழும் அறிவியலும் வளரும். இதற்கெனச் சில அறிவியல் கழகங்கள் தோற்றுவிக்கப்பட வேண்டும்; அதன்வழி அறிவியல் சொற்பொழிவுகள், வீடியோ நிகழ்ச்சிகள், கண்காட்சிகள் நடத்தப் பெற வேண்டும். மக்களோடு நேரடித் தொடர்பு கொள்ளும் இந்நிகழ்ச்சிகளின் மூலம் இத்துறையில் தமிழ் மொழிப் பயன்பாடு பற்றி அறிய வாய்ப்பு ஏற்படும்.

5. தமிழகப் பல்கலைக்கழகங்கள் அறிவியல் தொழில் நுட்பம் உட்படப் பல்வேறு அறிவுத்துறைகளிலும், தகவல் தொடர்புச் சாதனங்களிலும், விளம்பரங்களிலும் பயன்படுத்தப்பெறும் தமிழ் மொழியை ஆராய்ச்சி செய்ய முன்னுரிமை தர வேண்டும். மொழிப் பயன்பாட்டின் நிறை குறைகளை அறிய இது வாய்ப்பாகும்.

# புதிய உத்திகள்

## (எடுத்துரை–குறிப்புகள்)

இந்திரா பார்த்தசாரதி

'புதினம், சிறுகதை கதை சொல்ல வேண்டும்' - (E.M. Forester) 'கதாநாயகன் அல்லது கதாநாயகி மூலம் கதையை நிகழ்த்துதல் (பிரதாப முதலியார் சரித்திரம்', 'கமலாம்பாள் சரித்திரம்', 'பத்மாவதி சரித்திரம்') இது காவிய மரபின் தாக்கம், வரலாற்றுத் தொடர்ச்சிக்கேற்பக் (Chronological order) கதை நிகழவேண்டும். கதை கால, இட, தொடர்ச்சி நியாயங்களுக்கும் கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்டுமா? 'சாளரத்துக்கு வெளியே ஒளிமிகுந்த ஒரு கண்ணாடி வழியே ஒருவன் நோக்கும்போது, தொலைவிலிருந்தும் பின்புறத்து இயற்கைக் காட்சிகளும், பார்க்கின்றவன் மிக அருகில் பின்னால் நிற்கும் இன்னொருவனும் ஒரேசமயத்தில் தெரியலாம். காட்சிகளாய்த் தெரியும் இவ்வுடன் நிகழ்வுகளை இலக்கியத்தில், சொற்களில் ஏன் சிறை செய்ய இயலாது? - ஹென்றி ஃபோர்ட் ஜேம்ஸ் ஜாய்ஸ், எஸ்ரா பவுண்ட், எலியட், 'தீர்மானிக்கப்பட்ட தொடர்பின்மை; 'ஒரே காலத்திய உடனிகழ்வு', தமிழில் முல்லைப்பாட்டு.

'படைப்பிலக்கியம் கதைத் தலைமாந்தரின் படத்தொகுப்பா? 'Albert Camus, Robbe, Grillet' தன்னிகரில்லாத் தலைவனைப் படைத்தல், பிரபுத்துவ சமூக அமைப்பு, இன்றிருக்கும் சமூகத்துக்கேற்றதா? Albert Camus, the Stranger (Meursault) Salinger, 'The Catcher in the Ray' (Holden Canefield) Kafka, 'The Castle' இவர்களைப் பற்றி என்ன அடையாளங்கள் இருக்கின்றன? இது ஓர் புது உத்தியா? (சங்க அகப்பாடல்கள்)

கதை சுவைபட, எடுப்பு, தொடுப்பு, விடுப்புகளுடன் எழுதப்பட வேண்டுமென்ற தொடக்கக்கால கருத்து - Beginning, Development and Resolution - (வரலாற்றுப் புதினங்கள் கதை சுவைபட எழுதப்பட வேண்டுமென்பதும் இப்பொழுது வலுவிழந்து வருகிறது. I am not an Entertainer (W.S. Burroughs). கதை கற்பனையாகப் படைக்கப்படும் உத்தி மாறிவிட்டது. வாழ்க்கை எண்ணங்களின் நிழற்கோடுகளாக உருப்பெறுகின்றன.

க.நா.சு.வின் அசுர கணம் கரு உருவாக இருப்பது உள்ளுறை உவமம் ரஷ்ய கார்டூன்-'ஒரு நீர்யானை மற்றொரு நீர்யானையிடம் வரிக்குதிரையைக்

காண்பித்து 'அதோ பார், உருவத்வம்' (formalism) என்று கிண்டல் செய்கிற வரிகள் அழகாக இருக்கின்றன. ஆனால் அவை எதற்காக? பரிணாமத்தத்துவ அடிப்படையில் அதற்கு ஏதாவது பயன் உண்டா? - இலக்கியம் வெறும் கலை வடிவந்தான்... அதற்கப்பால் இதற்குப் பொருளிருக்க வேண்டுமென்ற தேவையில்லை என்று வாதிடுகின்றவர்கள் உணர வேண்டியது.

Art Novel என்றால் என்ன? 'Medium is the message' 'குயில்பாட்டு', நினைவோட்டம் 'மனக்குகை ஓவியங்கள்' (புதுமைப்பித்தன்) தமிழ்ப் புதினங்களில், இவ்வுத்தியைத் தமிழில் கையாளும் போது, எண்ணத் தொடர்ச்சியின் தர்க்க நியாயத்தைப் புறக்கணிக்க முடியவில்லை. ஏன்? நடை-சொல்ல வந்த கருத்தைத் தெளிவாகத் தெரியப்படுத்துவதில் அக்கறை காட்டுவது மரபு. 'Signified' - 'Object.'

நடை, சொல்ல வந்த கருத்தைக் காட்டிலும் தன்னைத்தானே தெரியப்படுத்திக் கொள்ளும் உத்தி. Subject - Object வேறுபாடொழிந்து 'என்ன' என்பதற்குப் பதிலாக 'எப்படி' என்பது மட்டும் புலப்படுவது.

பாரதியிலும் குயில்பாட்டில் இறுதி இரண்டு வரிகளைத் தவிர்க்க முடியவில்லை. 'அதீத நிகழ்ச்சியை இயல்பாக நிகழ்வதுபோல் கையாளும் உத்தி' legends, பண்பாட்டுச் சாளரங்கள், 'One hundred years of solitude' எது தோற்றம், எது உண்மை? 'My collective unconscious of the human race'.

# தமிழ் மொழி ஆய்வு

இரா. இளவரசு

**அறிமுகம்**

ஆய்வு: சிக்கல்களை அறிவதோடு தீர்வுகளையும் சொல்வது ஒருதுறை சார்ந்ததெனினும் பலதுறைகளுடனும் இணைந்து இயல்வது. தமிழ்சார் ஆய்வு. கால ஆய்வு மேலோங்கியிருந்த நிலை - வரலாற்றுப் பார்வை - தொன்மை, பன்மை உணர்வு. மொழி ஆய்வு: மொழி பயன்படும் எல்லாக் களங்களுக்கும் உரியது - களங்களின் விரிவு ஆய்வெல்லை விரிவு-இன்றைய தேவை மிகுதி. 'தமிழ் வரலாறு' என்னும் பெயரில் தமிழ் இலக்கியங்கள் விரித்துப் பேசும் நூல்கள் வெளிவந்தமை.

**மொழி ஆய்வின் மேலோட்டமான பாகுபாடுகள்**

1. அ) பேச்சு மொழி பற்றிய நேரடி ஆய்வு

   ஆ) மொழியமைப்பை விளக்கும் இலக்கண நூல்களைப் பற்றிய ஆய்வு

   இ) தனி நூல்களின், செய்திப் பரிமாற்ற வாயில்களின் பயன்பாட்டு மொழி பற்றிய ஆய்வு.

2. அ) எழுத்தாய்வு (ஒலிநிலை, வரிநிலை)

   ஆ) சொல்லாய்வு

   இ) சொற்றொடராய்வு

   ஈ) சொற்பொருளாய்வு

3. அ) விளக்கவியலாய்வு

   ஆ) வரலாற்றியலாய்வு

   இ) ஒப்பியலாய்வு

   ஈ) உறழ்வியலாய்வு

மரபுவழி அணுகு முறையிலும் மொழியியல் கண்ணோட்டத்திலும் இவ்வாய்வுகள் இயலுதல்.

**1. மொழி ஆய்வின் எல்லை விரிவாக்கம்**

இந்திய மொழிகளில் தமிழ் பன்னாட்டு மொழி- ஈழம், மலேசியா, சிங்கப்பூர் முதலிய நாடுகளில் வழங்கும் தமிழையும் கணக்கிலெடுத்துக் கொள்ளுதல் (அரிய மொழிக் கூறுகள்- (உகரச்சுட்டு); ஒருங்கிணைப்பு முயற்சி- புதுமைமயப்படுத்தலுக்கு இன்றியமையாமை (எழுத்துச் சீர்திருத்தம் கணிப்பொறி).

**2. அ-கிளை மொழி ஆய்வு**

நாவில் தவழும் தமிழ்- அண்ணாமலைப் பல்கலைக்கழக முயற்சிகள் சில- நாடு தழுவிய அளவில் இட, இன, தொழிற்கலை மொழிகள் பற்றிய ஆய்வு, அளவீடு உடனடியாக மேற்கொள்ளப்படுதல் - அகர முதலிகளிலும் இடம் பெறாச் சொற்கள்- சொற்களஞ்சிய விரிவாக்கம் - புதிய மொழிக்கூறுகளின் புலப்பாடு - மிகுமக்களிடம் நன்கு தொடர்பு கொள்ள இவ்வாய்வுதுணை செய்தல்.

ஆ) கல்வெட்டு, செப்பேடு, காசு முதலிய புதைபொருட்சின்னங்கள் ஆகியவற்றின் மொழி ஆய்வு

அண்ணாமலை, கேரளம், ஈழம் சில முயற்சிகள்- பல கல்வெட்டுகள் படியெடுக்கப்படாமை-படியெடுக்கப்பட்டன பல மொழி ஆய்வு நோக்கில் ஆராயப்படாமை- எழுத்து வடிவங்கள், மக்கள் வழக்குமொழி, பலவகைச் சொல்வளம் முதலியன அறியத் துணை செய்தல்.

இ) இசைத்தமிழ், நாடகத்தமிழ், திரைத்தமிழ் முதலிய கலைசார் வடிவங்களின் மொழி ஆய்வு (இசைத்தமிழ் - அளபெடை..., நாடகத்தமிழ் சேரிமொழி..., திரைத்தமிழ் - பாட்டு, உரையாடல்...)

**3. மேடைத் தமிழாய்வு**

எழுத்து மொழி, பேச்சு மொழி இரண்டின் இணைவு நிலை-பொது மொழிப் பண்புகள்-குரல் ஏற்ற இறக்க ஒலியழுத்த வேறுபாடுகள்-மிகைச் சொற்கள்- புனைவுநிலைச் சொல்லாக்கங்கள் - தனித்து ஆராயப்படாமை இயக்க நிலை வேறுபாடு - விரிவான ஆய்வுக்களம்.

**4. ஒப்பியல் நோக்கியல் ஆய்வு**

அ) தமிழ் மொழிக்குள்ளேயே தொல்காப்பியத்தோடு சங்க இலக்கிய மொழி, சிலப்பதிகார மொழி, மணிமேகலை மொழி, பதினெண்கீழ்க்கணக்கு

மொழி முதலிய பல மொழிநிலை ஒப்பீடு-கேரளப் பல்கலைக்கழகம் பழந்தமிழ் நூல்களின் மொழியமைப்பைத் தனித்தனியே ஆராய்ந்துள்ளமை-இவ்வாய்வு ஒப்பாய்வுக்கும் வரலாற்றாய்வுக்கும் துணை செய்தல்.

ஆ) கால்டுவெல்லுக்குப் பிறகு திராவிட மொழிகளின் ஆய்வு விரிவாக்கம்-புதிய மொழிகள் அறியப்படுதல்- தனிமொழி ஆய்வுகள் நிகழ்தல்-ஒரு மொழியைப் பிறமொழியொடு ஒப்பிட்டும் உறழ்ந்தும் காணும் முயற்சிகள்-அண்ணாமலைப் பல்கலைக்கழகம் - திராவிட மொழியியற்கழகம்...-ஒப்பிலக்கண நோக்கில் தனித்தனிப் பகுதி முயற்சிகள்-முழுமையான ஒப்பிலக்கணம் உருவாகாமை-அனைத்துக் கருத்துக்களையும் திரட்டி அறிஞர் குழுவோ, நிறுவனமோ ஒப்பிலக்கணம் ஒன்றை உருவாக்குதல்.

இ) பொதுவாகத் திராவிடமொழிகளுக்கும் சிறப்பாகத் தமிழுக்கும் பிற இந்திய, அயல்நாட்டு மொழிகளோடு உள்ள உறவு பற்றிய ஆய்வு மராத்தி, சிந்தி, இந்தி... சித்திய அல்டெய்க், ஆப்பிரிக்க, எலமைட்டு, சப்பானிய ... மொழித் தொடர்புகள்-கால்டுவெல் முதல் பலர் - அறிஞர்களுடன் தொடர்பு தொடர்புள்ள மொழிகளைக் கற்கவும் ஆராயவும் தமிழகப் பல்கலைக்கழகங்கள், அரசு முதலியன தக்க ஆய்வாளர்களை வேண்டிய உதவியுடன் அனுப்புதல் ஒருங்கிணைப்பு முயற்சிகள் - மனித உறவுகள் விரிவும் செறிவும் பெறல்.

5. உலக அளவில் பல நாடுகளிலிருந்தும் பலவகையான நோக்கு நூல்கள் வெளிவருதல் - அவற்றில் தமிழ், தமிழர் தொடர்பான செய்திகள் இடம் பெறாமை - சில நூல்களில் பிழையான செய்திகள் இடம் பெற்றுள்ளமை

" Tamil: A ıanguage, also called kalingi, spoken by about 26500000 in Southern India and Northern Ceylon; a member of Tamil - Kurukh branch of the Dravidian family of language"

A Dictionary of Linguistics - Mario. A. Pei & Frank Gaynor Newyork 1954.

மொழிகள் தொடர்பாக உலகில் வெளிவந்துள்ள நோக்குநூல்களில் தமிழ் தொடர்பான சரியான செய்தி இடம் பெறச் செய்தல் - மொழி அறிஞர்களை உள்ளடக்கிய அதிகாரமுள்ள அரசுநிலைக் குழு அமர்த்தம் - நோக்கு நூல்களை நாடல் - உரிமை செய்தல்.

### ௬. பிறமொழி மேலாண்மை

தமிழில் பேச, எழுத, கற்கக் கூசும் போக்கு - வழக்காற்றில்: உரையாடல், குடும்ப நிகழ்ச்சி, பிறவினைகள் - கல்வியியல் - மழலையர் பள்ளி, மாநகராட்சிப் பள்ளி, அரசினர் கல்லூரிகள், கலைப் பாடங்கள், பட்டப்படிப்புவரை முதுநிலை, பொறியியல் மருத்துவம் இன்மை - ஆட்சித்துறைகளில் : ஆங்கிலேயர் ஆட்சியகன்று, தமிழை ஆட்சிமொழி, பயிற்றுமொழி ஆக்கும் சட்டங்கள் இயற்றியபின் ஆங்கில மோகம் வளர்தல் - “வழக்கெனப்படுவது உயர்ந்தோர் மேற்றே” - உயர்ந்தோர்’ நலன்பேணும் சமூக அமைப்பு - இவை பற்றி மிகக் குறைந்த அளவிலேயே ஆய்வு முயற்சிகள்-ஆராயும் முன்னுரிமையுடையோர் மொழியறிஞர்கள்.

### 7. ஆய்வுக்கு முடிவுரை இல்லை.

# சுவடியியல்

ம. இராசேந்திரன்

***முன்னுரை***

கால்களில் இரண்டைக் கைகளாக மாற்றிக்கொண்டு விலங்கினின்றும் மனிதன் வேறுபட்ட காலம் முதல் கருத்துப் புலப்படுத்தலும் கருத்துப்பதிவும் நடைபெற்று வந்திருக்கின்றன. அந்தந்த இடங்களின் இயற்கைச் சூழலுக்கேற்பக் கருத்துப்பதிவு செய்வதற்குரிய பொருள்கள் அமைந்திருக்கின்றன.

சுமேரியர்கள் பச்சைக்களிமண்ணையும் எகிப்தியர்கள் பேப்பிரசையும் ஆசியாவில் சில பகுதியினர் பார்ச்மெண் (Parchment) என்னும் விலங்கின் தோலையும் சீனர்கள் மூங்கிற்புத்தைகளையும் இந்தியா, இலங்கை, பர்மா போன்ற நாடுகளில் வாழ்ந்தவர்கள் பனை ஓலை அல்லது தொளிப்பனை ஓலைகளையும் கருத்துப்பதிவு செய்வதற்குரிய பொருள்களாகப் பயன்படுத்தி வந்தனர்.

ஐரோப்பிய காலனியாதிக்கத்திற்குப் பின்னரும் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்குப் பின்பும் இந்தந்த இடங்களின் இயற்கைச் சூழல் என்பது மறைந்து பொதுவான கருத்துப்பதிவு செய்தல்முறை பயன்பாட்டிற்கு வந்துள்ளது. தமிழகத்தில் ஐரோப்பியர் வருகைக்கு முன்னர் பெரும்பான்மையாகப் பயன்பாட்டிலிருந்து வந்த ஓலைச்சுவடிகளைப்பற்றியும் அதன் பின்னர் பயன்பாட்டிற்கு வந்துள்ள தாள் சுவடிகளைப் பற்றியுமான ஆய்வு வரலாற்றைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

***சுவடியியல்***

சுவடியியல் (Manuscriptology) என்பது சுவடிகளைப்பற்றி ஆராய்ந்தறிவதாகும் (Knowledge of the manuscripts) மேனு (Manu) + சுகிருப்சு ( Scriptus) எனும் சொற்களுக்குச் கையால் எழுதப்பட்டது என்பது பொருளாகும். எனவே சுவடியியல் ஓலைச்சுவடியும் தாள் சுவடியும் பற்றிய ஆய்வுகளில் அடங்குகின்றன. சுவடிகளைத் தொகுப்பது, பதிப்பிப்பது தொடர்பான ஆய்வுகளைச் சுவடியியல் என்று சுருக்கமாகக் கொள்ளலாம்.

## சுவடித்தொகுப்பு

திணைகளாகப் பிரிந்துகிடந்த அன்றைய தமிழகத்தில் வாழ்ந்த இனக்குழு மக்களிடம் நிலவிவந்த பாடல்களை அரசுருவாக்கம் நிகழ்ந்த பின்னர் தொகுத்திருக்கின்றனர். அதனைத் தொகுத்தோன் தொகுப்பித்தோன் கூற்று உறுதிப்படுத்துகிறது. அதன்பின்னர் சோழப் பேரரசு உருவானபோது பெருந்தத்துவங்களும் நிலைபெறத் தொடங்கியதற்கேற்பத் திருமுறைகள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. அதன் பின்னர் கிழக்கிந்தியக்கம்பெனி அலுவலர்களாக வந்த ஐரோப்பியர்கள் தங்களது ஆட்சியை நிலைநிறுத்தவேண்டித் தங்களின் ஆளுகைக்குட்பட்டவர்களைப் பற்றியும் எதிரானவர்களைப் பற்றியும் அறிந்தகொள்ள அவர்களது வாழ்க்கைமுறை அவர்களது முன்னோர்களின் வரலாறு ஆகியவற்றை அறிந்து கொள்வதற்காகப் பாதிரிமார்கள் தங்கள் மதத்தைப் பரப்புவதற்கு இங்குள்ள மொழிகளைக் கற்றறிந்து தங்களது மதத்தை இங்குள்ள மொழிகளில் எடுத்துக்கூறுவதற்குச் சுவடிகளைத் தொகுத்தனர்; சிலர் சுவடிகளிலும் எழுதினர். அவ்வாறு வீரமாமுனிவர் எழுதிய தேம்பாவணி ஓலைச்சுவடி ஆவூரில் கிடைத்தது. அதனை அப்போது சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாக விளங்கிய எம். வால்டர் எலியட் என்பவர் விலைக்குவாங்கி பாதிரிமார்களிடம் ஒப்படைத்துவிட்டார். சீகன்பால்கு என்பவர் தரங்கம்பாடியிலிருந்து தொகுத்த சுவடிகள் Halle நூலகத்திற்கும் மெக்கன்சியின் சுவடிகளில் ஒருபகுதி இந்திய அலுவலக நூலகத்திற்கும் எடுத்துச்செல்லப்பட்டன. சென்னை, கல்விச்சங்கத்தின் பொறுப்பாளராக விளங்கிய எல்லீசர், முத்துசாமிப்பிள்ளை என்பவரைத் தமிழகம் முழுவதும் அனுப்பிச் சுவடிகளைத் தொகுக்கச் செய்திருக்கிறார்.

அவ்வாறு காலம் காலமாகப் பலராலும் பல்வேறு நிலையிலும் தொகுக்கப்பட்ட சுவடிகளும் எழுதப்பட்ட சுவடிகளும் மடங்களிலும் புலவர்கள், ஜமீன்தார்கள், கிறித்தவப் பாதிரிமார்கள், கம்பெனி அலுவலர்கள் ஆகியோரின் இல்லங்களிலும் நூலகங்களிலும் ஆய்வு நிறுவனங்களிலுமாக இடம்பெற்றுள்ளன. மேலும் இந்தியாவிற்கு வெளியே உலக நாடுகளில் முப்பத்தாறு இடங்களில் தமிழ்ச்சுவடிகள் இடம்பெற்றுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## சுவடிப்பதிப்பு

பைபிள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதன் பின்னர் கிறித்தவமதப் பிரச்சாரம் ஈழத்திலும் தமிழகத்திலும் தீவிரமடைந்தது. 1835 ஆம் ஆண்டிற்குப்

பின்னர் சுதேசிகளும் அச்சகம் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். கிறித்தவமதப் பிரச்சாரத் துண்டறிக்கைகள் அச்சிடப்பட்டு ஆயிரக்கணக்கில் மக்களிடம் வழங்கப்பட்டன. அவற்றிற்கு ஈழத்தமிழ்ச் சைவர்கள் பதிலிறுக்க வேண்டியிருந்தனர். பாடசாலை, கல்லூரிகளில் பழைய நூல்கள் சேர்க்கப்பட்டன. பாதிரிமார்களின் மொழியாராய்ச்சிகள் தமிழர்களின் பழம்பெருமையைப் பேசுவதற்கு வாய்ப்பை ஏற்படுத்தித்தந்தன. இந்தப் பின்னணியில் ஆறுமுகநாவலர் சொந்தத்தில் அச்சகம் ஒன்றை நிறுவிக் கிறித்துவ மதத்திறகு எதிராகத் துண்டுப்பிரசுரம் அச்சடித்து வெளியிட்டார். கல்வி நிறுவனங்களுக்குரிய தமிழின் பழைய நூல்களைச் சுவடிகளிலிருந்து பலரும் தேடியெடுத்துப் பதிப்பிக்கத் தொடங்கினர். ஆகவே 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சுவடிப் பதிப்புகள் அதிகமாக வெளிவரத்தொடங்கின.

## இன்றைய நிலையில் சுவடியியல்

இன்றைய நிலையில் சுவடியியல் 1. சுவடி தொகுத்தல், 2. அட்டவணை தயாரித்தல், 3. பதிப்பித்தல் ஆகிய மூன்று வகையான ஆய்வுப்பணிகளைக் கொண்டுள்ளது.

சுவடி தொகுத்தலில் மேலைநாட்டாரும் நமது நாட்டில் தனிப்பட்டவர்களும் ஈடுபட்ட நிலைமாறி இப்போது தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, மாவட்டம் தோறும் தொல்பொருள் அலுவலர்களைப் பணியிலமர்த்திச் சுவடிகளைத் தொகுத்து வருகிறது. தமிழ்ப்பல்கலைக்கழகம் ஓலைச்சுவடிகளுக்கும் தாள் சுவடிகளுக்கும் தனித்தனித் துறைகளைக் கொண்டுள்ளது. அவற்றின்வழி சுவடிகளைத் தொகுத்து வருகிறது; உலக நாடுகளில் உள்ள ஓலைச்சுடிகள் அனைத்திற்கும் அட்டவணை ஒன்றைக் கணிப்பொறி வழியே தயாரித்துள்ளது. சுவடிப்பதிப்புகளை வெளியிட்டும் வருகிறது. இதற்கும் முன்பாக 1961 ஆம் ஆண்டு கும்பகோணம் கல்லூரியில் தமிழ்த்துறையில் விரிவுரையாளராகப் பணியாற்றிவந்த திரு ஏ. கிருட்டினமூர்த்தி என்பவர் ஐரோப்பிய நாடுகளில் இடம்பெற்றுள்ள தமிழ்ச்சுவடிகள் பற்றிய அட்டவணை ஒன்றை ஐந்து தொகுதிகளில் தயாரித்துள்ளார். உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், ஆசியவியல் ஆய்வு நிறுவனம், மதுரைப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம் சுவடி நூலகம், பாண்டிச்சேரி இந்திய இயல் ஆய்வுக்கழகம், தஞ்சை சரசுவதிமகால் நூலகம், சென்னை உ.வே.சா. நூலகம் ஆகியவையும் சுவடியியல் ஆய்வுப்பணிகளில் ஈடுபட்டு வருகின்றன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 'சுவடியியல் பயிற்சி வகுப்பினை நடத்தி இளைஞர்களை இத்துறையில் ஈடுபடச் செய்துவருகிறது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழிலக்கியத்துறையின் முதுகலை மாணவர்களுக்குரிய பாடத்திட்டத்தில் 'கல்வெட்டுகளும் சுவடிகளும் பண்பாடும் எனும் தாள் இடம்பெற்றுள்ளது. தமிழ்ப் பல்கலைக்கழகம், பல்கலைக்கழக நல்கைக்குழுவின் உதவியுடனும் தேசிய ஆவணக் காப்பகம் ICHR, ஆகியவற்றின் உதவியுடனும் ஓலை, மற்றும் தாள் சுவடிகளைப்பற்றிக் கருத்தரங்குகளும் ஆய்வுப்பட்டறையும் நடத்தி வருகிறது. தன்னாட்சிபெற்ற திண்டுக்கல் G.T.N. கலைக்கல்லூரியில் இளங்கலை (B.A) வரலாறு படிக்கின்ற மாணவர்களுக்கு மூன்றாமாண்டில் அரிய கையெழுத்துத்தாள் சுவடிகள் பற்றிய தாள் ஒன்று வைக்கப்பட்டுள்ளது. மதுரை காமராசர் பல்கலைக்கழகம் தாம் தொகுத்துவைத்துள்ள சுவடிகளைப் பற்றிய ஆய்வினைத் தொடர்வதற்குப் பல்கலைக்கழக நிதியுதவியைப் பெற்றுவருகிறது. இப்போது பதிப்பிக்கப்பட்டுவரும் சுவடிப்பதிப்புகளும் சமுதாயக் கண்ணோட்டத்துடன் காணப்படுகின்றன.

இந்த வகையில் சுவடியியல் ஆய்வு என்பது இன்றைய நிலையில் வளர்ச்சிப் போக்கினை உடையதாகவே உள்ளது.

**மேம்பாட்டிற்கான வழிவகைகள்**

1. தமிழ்ச் சுவடிகள் உலகநாடுகள் உட்பட எங்கெங்கு உள்ளனவோ அவற்றிற்கு விவர அட்டவணை கணிப்பொறியில் தயாரிக்கப்படுதல் வேண்டும். மேலும் அகரவரிசை, பொருள் வரிசை அட்டவணைகளும் தயாரிக்கப்படுதல் வேண்டும்.

2. தமிழ்ச்சுவடிகள் அனைத்தையும் நுண்படம் (Microfilm) எடுத்து ஆய்வாளர்களுக்குப் பயன்தரும் வகையில் தமிழகத்தில் ஓரிடத்தில் அமைக்க வேண்டும்.

3. உலகநாடுகளில் இதுவரை அறியப்படாமல் உள்ள தமிழ்ச்சுவடிகளைத் தக்கவரை அனுப்பிப் பட்டியலிடச் செய்தல் வேண்டும்.

4. தனியாரிடமிருந்தும் மத நிறுவனங்களிடமிருந்தும் அரசு ஆணையிட்டுச் சுவடிகளைப் பெற்றுத் தொகுத்தல் வேண்டும்.

5. சுவடிப்பதிப்புக்குழு ஒன்று அமைத்து, தமிழகத்தின் பல்வேறு சுவடி ஆய்வு நிறுவனங்களையும் நூலகங்களையும் ஒருங்கிணைக்க வேண்டும். அதன்வழி ஒரே சுவடியை இருவேறு நிறுவனம் பதிப்பிப்பது தவிர்க்கப்படுதல் வேண்டும்.

6. சுவடிகளைக் குளிர் அறையில் வைத்துப் பாதுகாத்திட ஆவனசெய்தல் வேண்டும்.

7. தமிழில் இதுவரை அச்சான நூல்களுக்குரிய பட்டியல் முழுமையாக வெளிவரவில்லை. தமிழ் வளர்ச்சித்துறை ஆவணக்காப்பகப் பதிவிற்கு வந்த நூல்களின் பட்டியலையே வெளியிட்டு வருகிறது. அதுவும் அண்மைக்காலத்திற்கு உரியவை இன்னும் வெளியிடப்படவில்லை. எனவே அச்சான தமிழ் நூல்கள் இடம்பெறும் நூலகங்கள் அனைத்திலிருந்தும் பட்டியல் தயாரிக்கப்பட்டு, கணிப்பொறி வழி அகரவரிசைப்பட்டியல் தயாரிக்கப்பட வேண்டும். அப்போதுதான் இதுவரை அச்சாகாத சுவடிகளை இனம் கண்டு பதிப்பிற்கு எடுத்துக்கொள்ள முடியும்.

8. இதுவரை வெளிவந்துள்ள சுவடி விவர அட்டவணைகளில் காணப்படும் பிழைகளைக் களைந்திட முயற்சி மேற்கொள்ளப்பட வேண்டும் (சான்று உ.வே.சா. நினைவுமஞ்சரி 1, பக். 37-42 'மாவிந்தபுராணம்' அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை).

9. தமிழில் இதுவரை அச்சாகாத சுவடிகளின் பட்டியல் ஒன்று தயாரிக்கப்பட வேண்டும்.

10. தமிழ்க் கலைக்களஞ்சியங்கள், பேரகராதி, அகராதி போன்ற தயாரிப்புகளில் அச்சாகாத சுவடிகளைப் பற்றிய செய்திகளையும் இடம்பெறச் செய்தல் வேண்டும்.

11. சுவடி நூலகங்களிலிருந்து வெளிவந்து தற்போது நின்றுபோன பல பருவ இதழ்களைத் தொடர்ந்து வெளிவரச் செய்தல் வேண்டும்.

12. நாடி சோதிடம் போன்ற சுவடி மோசடிகளைத் தவிர்க்க அரசு முன்வரவேண்டும்.

13. வெளிநாடுகளில் உள்ள தமிழ்ச்சுவடிகளைத் திரும்பப் பெற்றிட ஆவன செய்திட வேண்டும்.

14. தமிழக அரசியல், சமுதாயம், பொருளாதாரம், இலக்கியம், பண்பாடு, வரலாறு தொடர்பான பிறமொழிச் சுவடிகளைத் தமிழில் மொழி பெயர்க்கவேண்டும்.

15. கல்லூரி, பல்கலைக்கழக வரலாறு, இலக்கியம் தொடர்பான பாடத்திட்டங்களில் சுவடியியல் சேர்க்கப்படவேண்டும்.

16. இளைஞர்களுக்குச் சுவடியியலில் பயிற்சி வழங்கிடப் போதிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

17. பல்வேறு ஆய்வுகளுக்கும் பயன்படும் வகையிலான சுவடிகளை உடனடியாக வெளிக்கொணர்தல் வேண்டும்.

**முடிவுரை**

தமிழக அரசியல் சமுதாயம், பொருளாதாரம் இலக்கிய வரலாற்றில் விடுபட்ட கணினிகளை விளக்கும் வகையிலான பல்வேறு சுவடிகள் ஆய்வாளர்களுக்குப் பயன்படா வகையில் உள்ளன. அதனால் சுவடியியல் பற்றிய விழிப்புணர்வை உண்டாக்குவதும் உருவாக்குவதும் தற்கால ஆய்விற்கு உடனடித் தேவையாகும்.

# இக்கால இலக்கிய ஆய்வு

வீ. அரசு

மொழி மற்றும் இலக்கிய மேம்பாடுகளை மதிப்பீடு செய்வதும் அவை மேம்பாடு அடையப் புதிய முறைகள் பற்றி விவாதிப்பதும் ஒரு தேவை.

தமிழின் ஆய்வு மரபு தொகுப்புப் பணியோடு தொடங்குகிறது. தொகுப்புப் பணியின் அடுத்த கட்டமாக உரையாசிரியர்களின் மரபைக் கூறலாம். தொகுப்பிற்கும் உரையாசிரியர்களுக்கும் நெருக்கமான தொடர்பு இருந்திருக்க வேண்டும். ஆனால் அது தொடர்பான விவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. இருபதாம் நூற்றாண்டுக் கண்ணோட்டத்தில் மேற்குறித்த பணிகள் துணை ஆய்வுகள் அல்லது ஆய்விற்கு உதவியவை என்று சொல்லலாம். இங்குப் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்களின் கருத்து கவனத்திற்குரியது.

ஐரோப்பிய நிறுவனங்களும் மற்றும் நமது பல்கலைக்கழகங்களும் மேற்குறித்த தொகுப்புப் பணியில் சிறப்பாகச் செயல்பட்டுள்ளன. ஆனால் நமது பல்கலைக்கழகங்களில் கருத்தாக்க மயம் (Theorisation) என்பது குறிப்பிடத் தக்க அளவில் நடைபெறவில்லை என்று கூறலாம். தக்காணப் பல்கலைக்கழகம் பேராசிரியர் சங்காளியா போன்றவர்களைக் கொண்டு இந்தியவியல் துறைக்குப் பல்வேறு கருத்தாக்கமயங்களை உருவாக்கியுள்ளது. நேரு பல்கலைக்கழகம் இவ்வகையில் உலகளாவிய நிலையில் பெரிதும் மதிக்கப்படுகிறது. பேராசிரியர்கள் கோசாம்பி, இராகுல சங்கிருத்தியாயன் போன்றவர்கள் இந்தியவியலுக்கு வழங்கிய கொடையைப் போல மேற்குறித்த பல்கலைக்கழகங்கள் பல்வேறு கருத்தாக்க மயங்களை உருவாக்கும் சூழலைப் பெற்றுள்ளன.

இந்தப் பின்னணியில் தமிழகப் பல்கலைக்கழகங்கள் தமிழியல் தொடர்பான துணை ஆய்வில் ஓரளவிற்குச் செய்ததைப் போல் கருத்தாக்க மயம் உருவாக்கும் ஆய்வில் குறிப்பிடத்தக்கப் பங்காற்றியதாகக் கூற முடியாது. இவ்வகையில் பேராசிரியர்கள் தெ.பொ.மீ., வி.ஐ. சுப்பிரமணியம் ஆகிய அறிஞர்கள் துணைவேந்தர்கள் பொறுப்பிலிருந்து தமிழியலுக்கு ஆற்றியவை குறிப்பிடத் தக்கவை.

சமண, பௌத்த மதங்களின் அடிப்படையில் உருப்பெற்ற தொகுப்பு மரபு; முன்னோர் மொழி பொன்னே போல் போற்றும் உரையாசிரியர்கள் மரபு; ஐரோப்பிய நிறுவனங்களின் தேவை அடிப்படையில் உருப்பெற்ற தொகுப்பு மரபு; இருபதாம் நூற்றாண்டு ஆராய்ச்சி மரபு என்று இன்றைய கண்ணோட்டத்தில் தமிழியல் ஆய்வு வரலாற்றைக் கூறலாம்.

இருபதாம் நூற்றாண்டின் மரபில் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையின் 'நூற்றொகை விளக்கம்' (1888), வையாபுரிப்பிள்ளையின் திராவிட மொழிகளின் ஆராய்ச்சி (1962) ஆகிய நூல்கள் கவனத்துக்குரியன.

இங்கு மேற்குறித்த தன்மைகள் பற்றிய மதிப்பீடு நமது நோக்கமன்று. இருபதாம் நூற்றாண்டில் உருப்பெற்று வளர்ந்துவரும் நவீன வடிவங்களான புனைகதையியல், நாடகங்கள் (Drama Scripts) விளக்க, வர்ணனைக் கட்டுரைகள் (எ-டு. கி.ரா.வின் கரிசல்காட்டுக் கடுதாசிகள்) கவிதைகள் ஆகியவை குறித்து செய்யப்பட்டுள்ள ஆய்வுகள் நம் மதிப்பீட்டுக்குரியவை. விரிவு கருதிப் புனைகதையியல் தொடர்பான ஆய்வுகளை மட்டும் இங்கு கவனத்தில் கொள்ளலாம்.

இருபதாம் நூற்றாண்டுப் புனைகதை உருவாக்கங்களுக்குப் பின்கண்ட தன்மைகளை அடிப்படையாகக் கொள்ளலாம்.

1. மக்கள் தொடர்பு அடிப்படையில் (Mass Media) உருப்பெற்ற புதிய சுவடிக் கூறுகள்.
2. அச்சுக் கருவிக்கும் சமூகத்தில் அதன் தேவைக்கும் ஏற்ப உருப்பெற்ற தன்மைகள்.
3. படைப்பாக்க முறை (Creative Process), உற்பத்தி முறைமை, நுகர்வுத்தன்மை, சென்றடையும் வாயில்கள் ஆகிய அனைத்திலும் இதுவரை உருப்பெற்றுவந்த முறைமையிலிருந்து முற்றிலும் வேறுபட்ட புதிய தன்மைகளைப் பெற்றிருப்பவை.

புனைகதை பற்றி மேற்கொள்ளும் ஆய்வுமுறைமையியல் மேற்கண்ட அடிப்படைகளிலிருந்துதான் உருவாக வேண்டும். படைப்பாக்கம் என்பது காலம் காலமாக அந்தந்தச் சூழலுக்கு ஏற்ப உருப்பெற்று வரும் மரபுத் தொடர்ச்சி; இருந்தாலும் அவை வெளிப்படுத்தும் வடிவ முறையும் உற்பத்தி முறையும்

காலத்திற்கும் காலம் மாறுபட்டவை. எனவே, இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் பற்றிய ஆய்வு என்பதும் அதற்கு முற்பட்ட இலக்கியங்கள் பற்றிய ஆய்வு என்பதும் அடிப்படையில் வேறுபட்டவை. இன்றைய சமூகப் பொருளாதாரத் தன்மைகள் பற்றிய ஆய்வுக் கண்ணோட்டமின்றி இன்றைய இலக்கியங்களை ஆய்வு செய்ய இயலாது. இன்றைய சமூகம் பற்றிய ஆய்வு பன்முகப்பட்டதும் ஆழமானதும் ஆகும். கடந்தகாலச் சமூகம் பற்றிய ஆய்வுக்குப் பல்வேறு கருதுகோள்கள் சிறப்பாக உருவாக்கப்பட்டுள்ளன. அவற்றின் அடிப்படையில் இருபதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட இலக்கியங்களை மதிப்பீடு செய்ய இயலும். ஆனால் இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்களின் மேற்குறிப்பிட்ட அடிப்படைகள் பற்றிய அக்கறையின்றிப் பல்கலைக்கழக ஆய்வுகள் நடைபெற்று வருவதைக் காண முடிகிறது. இந்தப் பின்னணியில் புனைகதையியல் பற்றிய ஆய்வு மிகவும் எளிதானது' என்ற பாமர அணுகுமுறை (Lay-man approach) மற்றும் நவீனத் தன்மைகள் பற்றிய பயிற்சியில்லாமல் புனைகதையியல் பற்றிப் பேசுதல் எழுதுதல் ஆகிய தன்மைகளும் தமிழ் ஆராய்ச்சிச் சூழலில் காண முடிகிறது. தமிழ்ப் புனைகதையியல் பற்றிய ஆய்வினைக் கீழ்க்காணும் வகையில் பாகுபாடு செய்து கொள்ளலாம்.

1. பல்கலைக்கழகங்களின் தொடர்பின்றி இவ்வகை ஆய்வுகளில் ஈடுபட்டு வருவோர்.

2. தமிழகப் பல்கலைக்கழக ஆய்வுப் பயிற்சி அடிப்படையில் உருவாகி வருவோர்.

3. இலங்கை ஆய்வாளர்கள்.

இவற்றில், தமிழகப் பல்கலைக்கழக ஆய்வுப் பயிற்சியில் இதுவரை புனைகதையியல் பற்றி உருப்பெற்றுள்ள ஆய்வு முறையியலை நாம் மதிப்பீடு செய்ய முயலலாம். இத்தன்மையின் பொதுக் கூறுகளாகப் பின்கண்டவற்றைக் காண முடிகிறது.

1. அச்சு வடிவம், அதன் உருவாக்கமான புனைகதை, புனைகதைவழி உருப்பெறும் இதழியல், அப்போக்குகளின் நவீனத் தன்மைகள் ஆகியவற்றின் அடிப்படையில் ஆராய்ச்சி முறைமைகளைக் கைக்கொள்ளும் போக்கு இன்மை.

2. இன்றைய அச்சு வடிவத்தின் தொழில் தன்மை, மற்றும் அதனால்

உருவாக்கப்படும் வணிக எழுத்துக்கள் என்ற அணுகுமுறையின்றி ஒட்டுமொத்தமாக அனைத்தையும் ஒரே கண்ணோட்டத்தில் அணுகும் முறைமை.

3. ஐரோப்பிய புனைகதையியல் பற்றிய ஆய்வு முறைமைகளை அப்படியே தமிழ்ச் சூழலுக்கும் பயன்படுத்தும் போக்கு ஆகியவையாகும்.

மேற்குறித்த தன்மைகள் அடிப்படையில் தமிழகப் பல்கலைக்கழகப் பயிற்சியில் உருவாகியோர் கைக்கொள்ளும் ஆய்வு முறைமையியல் மறுபரிசீலனைக்குரியதாகும். இல்லையேல் நவீன இலக்கிய வளர்ச்சியில் பிற இந்திய மொழிகளை விட (வங்காளம், மலையாளம், கன்னடம்) தமிழ் ஏறக்குறைய முப்பதாண்டுகள் பின்தங்கியிருக்கும் நிலைமை; தமிழகப் பல்கலைக்கழகப் புனைகதையியல் ஆராய்ச்சிக்கும் உருவாக வாய்ப்புண்டு.

இந்தியா போன்ற நாடுகளில் ஆராய்ச்சி என்பது 'பணிந்து போதல்', 'தன்னிலை இழத்தல்', 'வெகுசன நுகர்வுக்குப் பலியாதல்' போன்ற தன்மைகளைப் பெற்றிருக்கிறது. நவீன சமுகம் பற்றிய உணர்வுடன் செய்ய வேண்டிய இருபதாம் நூற்றாண்டுப் புனைகதையியல் ஆராய்ச்சியிலும் மேற்குறித்த தன்மைகள், தமிழகப்பல்கலைக்கழகங்களில் ஆழமாக வேரூன்றியுள்ளது. அந்நிலையிலிருந்து குணரீதியாகவும் அளவு ரீதியாகவும் விடுபடும் தேவை நம்முன் உள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. போராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் தமது 'திராவிட மொழிகளில் *ஆராய்ச்சி'* என்ற நூலில், அனுபந்தம் இரண்டில், இலக்கிய ஆராய்ச்சி பற்றி கொடுத்துள்ள பட்டியலில் கீழ்க்காணும் வகையில் பாகுபாடு, இலக்கிய சரித்திரம், ஒப்பு நோக்கு ஆராய்ச்சி, சரித்திரக் குறிப்புக்களின் ஆராய்ச்சி ஆகியவற்றை இலக்கியத் தலைமை ஆய்வுகளாகக் குறிப்பிடுகிறார்.

   நூல் பட்டிகை, தொகை அல்லது திரட்டு, இலக்கியத் துணைநூல், செய்யுள் முதல் குறிப்பு அகராதி, பொருள் அகராதி, இலக்கிய அகராதி, கல்விப் பயிற்சி ஆராய்ச்சி ஆகியவற்றை இலக்கியத்துணை ஆராய்ச்சியாகக் குறிப்பிடுகிறார்.

2. அபிதானகோசம் (1902) முதல் உருப்பெற்ற அகராதி, கலைக்களஞ்சியங்கள் சென்னைப் பல்கலைக்கழகங்கள் மற்றும் அண்ணாமலை, கேரள, மதுரைப் பல்கலைக்கழகம் ஆகியவை உருவாக்கிய துணைஆய்வு நூல்களை இங்குக் குறிப்பிடலாம்.

இராஜம் & கோ., உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் ஆகியவையும் இப்பணியில் சிறப்பாகச் செயல்பட்டுள்ளன.

3. தெ.பொ.மீ. மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் உருவாக்கிய ஆய்வுப் பலன்கள், உலக அளவில் மதிக்கப்படும் சூழலில் உள்ளது. வி.ஐ. சுப்பிரமணியம் உருவாக்கியுள்ள அனைத்திந்திய திராவிட மொழிகள் நிறுவனம், தமிழ்நாடு, ஆந்திரம், கன்னடம், கேரளம் ஆகிய மாநிலங்களை உள்ளடக்கிய திராவிடப் பல்கலைக்கழகம் (ஓசூர் அருகில்), தமிழ்ப் பல்கலைக்கழகம் உருவாக்கியுள்ள பல ஆய்வுப் புலன்கள் ஆகியவை வரலாற்றில் குறிப்பிடத்தக்கவை.

4. அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள, 'பெண்கள் படைப்பில் பெண்கள்' ஆய்வு நூலை இவ்வகையில் குறிப்பிடலாம்.

# பழந்தமிழ் நூல்களின் காலம் தொடர்பான ஆய்வுகள்

கு. மோகனராசு

**நுழைவாயில்**

ஒரு நூல் பழமையானதாக இருந்தால்தான் அதற்குப் பெருமை என்றில்லை. ஆனால் ஒரு நூலின் உண்மைப் பொருள் காணவும், பல்வேறு சிந்தனைகளின் வளர்ச்சி வரலாற்றை முறைப்படுத்தியுரைக்கவும் தாக்கங்களைப் பிரித்தறியவும் கால ஆய்வு தேவை என்பதை யாவரும் மறுக்க முடியாது.

பழந்தமிழ் இலக்கியங்களின் காலம் தொடர்பாக இதுவரை நடைபெற்றுள்ள மிகப்பல ஆய்வுகள் நம்பகத்தன்மை உடையனவாக இல்லை.

*தொல்காப்பிய காலத்தின் மேல் எல்லை கி.மு. 12000; கீழ் எல்லை கி.பி. 500-கால இடைவெளி 12500 ஆண்டுகள்; திருவள்ளுவர் காலத்தின் மேல் எல்லை கி.மு. 6027; கீழ்எல்லை கி.பி. 1000 - கால இடைவெளி 7027 ஆண்டுகள்; இவற்றிற்கு இடையில்தான் சங்கத் தொகை நூல்களின் காலங்கள்!*

தொல்காப்பியம், சங்கத் தொகை நூல்கள், திருக்குறள் ஆகியவற்றிற்கிடையே தொடர்பு நிலைக் காலம் காண்பதில் கூடத் தடுமாற்றங்கள். எல்லா வகையான வைப்பு முறைகளையும் கூறியாகிவிட்டது.

எனினும், அண்மைக் காலங்களில் 'சிக்கல்கள்' மெல்ல மெல்ல அவிழ்க்கப்பட்டும் வருகின்றன. இது, திட்டமிட்டு விரைவுபடுத்தப்பட வேண்டும்.

இந்த எடுத்துரையில், இதுவரை வந்துள்ள கால ஆய்வுகள் தொடர்பான சில கருத்துகள் முன்வைக்கப்படுகின்றன.

**கால ஆய்வுக்குக் கொண்ட சான்றுகள்**

1. பனம்பாரனார் சிறப்புப் பாயிரம்
2. இறையனார் அகப்பொருள் உரை (முச்சங்கம், கடல்கோள் போன்றவை தொடர்பான கருத்துகள்);
3. செங்கோன் தரைச் செலவு
4. திருவள்ளுவமாலை

5. இலங்கை மகாவமிசம்
6. உரையாசிரியர்களின் உரைகள்
7. இராமாயணம், பாரதம் போன்றவற்றில் வரும் தமிழகம் தொடர்பான குறிப்புகள்
8. மேலை நாட்டவர் எழுதிய தமிழகம் சார்ந்த குறிப்புகள்
9. வடமொழி இலக்கண இலக்கியங்கள் காலம் தொடர்பான மேலைநாட்டவர் கருத்துகள்
10. தமிழ் -பிராமிக் கல்வெட்டுகள்;
11. அகத்தியர், தொல்காப்பியர், திருவள்ளுவர் முதலியோரைப் பற்றி வழங்கும் கதைகள்
12. புராணச் செய்திகள்
13. தமிழக இந்திய வரலாற்றுச் செய்திகள்
14. சோதிடக் குறிப்புகள்
15. கருத்து ஒப்புமைகள்: அ. தொல்காப்பியம் - சங்கத் தொகை நூல்கள்,

    ஆ) தொல்காப்பியம்- திருக்குறள், இ) சங்கத் தொகை நூல்கள்- திருக்குறள் ஈ) பழந்தமிழ் நூல்கள் - வடமொழி நூல்கள்;
16. கருத்து வேற்றுமைகள் (குறிப்பு 15இல் உள்ள பகுப்புகள்)
17. சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இவற்றில் காணும் திருக்குறளின் தாக்கம்.
18. அரசர்கள் புலவர்கள் தொடர்பான தொடர்பு நிலைக் காலங்கள்;
19. பெருமுத்தரையர் காலம்
20. பாரதப் போரும் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனும்;
21. பிறநாட்டவர் வாணிகமும் கலப்பும்.
22. தோமையரின் மலைப் பொழிவு;

23. சமண பௌத்தமதக் கருத்துகளின் தாக்கங்கள் உள்ளமை இல்லாமை.

24. வடவர், தமிழர் இடையிலான மொழி- பண்பாட்டுத் தாக்கங்கள்; (அ) வடமொழிச் சொற்களின் தாக்கத்தின் அளவு, (ஆ) ஆதிபகவன் ஒருவந்தம், (இ) வருணப் பாகுபாட்டுத் தாக்கத்தின் அளவு, (ஈ) மறையோர் மன்றல், (உ) சூதர், மாகதர், வேதாளிகர், (ஊ) தாபதர், (எ) உடன்கட்டை ஏறுதல்; (ஏ) சமயக் கருத்துகள், (ஐ) ஓரை, (ஓ) அறம் பொருள் இன்பம் - போன்றவை தொடர்பான கருத்துகள்.

25. இலக்கிய மரபுகள்: (அ) பாயிரம் பாடும் மரபு, (ஆ) கடவுள் வாழ்த்துப் பாடும் மரபு, (இ) யாப்பு வடிவம்/வகைகள், (ஈ) உவமை-உருவகம், (உ)அறம்பொருள் இன்பம்-அறம்பொருள் இன்பம் வீடு, (ஊ) அகம் புறம் - அறம் பொருள் இன்பம், (எ) மேற்கணக்கு - கீழ்க்கணக்கு போன்றன.

26. இலக்கண மரபின் வளர்ச்சி/வீழ்ச்சி;

27. புதிய சொல்லாட்சிகள்;

28. வழக்கிழந்த சொற்கள்;

29. பனைக்கொடி- புணர்ச்சி விதிவழி அறியப்படும் செய்தி;

30. தென்னை-ஒட்டகம்-மயிற்பீலி-காவல் மரம்-நடுகல்.

31. பல்துறை அடிப்படையிலான வளர்ச்சி நிலைகள்;

32. அறச் சிந்தனைகளின் வளர்ச்சி நிலை;

33. பரத்தையர்-சொல்லாட்சி/ஏற்பும் எதிர்ப்பும்;

34. தொல்காப்பியர் தரும் இலக்கண வரையறைகளும் தொல்காப்பியத்தில் காணும் முரண்பாடுகளும்;

35. தொல்காப்பியர் கூறாமல் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ள இலக்கணக் கூறுகள்;

36. புறம் 34-ஆம் பாடல் சுட்டும் 'அறம்'

37. சில 'இல்லாமைகள்'

இவை அனைத்தையும் தம் கால ஆய்வுக்குச் சான்றுகளாகக் கொண்டவர் ஒருவரும் இல்லை.

**கால ஆய்வு மேற்கொண்டவர்களின் நோக்குகள்**

1. திராவிடர்களுக்குப் பண்பாட்டை வழங்கியவர்களே ஆரியர்கள்தான் என்னும் உணர்வோடு, பழந்தமிழ் நூல்கள் அனைத்தும் வடமொழி நூல்களிருந்து கடன் பெற்றனவே என நிறுவ வேண்டும்;

2. ஆரியரின் வருகைக்கு முன்னரே தமிழர்கள் சிறந்த பண்பாடு உடையவர்களாக விளங்கினர் என்னும் உணர்வோடு, பழந்தமிழ் நூல்களில் ஆரியத் தாக்கங்கள் இல்லை என நிறுவ வேண்டும்;

3. திருக்குறள்தான் உலகில் எழுதப்பட்ட முதல் மறை நூல் என்பதை நிலை நாட்ட வேண்டும்;

4. தாம் விரும்பும் நூலையே காலத்தால் முற்பட்டது எனக் காட்ட வேண்டும்.

5. தமக்கு 'வேண்டாத கருத்தைச் சொன்னவரை மறுத்துரைக்க வேண்டும்;

6. தமக்கு 'வேண்டிய கருத்து' சொன்னவர்க்கு அரணாக வேண்டும்;

7. ஏதேனும் ஒரு புதிய கருத்தைச் சொல்ல வேண்டும்;

8. அடிப்படைச் சிக்கல்களுக்குத் தீர்வு காணவேண்டும்;

9. பெரும்பாலோர் என்ன கருதுகின்றார்களோ அதனைத் தழுவிச் செல்ல வேண்டும்;

10. தம் முன் முடிவுக்கு ஏற்ப, ஊக்கத்துக்கு ஏற்ப ஒரு நூலின் காலத்தைக் கொண்டுவந்து விட வேண்டும்.

11. தொல்காப்பியர், வள்ளுவர் போன்ற பெருமைக்குரியவர்கள் திராவிடர்கள் அல்லர், ஆரியர்களே என்பதை வலியுறுத்த வேண்டும்.

12. ஏதேனும் ஒரு குறிப்பிட்ட காலத்தை வரையறுத்தாக வேண்டும்.

**ஆய்வுப்போக்குகள்**

1. முன்னர்ச் சுட்டிய சான்றுகள் ஒன்றிரண்டையோ ஒரு சிலவற்றையோ மையமிட்டே ஆய்வுகள் மேற்கொளளப்பட்டுள்ளன.

2. விருப்பு வெறுப்புகளின் அடிப்படையிலேயே மிகப் பெரும்பாலான கால ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இப்போக்கினால் 1. வேண்டாத முடிவு தந்தவர்களைத் தூற்றுதல், வேண்டிய முடிவு தந்தவர்களைப்

போற்றுதல் 2. முடிவுகளை (?) ஆராயாமல் ஏற்றல் 3. ஒரு முன் முடிவு வைத்துக்கொண்டு அதற்குச் சான்றுகளைத் தேடுதல் 4. வலுவற்ற சான்றுகளை வலுவுடையனபோல் காட்ட முனைதல் 5. தம் முடிவுக்குச் சார்புடைய கருத்துகளை மட்டுமே மேற்கோள்களாக்கி, எதிரான கருத்துகளைக் கண்டுங் காணாது விட்டு விடுதல்; 6. நேரடியான பொருளைத் திரித்துக் காட்ட முனைதல் 7. ஒரே செய்தியை அவரவர் நோக்கிற்கேற்பக் கொள்ளல்; 8. கர்ண பரம்பரைக் கதைகள் ஆய்வுக்கு உதவா எனக்கூறி, அவற்றுள் தமக்குச் சாதகமானதை வலுவுடையதாகக் காட்ட முனைதல் 9. ஒத்த கருத்துகளை வைத்துக்கொண்டு ஒரு சார்பாகிய முடிவு தருதல் 10. விருப்பின் காரணமாகக் காலத்தை மிக முன்னோக்கிக் கூறல்; வெறுப்பின் காரணமாக மிகப் பின்னுக்குத் தள்ளுதல் போன்ற பல 'பிறழ்வுகள்' கால ஆய்வு என்ற பெயரில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

3. பல ஆய்வுகள் 'நம்பிக்கை' என்னும் அடித்தளத்தில் கட்டப்பட்ட 'ஊக' மாளிகைகளாகவே உள்ளன. 1. அகத்தியர் கதை 2. தொல்காப்பியர் கதைகள், 3. திருவள்ளுவர் தொடர்பான கதை நிகழ்ச்சிகள் 4. புராணச் செய்திகள் 5. சோதிடம் போன்றன பலரின் முழு நம்பிக்கைக்கு உரியனவாகியுள்ளன.

4. ஒரு சிலரின் கருத்துகளை ஆராயாமல் அவற்றை 'வேத வாக்காகக்' கொள்ளும் 'மூட நம்பிக்கைகள்' கால ஆய்வுகளில் பரவலாகவே காணப்படுகின்றன. குறிப்பாக, மேலை நாட்டவர் கருத்து என்றால் அது சரியாகத்தான் இருக்கும் என்னும் உணர்வுடையாரையும் கால ஆய்வுகளில் காண முடிகின்றது.

5. வடமொழி நூல்களிலும் தமிழ்மொழி நூல்களிலும் ஓரிரு ஒப்புமைக் கூறுகளைக் கண்டால் (சில வேளைகளில் ஒப்புமைகள் இருப்பதாகத் திரித்துக் காட்டி), வடமொழியிலிருந்துதான் அவை தமிழ்மொழிக்கு வந்தன எனக் கூறும் சில 'திட்டமிட்ட' போக்குகளும் கால ஆய்வுகளில் காணப்படுகின்றன.

6. தொல்காப்பியர், திருவள்ளுவர் போன்றோரை முதலில் ஏதேனும் ஒரு மதம் என்னும் சிறைக்குள் பூட்டி, அதற்கு மேல் 'காலம்' என்னும் தீர்ப்பு வழங்கும் போக்கையும் கால ஆய்வில் காணமுடிகின்றது.

7. முழுவதுமாக ஆராயாமல், தம்மால் முடிந்த அளவிலான சான்றுகளைக் கொண்டு சில கருத்துகளை 'உறுதியான முடிவு'களாகச் சிலர் தர, பின்னர் அக்கருத்துகளைத் தக்க புள்ளிவிவரங்களோடு வேறு சிலர் மறுக்கும் போக்குகளும் கால ஆய்வுகளில் காணப்படுகின்றன.

8. பொதுவாக, ஒரு நூலின் குறிப்பிட்ட காலம் காண முனைந்த ஆய்வுகள் எல்லாமும் இருவேறு ஊகங்களுக்கிடையில் 'புதியதோர் ஊக்கம்' என்னும் அளவில்தான் அமைந்துள்ளன.

மொழியியல், கல்வெட்டியல், வரலாற்றியல் போன்ற பல்துறைப் பார்வைகள் இன்று கால ஆய்வுகளில் ஊடுருவி வருகின்றன. அதனால் இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலங்களில் இருந்த ஊகங்களும் நம்பிக்கைகளும் விருப்பு வெறுப்புகளும் அண்மைக் காலங்களில் மெல்ல மெல்லக் குறைந்து வருகின்றன.

## காலஆய்வில் குறிப்பிடத் தக்கவர்கள்

1. தாம் சொல்ல வந்த காலத்தை நிறுவுதற்கான கருத்துகளை அளவை முறைப்படி எடுத்துரைக்கும் ஆய்வு நெறிக்குத் தக்க வழிகாட்டியிருப்பவர் திரு. எஸ். வையாபுரியார் அவர்கள்.

2. மாறுபட்ட கருத்துகளை மறுக்கும்போது தக்க சான்றுகளுடன் பக்குவமாக மறுக்கும் ஆய்வு நெறிக்கு வழிகாட்டியிருப்பவர் திரு. க. வெள்ளைவாரணனார் அவர்கள்.

3. தொல்காப்பியம்-சங்கத் தொகை நூல்கள் தொடர்பான இலக்கண வளர்ச்சி பற்றிய ஆய்வுப் போக்கில், தொல்காப்பியர் கூறும் இலக்கணக் கோட்பாடுகள் சில தொல்காப்பியத்திலேயே முரண்பட்டுள்ளன எனக் கூறி ஒரு புதிய திருப்பத்தை உண்டாக்கியவர், திரு. ச. சோமசுந்தர பாரதியார்; இவரைத் தொடர்ந்து விரிவான செய்திகளைத் தந்தவர் டாக்டர் ப. அருணாசலம் அவர்கள்.

4. தமிழக/இந்திய வரலாற்றாசிரியர்கள் தந்த வரலாற்றுச் செய்திகளைத் தமக்குத் துணையாக்கிக் கொண்டு, பழந்தமிழ் இலக்கியங்களின் காலங்களை வரையறுக்க முனைந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்கள்.

5. சோதிட அடிப்படையில் காலத்தைக் கணக்கிட முனைந்தவர்கள் திருவாளர்கள் அ.கிருஷ்ணமூர்த்தி, க.வெ. சீனிவாசன் ஆகியோர்.

6. தமிழர்க்கான ஒரு காலக் கணக்கீட்டிற்குக் (திருவள்ளுவர் ஆண்டு) காலம் வரையறுத்துத் தந்தவர் திரு. மறைமலை அடிகளார் அவர்கள்.

7. பழந்தமிழ் நூல்களின் காலக்கணக்கீட்டில் மிகக் கூடுதலான மேல் எல்லையை (கி.மு. 12,000) எடுத்துக் கூறியவர் திரு. சிதம்பரபுன்னைவனநாதர் அவர்கள்.

8. பல்துறைப் பார்வையில் கால ஆய்வு மேற்கொள்ளப் பெரிதும் தூண்டுதலாக அமைந்தவர்கள் டாக்டர் சோ.ந.கந்தசாமி, டாக்டர் க.ப. அறவாணன் ஆகியோர்.

9. இலக்கண வளர்ச்சி அடிப்படையில் திரு. எஸ். வையாபுரியார் கூறிய கருத்துகளுள் பலவற்றை மொழியியல் அடிப்படையில் தக்க புள்ளி விவரங்களோடு மறுத்தவர் டாக்டர் ச. அகத்தியலிங்கம் அவர்கள்.

10. புறம் 34-ஆம் பாடல் சுட்டும் 'அறம்' என்பது திருக்குறளுக்கு முன் தமிழில் வழங்கப்பட்ட அறநூல் என்பதை உறுதிப்படுத்தியவர் டாக்டர் கு. மோகனராசு அவர்கள்.

## ஆய்வாளர்கள் முன்வைத்துள்ள அடிப்படை முடிவுகள் சில

1. ஆரியர்-திராவிடர் தொடர்பு தமிழகத்தில் தொல்காப்பியருக்கு முன்னரே ஏற்பட்டுள்ளது.

2. அகத்தியர், தொல்காப்பியர், திருவள்ளுவர் தொடர்பான கதைகள் கற்பனைகள்.

3. இரு நூல்களில் காணும் ஒத்த கருத்துகளை மட்டுமே கொண்டு, ஒரு நூல் முந்தியது என்றோ பிந்தியது என்றோ முடிவு கூற முடியாது.

4. தொல்காப்பியம் திருக்குறளுக்கு முற்பட்டது.

5. திருக்குறள் காலத்தின் கீழ் எல்லை சிலம்பும் மேகலையும்.

6 திருவள்ளுவமாலைப் பாடல்களைப் பாடியவர்கள் சங்கப் புலவர்கள் அல்லர்.

7. பழந்தமிழ் நூல்களைத் தொல்காப்பியம், தொகை நூல்கள், திருக்குறள் என முறைப்படுத்தலாம்.

8. புறம் 34-ஆம் பாடல் சுட்டும் 'அறம்' என்பது அப்பெயரில் தமிழில் திருக்குறளுக்கு முன் தோன்றிய ஓர் அறநூல்.

அவற்றுள் ஒன்றிரண்டு மறு ஆய்வுக்குரியனவும் ஆகலாம்.

**தீர்வுகாண வேண்டியவை சில:**

1. தொல்காப்பியத்தில் சங்கத் தொகை நூல்களுக்கு முற்பட்ட இலக்கணக் கூறுகளும் உள; தொகை நூல்களின் கால இலக்கணக் கூறுகளும் உள; பிற்பட்ட இலக்கணக் கூறுகளும் உள.
2. தொல்காப்பியத்தில் காணும் இலக்கண வரையறைகளுக்குத் தொல்காப்பியத்திலேயே முரண்பாடுகள் உள்ளன.
3. சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களின் காலங்கள்.
4. களவியல் உரையாளர் கூறும் முச்சங்கங்கள், கடல்கோள்கள் பற்றிய செய்திகளின் உண்மை நிலை.
5. தமிழில் உள்ள பிறமொழிச் சொற்களும் அவை தமிழில் கலந்த காலங்களும்.
6. சங்க கால அரசர்களின் கால நிரல்
7. சங்க காலப் புலவர்களின் கால நிரல்
8. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களின் மொழி நிலையும் தொடர்பு நிலைக்காலமும்.

**காலஆய்வு மேம்படச் சில வழிகள்:**

1. ஆரியர், திராவிடர் என்னும் பகுப்புணர்வுகள் விலக்கப்பட வேண்டும்;
2. எல்லா விதமான சான்றுகளையும் ஒருங்கிணைத்து ஆய்வு மேற்கொள்ளப்படவேண்டும்.
3. தீர்க்கப்படாதிருக்கும் சிக்கல்களுக்கு நடுநிலை நின்று தீர்வுகள் காணப்பட வேண்டும்.
4. பல்துறை அறிஞர்களையும் ஒருங்கிணைத்த பல்துறை நோக்கிலான ஒருங்கிணைந்த ஆய்வு மேற்கொள்ளப்பட வேண்டும்.
5. ஊகம், நம்பிக்கைகள் போன்றவற்றை விலக்கி அறிவியல் வழிப்பட்டனவாகக் கால ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

# UNIVERSITY OF MADRAS
## PUBLICATIONS DIVISION

| Sl. No. | TITLE | AUTHOR/EDITOR | RATE Rs. |
|---|---|---|---|
| 1. | Deciphering the Indus Script | Dr. S. Gurumurthy | 120/- |
| 2. | Facets of Saiva Siddhanta | Dr. P. Krishnan | 100/- |
| 3. | Journal of the Madras University Section - A Humanities (Volume LXIV of April 2000) | Dr. D. Amarchand | 65/- |
| 4. | Indian Philosophical Annual (Volume 22) | R. Gopalakrishnan<br>S. Panneerselvam<br>Godabarisha Mishra | 150/- |
| 5. | Crime in Railways | R. Thilagaraj | 90/- |
| 6. | A Comparative Grammar of the Dravidian or South-Indian Family of Languages | Robert Caldwell | 160/- (Ordinary)<br>200/- (Deluxe) |
| 7. | The Colas | K.A. Nilakanta Sastri | 250/- |
| 8. | Foreign Notices of South India | K.A. Nilakanta Sastri | 165/- |
| 9. | Annals of Oriental Research (Volume XXXIII) | Prof. Pon. Kothandaraman | 75/- |
| 10. | Aspects of the Process of Inscription of a National Cultural Ideology in Suharto's Orba Regime: Puristic Islam and Pancasila | Dr. Chitra Sivakumar | 40/- |
| 11. | Sri Lanka, India and the Tamil Liberation Struggle | Dr. Chitra Sivakumar | 40/- |
| 12. | Tribal Ecology and Development | V. Karuppaiyan<br>K. Parimurugan | 100/- |
| 13. | We Dare the Waters | P.T. Mathew | 225/- |
| 14. | New Catalogus Catalogorum (Volume Fourteen) | Dr. N. Veezhinathan<br>Dr. (Mrs.) E.R. Rama Bai | 165/- |
| 15. | Social and Economic Dimensions of Caste Organisations in South Indian States | Dr. R. Balasubramanian | 200/- |
| 16. | மகாகவி சுப்பிரமணிய பாரதியார் பாடல்கள் (இரு இசைப் பேழைகளுடன் இணைக்கப்பட்டது) | Dr. S. சீதா | 200/- |
| 17. | சிதம்பரம் இராமலிங்கரின் சித்தி வளாகம் | வை. இரத்தின சபாபதி | 65/- |
| 18. | திருஞான சம்பந்தர் ஓர் ஆய்வு - முதல் பகுதி | வை. இரத்தின சபாபதி | 65/- |
| 19. | திருஞான சம்பந்தர் ஓர் ஆய்வு - இரண்டாம் பகுதி | வை. இரத்தின சபாபதி | 65/- |
| 20. | புறத்திரட்டு | ச. வையாபுரிப்பிள்ளை | 160/- |